# இந்திய வாரிசுரிமைச் சட்டம்

[INDIAN SUCCESSION ACT]
1925

எ. பரிபூரணம்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க. வெ.) வரிசை எண் — 840

# இந்திய வாரிசுரிமைச் சட்டம்—1925


ஆசிரியர்

எ. பரிபூரணம், எம்.ஏ., எம்.எல்.,
துணை முதல்வர்,
மதுரைச் சட்டக் கல்லூரி,
மதுரை.





தமிழ்நாட்டுப்
பாடநூல் நிறுவனம்
கல்லூரி சாலை, சென்னை - 600 006.

First Edition — March, 1979
Reprint — September, 1988

Number of Copies — 2000

T.N.T.B.S. (C.P.) No. 840



# INDIAN SUCCESSION ACT—1925

E. PARIPURANAM

**Price : Rs. 8-90**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

Printed by :
NABS TRADERS,
93, Pedariar Koil Street,
Madras-600001.

ஆ. பத்மநாபன்
ஆளுநரின் ஆலோசகர்
தமிழ்நாடு.

புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை-600 009.

நாள் : 16-08-1988.

# முன்னுரை

தமிழ்நாடு பாடநூல் நிறுவனம், மைய அரசு, 1968-69ஆம் ஆண்டு துவக்கம் அங்கீகரித்த திட்டத்தின்கீழ், ஆண்டுதோறும் பாடநூல்களை மாணவர்கள் பயனுறத்தக்க வகையில் தமிழிலேயே அச்சிட்டு வெளியிட்டு வருவது மகிழ்ச்சிதரத்தக்க செய்தியாகும்.

மாணவர்களின் ஆர்வம், கல்லூரி மற்றும் பள்ளி ஆசிரியர் களின் ஊக்கம், பிற துறைகளில் பணிபுரிவோரின் ஒத்துழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த ஆசிரியர்களின் தொண்டு ஆகியவற்றால் நம்மிடையே ஊக்க மும், மனநிறைவும் தரத்தக்க வகையில் இத்திட்டம் செயல் புரிந்து வருகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக அரங்கில் முன்நிற்க வேண்டும் என்ற கருத்திற்கொப்ப, தமிழ்நாடு பாடநூல் நிறுவனம் தொடர்ச்சியாகப் பாடநூல்களைத் தமிழிலேயே வெளியிட்டு, மாணவர்கள் சிறப்புற பயனடையத்தக்க வகையில் தன் பணியினை மென்மேலும் செவ்வனே செய்யுமென்ற நம்பிக்கை எல்லோருக்குமுண்டு.

ஆ. பத்மநாபன்
ஆளுநரின் ஆலோசகர்

# முகவுரை

## இந்திய வாரிசுரிமைச் சட்டம்—1925

இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925ஆம் ஆண்டு உருவாக்கப் பட்டு அமலாக்கப்பட்டது. ஆங்கில உயில்வழி வாரிசுரிமைச் சட்டத்தினைத் தழுவி, இந்தியாவின் சூழ்நிலைக்கு ஏற்ப மாற்றி உருவாக்கப்பட்டது. பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்த உயில்இல் வழி, உயில்வழி வாரிசுரிமை அனைத்தையும் ஒன்றுசேர்த்து உருவாக்கப்பட்டதென இச் சட்டத்தின் முகவுரையே தெளிவு படுத்துகின்றது. இச் சட்டம் உருவாக்குவதற்குமுன் ஒவ்வொரு வகுப்பிற்குமெனப் பல வாரிசுரிமைச் சட்டங்களிருந்தன. ஆகையால், அப்போது சரியான சட்டம் எதுவெனத் துணிய வியலாதிருந்தது.

**ஒன்றுபடுத்தப்பட்ட சட்டங்கள்**

1. 1865ஆம் ஆண்டின் பார்சிகளின் வாரிசுரிமைச் சட்டம் XXI.
2. 1870ஆம் ஆண்டின் இந்துக்கள் உயில்வழிச் சட்டம் XII.
3. உயில்மெய்ப்பிதழ் மற்றும் திருவாகச் சட்டம் (Probate and Administration Act).
4. 1881ஆம் ஆண்டின் மாநிலத்தின் சார்பாக அனுப்பப் படுபவர்களின் சட்டம்.

இச் சட்டம் இந்தியாவை வாழ்வகமாகக் கொண்ட ஐரோப் பியருக்கும், ஆங்கிலோ இந்தியருக்கும், கிழக்கிந்தியருக்கும், யூத ருக்கும், ஆர்மீனியருக்கும், இந்தியக் கிறித்தவர்கட்கும், பார்சி கட்கும், இந்து சமயத்திலிருந்து கிறிஸ்தவ சமயத்திற்கு மாறினவர்களுக்கும், தனித் திருமணச் சட்டத்தின்படி திருமணம் செய்துகொண்டவர்களுக்கும் பயன்படும். மேற்சொன்ன வர்களை மட்டுமே இச் சட்டம் கட்டுப்படுத்தும். சில பிரிவுகள் மட்டும் இந்துக்களையும், மகமதியரையும், சீக்கியரையும், ஜைனரையும், புத்தரையும் கட்டுப்படுத்தா.

# பொருளடக்கம்

# 1. வாழ்வகம்

## (Domicile)

வாழ்வகமென்னும் சொல் இந்திய வாரிசுரிமைச் சட்டத்தில் எங்கும் விளக்கப்படவில்லை. இச் சொல்லுக்குப் பொருள் கொள்வது மிகக் கடினமென்பது தனி நாட்டிடைச் சட்ட வல்லுநர்கள் கருத்து. ஆல்ஸ்பரியின் 6ஆவது புத்தகம் 198ஆம் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள பொருள், 'ஒருவன் தன்னுடைய நிரந்தரக் குடியிருப்பைத் தன்னிச்சையாகவோ சட்டத்தின் வாயிலாகவோ ஒரு நாட்டில் வைத்திருப்பானேயானால் அதுவே அவனின் வாழ்வகமாகும்' என்பதாகும். சுருங்கக் கூறின், சமுதாயத்தில் ஒரு மனிதனின் தகுதியை நிருணயிக்கும்பொருட்டு நிரந்தரமாகக் கொண்டுள்ள அவனது வீடு அமைந்துள்ள நாட்டினையே அவனது வாழ்வகமெனக் கூறலாம்.

தலைமை நீதிபதி மகாஜன் கூறுவதாவது: ஆங்கிலச் சட்டப்படி வாழ்வகத்திற்கு இரு மூலக்கூறுகள் தேவை. முதலாவது ஒரு குறிப்பிட்ட வகையான குடியிருப்பு. இரண்டாவதாக, ஒரு குறிப்பிட்ட வகையான நோக்கம் அல்லது எண்ணம். நிரந்தரமாகக் குடியிருக்கும் எண்ணமும், அவ்வெண்ணத்தினைச் செயல்படுத்துதலும் அவசியம். குடியிருப்பு இடைவிடாததாய் இருக்கவேண்டுமென்பதில்லை. ஆனால் தாற்காலிகமாக இல்லாமல் முடிவின்றியிருத்தல் வேண்டும். ஒரு நாட்டில் கொண்டுள்ள குடியிருப்பு அங்கேயே என்றுமிருக்கக் கொண்டுள்ள எண்ணமாக இருத்தல் வேண்டும். ஒரு மனிதனுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட குடியிருப்பு இருப்பின் அவைகளில் எந்த இடத்தில் அவனது மனைவி மற்றும் குடும்பத்தினை இருக்க வைக்கிறானோ, அதுவேயாகும். ஒருவன் மனைவியும் மக்களும் குடியிருக்குமிடமே ஒருவனின் வாழ்வகம் என்பது மரபு. நாட்டுரிமையும் வாழ்வகமும் தனி நாட்டிடைச் சட்டத்தின் முற்றிலும் மாறுபட்ட கருத்துகளாகும். வாழ்வகமின்றி ஒரு மனிதனும் இருக்க இயலாது. ஏனெனில், அவன் இறந்தால் அவனது சொத்துகளை எந்தச் சட்டப்படி வாரிசுகட்குக் கொடுக்க வேண்டுமெனத் தீர்மானிக்க வாழ்வகம் இன்றியமையாதது. வாழ்வகத்தின் அடிப்படையைக்கொண்டு

இறந்தவரின் சொத்துகளின் வாரிசுரிமையை நிருணயம் செய்தல் வேண்டும்.

இறந்தவரின் இந்தியாவிலுள்ள அசையாச் சொத்துகளின் வாரிசுரிமை அவர் இறக்கும்போது கொண்டிருந்த வாழ்வகத்தினைக் கருதாமல் இந்திய நாட்டின் சட்டப்படி செயல்படுத்தப் படும். இறந்தவரின் அசையும் சொத்துகளின் வாரிசுரிமை, அவர் இறக்கும்போது எந்த நாட்டின் வாழ்வகத்தைக் கொண்டிருந்தாரோ அந்த நாட்டின் சட்டப்படி செயல்படுத்தப்படும். வாரிசு உரிமையைச் செயல்படுத்த ஒருவரின் வாழ்வகம் நிருணயம் செய்யப்படுவது அவசியம்.

உதாரணம் :

1. இந்தியாவை வாழ்வகமாகக் கொண்ட A என்பவர் அசையும் சொத்துகளை ஃபிரான்சு நாட்டிலும் இங்கிலாந்து நாட்டிலும், அசையா அசையும் என்ற இருவகைச் சொத்துகளையும் இந்தியாவிலும் விட்டுவிட்டு, ஃபிரான்சு நாட்டில் இறந்து போகிறார். அனைத்துச் சொத்துகளின் வாரிசுரிமை இந்திய நாட்டின் சட்டப்படி செயல்படுத்தப்படும்.

2. ஃபிரான்சு நாட்டைத் தம் வாழ்வகமாகக் கொண்ட A என்ற ஆங்கிலேயர், இந்தியாவிலுள்ள அசையா, அசையும் என்னும் இருவகைச் சொத்துகளையும் விட்டுவிட்டு இந்தியாவில் இறந்துபோகிறார். அசையும் சொத்துகளின் வாரிசுரிமை ஃபிரெஞ்சு நாட்டின் சட்டப்படியும், அசையாச் சொத்துகளின் வாரிசுரிமை இந்திய நாட்டின் சட்டப்படியும் செயல்படுத்தப்படும். இத்தத்துவம் தனி நாட்டிடைச் சட்டத்தை அடிப்படையாகக் கொண்டது.

## வாழ்வக வகைகள்

வாழ்வகம் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்படலாம் :

(1) பிறப்பின் மூலமாகப் பெற்ற வாழ்வகம். இதனை முதல் நிலை வாழ்வகம் அல்லது தோற்ற வாழ்வகம் (Domicile of origin) எனவும் கூறலாம் (பிரிவுகள் 7 மற்றும் 8).

(2) தேர்ந்தெடுத்த வாழ்வகம் (பிரிவுகள் 10, 11, 12, மற்றும் 13).

(3) சட்டத்தின் வாயிலாகப் பெற்ற வாழ்வகம்.

வாழ்வகம் மூன்று வகையெனினும் ஒருவர் ஒரே சமயத்தில் ஒரு வாழ்வகத்தினைத்தான் உடையவராக இருக்க முடியும் (பிரிவு 6).

**அசையாச் சொத்துகள் என்றால் என்ன?** நிலமும், நிலத்தினின்று பெறும் பயனும், பூமியுடன் இணைக்கப்பட்ட பொருள்களும் அல்லது பூமியுடன் இணைக்கப்பட்ட பொருள்களோடு நிரந்தரமாகப் பிணைக்கப்பட்ட பொருள்களுமாகச் சேர்ந்து அசையாச் சொத்துகள் ஆகும் என 1897ஆம் ஆண்டுப் 'பொது வகை முறைகள்' சட்டம் கூறுகிறது. 1882 ஆம் ஆண்டுச் சொத்து மாற்றுச் சட்டம் நிலத்தின்மீது நிற்கும் மரங்களும், வளரும் பயிரும், புல்லும் அசையாச் சொத்துகள் அல்ல எனக் கூறுகிறது. 1908ஆம் ஆண்டு இந்தியப் பத்திரப் பதிவுச் சட்டம் நிலமும் கட்டடங்களும், தலைமுறை ஊதியமும், வழி, வெளிச்சம், மீன் பிடித்தல், படகுவிடுதல் ஆகிய நிலத்தின்பால் ஏற்படும் பயன்களாகிய உரிமைகளும், நிற்கும் மரங்களும், பயிரும், புல்லும் தவிரப் பூமியில் ஊன்றப் பெற்ற அனைத்தும் அசையாச் சொத்துகளாகும் எனக் கூறுகிறது.

## 1. முதல்நிலை வாழ்வகம் (Domicile of origin)

'ஒருவன் பிறந்தபொழுதினின்றே வாழ்வகத்தையுடையவன் என ஊகிக்கப்படுகின்றான். அவ்வாழ்வகமே அவனின் முதல்நிலை வாழ்வகமாகும். பிறந்தபொழுதினின்று பெற்ற முதல்நிலை வாழ்வகம் அவன் பிறந்த நாட்டினைச் சேர்ந்ததாகவோ, அவனது பெற்றோர் வாழும் நாட்டினைச் சேர்ந்ததாகவோ, தந்தையின் இனவழி நாட்டினைச் சேர்ந்ததாகவோ இருக்க வேண்டியதில்லை. வாழ்வகமின்றி ஒரு மனிதனும் இருக்கவியலாது. இதனை வலியுறுத்தவே, முறைப்படி பிறந்த குழந்தையாயின் தந்தையின் வாழ்வகத்தையும், முறைதவறிப் பிறந்த குழந்தையாயின் தாயின் வாழ்வகத்தையும் பிறந்தவுடனேயே ஒவ்வொரு மனிதனுக்கும் சட்டம் உடைமையாக்குகிறது, என உட்னி எ. உட்னி என்னும் வழக்கில் வெஸ்டர்பரி பிரபு கூறுகிறார். ஒருவரின் பிறப்பிடமும் வாழ்வகமும் ஒரே பொருளையுடைய வெவ்வேறு சொற்களல்ல; இரண்டும் வெவ்வேறு கருத்துகளுடைய சொற்களாகும். முதலாவது சொல் அவனது பிறந்த இடத்தையும், இரண்டாவது சொல் அவனோ, அவனது தந்தையோ வாழ்வது எனக் குறிப்பதாகும். எடுத்துக்காட்டாக இங்கிலாந்தைத் தம் வாழ்வகமாகக் கொண்ட ஒருவருக்கு இந்தியாவிலிருக்கும்போது குழந்தை பிறந்திருக்கலாம். அக் குழந்தைக்கு வாழ்வகமாகத் தந்தையின் வாழ்வகமாகிய இங்கிலாந்து நாட்டைத்தான் கூறவியலுமேயன்றி, பிறந்த

இடமாகிய இந்தியாவைக் கூறவியலாது. இங்கிலாந்தை வாழ்வகமாகக் கொண்ட ஒருவர் வேற்று நாட்டில் பயணம் செய்யும் போது அவருக்கு அந்நாட்டில் குழந்தை பிறந்தால், அக் குழந்தை பிறந்த நாட்டின் வாழ்வகத்தையல்லாமல் தந்தையின் வாழ்வகத்தைப் பெறும். முதல்நிலை வாழ்வகமென்பது சுய முயற்சியின்றி, சட்டபூர்வமாக, தானாக ஒருவரை வந்தடைவதொன்றாகும். சட்டவாயிலாக நிருணயிக்கப்பட்ட முதல்நிலை வாழ்வகம் ஒருவருடன் ஒட்டிக்கொண்டு, அதற்குப் பதிலாகத் தேர்ந்தெடுத்த வாழ்வகத்தினை அடையும்வரை அவரைத் தொற்றிக்கொண்டிருக்கும். தேர்ந்தெடுத்த வாழ்வகத்தைப் பெற்றவுடன் முதல் நிலை வாழ்வகம் உரியவரிலா (Abeyance) நிலையையடையும் அல்லது நிறுத்திவைக்கப்படும். அதனை முற்றிலுமாக அழித்து விட இயலாது. தேர்ந்தெடுத்த வாழ்வகம் கைவிடப்படும்போது முதல்நிலை வாழ்வகம், மீண்டெழுகிறது. தந்தை இறந்தபின் பிறக்கும் குழந்தையின் வாழ்வகம், தந்தை இறக்குமுன் எந் நாட்டின் வாழ்வகத்தை யுடையவராக இருந்தாரோ, அதனைச் சாரும். முறைப்படி திருமணமாகாதவர்களுக்குப் பிறந்த குழந்தையை அதன் பெற்றோர்கள் திரும்ப முறைப்படி திருமணம் செய்துகொள்வதன் மூலம் முறைமையாக்கலாம். 'மறுமணவழி முறைமையாக்கல்' (Legitimation per subsequence Matrimonimum) என்னும் கொள்கைவழி முறைமையாக்கலுக்கு ஆங்கிலேய நீதிமன்றங்கள் ஏற்பிசைவு அளிக்கின்றன.

பிறிதொரு வாழ்வகத்தையடையும் வரை முதல்நிலை வாழ்வகம் ஒருவனைத் தொடரும். **சங்கரன் கோவிந்தன் எ. லட்சுமி பாரதி** (AIR 1964 Ker. 244). 1920 ஆம் ஆண்டு தம்முடைய மருத்துவ மேற்படிப்பிற்காக டாக்டர் கிருஷ்ணன் என்பவர் இங்கிலாந்து சென்றார். அங்கேயே அவர் 30 ஆண்டுகள் வாழ்ந்தார். அசையா, அசையும் சொத்துகளை விட்டு 1950ஆம் ஆண்டு இங்கிலாந்தில் மரணமடைந்தார். இங்கிலாந்து சென்றதிலிருந்து அவர் இந்தியாவுக்கு வரவேயில்லை. எனினும் தம்முடைய ஆயுட் காப்பீட்டுத் தொகை முழுமையடைந்தவுடனும், தாம் இந்தியாவிற்குத் திரும்பி வந்தவுடன் வசதியான வாழ்க்கை நடத்துவதற்குப் போதுமான பணம் சேர்ந்தவுடனும் இந்தியாவிற்குத் திரும்ப வேண்டுமென்ற எண்ணம் அவருக்கிருந்தது என்பது அவரது கடிதத்தின் வாயிலாகத் தெரிந்தது. டாக்டர் கிருஷ்ணன் தம்முடைய முதல்நிலை வாழ்வகத்தை விட்டுவிடத் தீர்மானிக்கவில்லை. ஆகையால், அவர் தேர்ந்தெடுத்த வாழ்வகத்தினைப் பெறவில்லை எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. முதல்நிலை வாழ்வகத்தினை மாற்றிக்கொண்டதாகக் கூறுபவர் அதற்கான

போதிய ஆதாரங்களைக் கொண்டுவர வேண்டும். ஒருவன் தன்னுடைய முந்திய வாழ்வகத்தைக் கைவிடும் ஐயப்பாட்டிற்கிடமில்லாத தெளிவான தன்னுடைய நோக்கத்தினைத் தெரிவிக்காமல் ஒரு புதிய வாழ்வகத்தினையடைய இயலாது என 'லாடர்டேல் பீரேஜ் வழக்கு' என்னும் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது. தன்னுடைய உறைவிடத்தினை மாற்றிக்கொள்வதன் மூலம் சட்டபூர்வமாக வாழ்வகத்தை மாற்றிக்கொள்ள முடியாது.

## 2. தேர்ந்தெடுத்த வாழ்வகம் (Domicile of choice)

ஒருவர் தம்முடைய முதல்நிலை வாழ்வக நாடல்லாத நாட்டில் சென்று நிரந்தமாகக் குடியேறி, அந் நாட்டினைக் கால வரையறையின்றித் தாயகமாகக் கொள்ளும் நோக்கத்தோடு அங்கு வசிப்பாரேயானால், அவர் தேர்ந்தெடுத்த வாழ்வகத்தினைப் பெறுகிறார். தொடர்ந்து வசிப்பதோடு அங்கு நிரந்தரமாகக் குடியிருக்கும் நோக்கமும் இருக்கவேண்டும். எனவே, செயலும் எண்ணமும் ஒருங்கிணைந்தால்தான் தேர்ந்தெடுத்த வாழ்வகத்தினையடைய முடியும். செயல் என்பது குடியிருத்தல்; எண்ணமென்பது குடியிருத்தலை நிரந்தரமாக்கல். தேர்ந்தெடுத்த குடியிருப்பு ஒருவரின் உருவாக்கல். ஒருவர் தேர்ந்தெடுத்த வாழ்வகத்தினைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால் முதல் நிலை வாழ்வகம் தாற்காலிகமாகச் செயலற்று நிற்கும்; அது முற்றிலுமாக ஒழிந்துவிடாது.

நோக்கத்தினைப்பற்றி (Animus) டேய்சி கூறுவதாவது: 'நோக்கம் தேர்ந்தெடுக்கின்றதாக இருக்கவேண்டும்; நிரந்தரமாக அல்லது காலவரையறையின்றிக் குடியிருக்கும் நோக்கமாக இருத்தல் வேண்டும்; முந்தின வாழ்வகத்தினை நிரந்தரமாகக் கைவிடும் நோக்கமாயிருத்தல் வேண்டும்'.

ஒருவர் தம்முடைய முந்தின நாட்டின் வாழ்வகத்தினை விட்டுப் பிறிதொரு நாட்டில் சென்று நிரந்தரமாகக் குடியிருக்கும் எண்ணத்தோடு வசிக்க வேண்டும். அப்போதுதான் அவர் புதிய வாழ்வகத்தை அடைகிறார். ஒரு நாட்டில் சென்று நீண்ட நாள்களாக வசித்தல் மட்டும் அந் நாட்டின் வாழ்வகத்தினைப் பெறப் போதாது. வசிப்பதோடுகூட அதனை நிரந்தரமாக்கிக் கொள்ள எண்ணமும் வேண்டும் எண்ணம் செயல்படுத்தப்பட வேண்டும். எண்ணம் வசித்தல் மூலம் செயல்படுத்தப்படுகிறது. எண்ணமும் செயலும் ஒருங்கே அமையப்பெற வேண்டும்.

## ஜோப் எ. ஊட்

ஸ்காட்லாந்து நாட்டின் முதல்நிலை வாழ்வகத்தினையுடைய ஒருவர் கல்கத்தாவில் 25 ஆண்டு காலம் வசித்து வந்தார். அந்த 25 ஆண்டுகளுக்குள் ஒரே ஒரு முறை ஸ்காட்லாந்து சென்று ஓராண்டு தங்கித் திரும்பினார். முடிவாக ஸ்காட்லாந்துக்குத் திரும்பிவிட வேண்டுமென்ற தமது முடிவினைத் தெரிவித்தார் என்ற உண்மை, ஆதாரங்கள் மூலம் அறியப்பட்டது. அவர் தமது ஸ்காட்லாந்து நாட்டின் முதல்நிலை வாழ்வகத்தினை முறித்துக் கொள்ளவில்லை எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

## தாமஸ் எட்மாண்ட் எ. ஹக் கரே மார்கான்

1854 ஆம் ஆண்டு ஆங்கிலேயப் பெற்றோருக்கு இங்கிலாந்தில் பிறந்த A என்பவர், 1880ஆம் ஆண்டு பாதிரியாக வேலைசெய்ய இந்தியாவிற்கு வந்தார். 1933ஆம் ஆண்டு மரணமடையும் வரை 52 ஆண்டுகட்கு மேலாகத் தொடர்ந்து கல்கத்தாவில் வாழ்ந்துவந்தார். சமய, அறப் பயன்களுக்குக் கொடையாகத் தம்முடைய சொத்துகளை உயில்வழியாக விட்டுச் சென் றிருந்தார். அவர் இறக்கும்போது இந்தியாவை வாழ்வகமாக உடையவராக இருந்திருந்தால், இந்திய வாரிசுரிமைச் சட்டம் பிரிவு 118-ன்படி அவ்வுயில் செல்லாது. உயிலினையியற்றியவர் நீண்ட நாள்களாக இந்தியாவில் இருந்தவர்; தம்முடைய சொந்த வாழ்வகத்திற்குப் போக வேண்டுமென்ற எண்ணம் இல்லாதவர். தம்முடைய சொத்துகளை இங்கேயே சமய அறப் பயன்களுக்கு எழுதிவைத்தல் மூலம் அவர் இந்தியாவைத் தமது வாழ்வகமாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். ஆகையால், அவர் இந்திய வாரிசுரிமைச் சட்டத்தின்கீழ் வருகிறார். அதன்படி அவர் இயற்றிய உயில் செல்லாது எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

அலுவனிமித்தமாகவோ அரசாங்க அலுவனிமித்தமாகவோ அந்நிய நாட்டினர் இந்தியாவில் வாழ்வதைக் கொண்டு அவர்கள் இந்தியாவின் வாழ்வகத்தை அடைந்தார்கள் எனக் கருத முடியாது. இந்தியாவைத் தேர்ந்தெடுத்த வாழ்வகமாகக் கொள்ள ஒரு தனி முறையுண்டு. பிரிவு 11-ல் அந்தத் தனி முறைமை விளக்கப்பட்டுள்ளது. இந்தியாவைத் தேர்ந்தெடுத்த வாழ்வகமாகப் பெற விரும்பும் அந்நிய நாட்டினர், இந்தியாவில் ஓராண்டு காலம் வாழ்ந்த பிறகு, தமது விளம்பலைத் (Declaration) தமது கைப்பட எழுத்தில் வரைந்து, அவ் ஆவணத்தை அதற்கெனச் சிறப்பாக ஏற்படுத்தப்பட்ட மாநில அரசு அலுவலகத்தில் ஒப்படைக்க வேண்டும். அதாவது, இந்தியாவைத் தேர்ந்

தெடுத்த வாழ்வகமாகக் கொள்ள மிக அவசியமான இரு தேவைகள் உண்டு. முதலாவது தமது கையினாலேயே எழுதிய எழுத்தின் மூலமான விளம்பலும், இரண்டாவதாக விளம்பலைச் செய்யும் நாளினின்று உடன் முன்னதாக ஓராண்டு காலம் இந்தியாவில் குடியிருத்தல் ஆகிய இரண்டு தேவைகளும், தேர்ந் தெடுத்த வாழ்வகத்திற்குத் தேவையான ஐயப்பாடில்லாத எண்ணம், மாறாத அல்லது நிரந்தரக் குடியிருப்பு எனும் இரு மூலக்கூறுகளுக்கு இணையாக உள்ளன.

**தேர்ந்தெடுத்த வாழ்வகத்தினைப் பெற யாரால் இயலாது?** (பிரிவு 12). ஒரு நாட்டின் தூதுவரோ (Ambassador), கான்சலோ (நாடு கடந்த வணிக நலக் காவலர்) தமது அலுவல் நிமித்தமாக ஒரு நாட்டில் வாழ்வதால் அந் நாட்டின் வாழ்வகத்தைப் பெற இயலாது. அவர்களோடு உடன்சென்று அந்நிய நாட்டில் வாழும் அவர்களின் குடும்பத்ினரும், பணியாள்களும்கூடப் புதிய வாழ் வகத்தைப் பெறவியலாது. காரணமென்னவெனில், இவர்களுக்கு அந்த அந்நிய நாட்டினைத் தங்கள் தாயகமாகக் கொள்ளும் எண்ணம் கிடையாது. அந்நிய நாட்டினைத் தம் வாழ்வகமாகக் கொண்டு வாழும் ஒருவர் தூதுவராகவோ கான்சலாகவோ இந்த நாட்டில் நியமிக்கப்பட்டால், அந்தப் பொறுப்பினை ஏற்பதால் அவர் தமது வாழ்வகத்தினை இழக்கமாட்டார் என சார்ப் எ. கிரிஸ்பின் என்ற வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது.

முந்தின வாழ்வகத்தினைத் திரும்ப அடையும்வரை புதிய வாழ்வகம் ஒருவரைத் தொடரும் அல்லது மற்றுமொரு புதிய வாழ்வகத்தினை அடையும்வரை புதிய வாழ்வகம் ஒருவரைத் தொடரும் (பிரிவு 13).

**வயதுவராதவர் (Minor) வாழ்வகம்** (பிரிவு 14) : பெற்றோரின் வாழ்வகமே வயதுவராதவரின் முதல்நிலை வாழ்வகமாகும். முறைப்படி திருமணமானவர்களுக்குப் பிறந்த குழந்தை, தன் தந்தையின் வாழ்வகத்தைத் தனது முதல்நிலை வாழ்வகமாகக் கொள்ளும். குழந்தையின் பிறப்பிற்குப் பின் தந்தை தமது வாழ் வகத்தை மாற்றிக்கொள்வாரேயாகில் அது குழந்தையின் வாழ்வகத்தையும் பாதித்து மாற்றியமைக்கும். தாயின் வாழ்வக மாறுதல் இக் குழந்தையின் வாழ்வகத்தைப் பாதிக்காது. முறைப் படி பிறந்த குழந்தை தன் தாயின் வாழ்வகத்தைத் தனது முதல் நிலை வாழ்வகமாகக் கொள்ளும். தாயின் வாழ்வக மாற்றம் இக் குழந்தையின் வாழ்வகத்தைப் பாதித்து மாற்றும். தந்தை (Putative father)யென்று எண்ணப்பட்டவர் வாழ்வக மாறுதல், இக் குழந்தையின் வாழ்வகத்தினைப் பாதிக்காது. இதனைத்

தெளிவுபடுத்தத்தான் பிரிவு 14-ன் பகுதியில் பெற்றோரிடமிருந்து பெற்ற முதல்நிலை வாழ்வகம் எனக் குறிப்பிடப்படுகிறது (Domicile of the parents from whom he derived his domicile of origin).

திருமணம் அமலில் இருக்கும்போது பிறந்த ஒவ்வொரு குழந்தையும் லெஜிடிமெட் முறைப்படி பிறந்த குழந்தை எனக் கருதப்படும். 'அதேபோல் கணவன் இறந்து ஒன்பது மாதங்களுக்குள் பிறக்கும் குழந்தையும்' லெஜிடிமெட் குழந்தை எனக் கருதப்படும்.

பிரிவு 14-க்கு விதிவிலக்கும் உண்டு. அது யாதெனில், அந்த வயது வராதவருக்குத் திருமணமாகியிருந்தாலும், அல்லது அரசு பணியில் அலுவலராகவோ பணியாளராகவோ எதையும் ஏற்றிருந்தால் அல்லது பெற்றோரின் அனுமதியின்பேரில் தனிப்பட்ட வாணிபம் எதையும் நிறுவியிருந்தாலும், அவருடைய வாழ்வகம் பெற்றோர் தமது வாழ்வகத்தினை மாற்றிக்கொள்ளும்போது மாறுதலின்றியிருக்கும். இதன் அடிப்படை யாதெனில் திருமணத்தின் மூலம் பெற்றோரின் பராமரிப்பிலிருந்து பிரித்தெடுக்கப்பட்டு மற்றொருவரோடு இணைக்கப்படுகிறார். இதன் மூலம் வயதுவராத ஒருவர் எல்லாச் செயலிலும் தனி மனிதனாக அல்லது சுதந்தரமுள்ள ஒருவராகக் (Sui-Juris) கருதப்படுகிறார். பெற்றோர் தங்கள் வாழ்வகத்தினை மாற்றுவது திருமணமான வயதுவராத ஒருவரின் வாழ்வகத்தினைப் பாதிக்க அனுமதித்தால், அது உடன் திருமணத் தம்பதியின் வாழ்வகத்தினையும் பாதிக்கும் என்பதே.

தனி வணிகத்தில் ஈடுபட்டிருத்தல் என்பது அவர் தம்மைப் பாதுகாத்துக்கொள்ள முடியும். மேலும், பெற்றோரின் பாதுகாப்பிலிருந்து விடுபட்டவர் எனப் பொருள்படும். தந்தையின் வணிகத்தில் உடன் உதவிக்கு இருந்தால் தந்தையின் வாழ்வகம் மாறும்போது தனயனின் வாழ்வகமும் மாறும். காரணம் தனயன் வணிகத்திலீடுபடவில்லை யென்பதே.

வயதுவராதவர் தமது இளம் பிராயத்தில் அல்லது தனி மனிதனாக இயங்கும் தகுதி பெறும்வரையில் சுயமுயற்சியால் தம்முடைய புதியதொரு வாழ்வகத்தினைப் பெறவியலாது. பிரிவு 15-ன்படி திருமணத்தின்மூலம் ஒரு மங்கை தனது கணவனின் வாழ்வகத்தினையடைகிறாள். ஆனால், திருமணமான வயது வராத சிறுமி தன்னுடைய பெற்றோரின் வாழ்வகத்தினையே, வயது வரும்வரை உடையவளாக உள்ளாள்.

### 3. சட்டத்தின் வாயிலாகப் பெற்ற வாழ்வகம் [Domicile by the operation of law (Section 14 to 18)]

திருமணத்தில் ஈடுபடும்போது வேற்று வாழ்வகத்தினையுடைய ஒரு மங்கை தன் கணவனின் வாழ்வகத்தைப் பெறுகிறாள் (பிரிவு 15). மனைவி கணவனின் வாழ்வகத்தினைப் பெறுவதே சட்டத்தின்வழிப் பெற்ற வாழ்வகமாகும். கணவனுடனிருந்து வாழவேண்டுமென்ற மனைவியின் கடமையைச் சார்ந்ததே இத்தத்துவம். விழலான திருமணம், தவிர்தகு திருமணம் ஆகியவற்றின் விளைவுகளைப்பற்றி இச் சட்டத்தில் ஏதும் கூறப்படவில்லை. தவிர்தகு திருமணம் தம்பதிகளில் ஒருவர் அதனைத் தவிர்க்கும் வரை திருமணம் செல்லத்தக்கது. அதுவரை தம்பதிகள் இச் சட்டத்தின்கீழ் இருப்பார்கள். அதாவது, கணவனோ மனைவியோ திருமணத்தைத் தவிர்க்கும் வரை கணவனின் வாழ்வகமே மனைவியின் வாழ்வகமாகும். விழலான திருமணம் முதலிலிருந்தே திருமணமன்று. அதனால் 'மனைவியின்' வாழ்வகம், கணவனின் வாழ்வகத்தினால் பாதிக்கப்படுவதில்லை.

திருமணத்தின் மூலம் கணவனின் வாழ்வகத்தினைப் பெற்ற ஒரு பெண், விதவையானவுடன் அதனை இழந்து தனது முந்தைய வாழ்வகத்தினைப் பெறுவதில்லை. அதாவது, விதவையான பிறகும் கணவனின் வாழ்வகமே மனைவியின் வாழ்வகமாகும். ஆனால் அவள் அதனை விடுத்துப் புதியதொரு வாழ்வகத்தினை விரும்பித் தேர்ந்தெடுக்கலாம்.

### மைலாத்தி அண்ணி எ. சுப்பராய முதலியார்
### (24 Madras 650)

(1) ஃபிரெஞ்சு இந்தியாவை வாழ்வகமாகக் கொண்ட ஓர் இந்து விதவை, கணவனின் சொத்தினைப் 'பின்னுரிமை' முறைப்படி முழுச் சொந்தக்காரராக அடைந்தார். பிறகு பிரிட்டிஷ் இந்தியாவிற்கு வந்து அதனை வாழ்வகமாக்கிக் கொண்டார். ஃபிரெஞ்சு இந்திய மரபியல் சட்டப்படி பெற்ற முழுச் சொத்தும், பிரிட்டிஷ் இந்தியாவின் வாழ்வகத்தினைப் பெற்றதால் அச் சட்டப்படி, பின்னுரிமை முறைப்படி அடையத் தகுதிபெற்றவரா என்ற ஐயம் எழுந்தது. ஓர் இந்து விதவையின் நாட்டுப் பெயர்ச்சியும் (Migration) வாழ்வக மாற்றமும் அவளது சொத்தின் பண்பினைப் பாதியா.

திருமண முறிவு ஏற்படாத நிலையில் கணவன் எத்தனை முறை தன்னுடைய வாழ்வகத்தை மாற்றினாலும் அத்தனை

முறையும் மனைவியின் வாழ்வகமும் மாறும். சுருங்கக்கூறின், கணவனின் வாழ்வகமே மனைவியின் வாழ்வகம் என்பது இயல்பு. தம்பதிகள் இருவரும் மனமிசைந்து ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்து வாழ்ந்தாலும் அல்லது உறவின் சூழ்நிலையின் காரணமாகப் பிரிந்திருந்தாலும், மேற்சொன்ன இயல்பு மாறாது. ஏனெனில், எண்ணியபோது அவர்கள் கூடிவாழ விரும்பி ஒன்றுசேர்வதற்கு எந்தவிதத் தடையும் கிடையாது. தீர்ப்புவழிப் பிரிந்து வாழ்தல் (Judicial separation) தவிர ஏனைய காரணத்துடன் பிரிந்து வாழ்தலில் கணவனின் வாழ்வகம் மாறும்போது மனைவியின் வாழ்வகமும் மாறும் (பிரிவு 16). இவ் விதிக்கு விலக்கு யாதெனில், (1) நீதி மன்றத்தால் கணவனும் மனைவியும் பிரிந்து வாழும்படி தீர்ப்பளிக்கப்பட்டபின் மனைவியின் வாழ்வகம் கணவனின் வாழ்வகத்தைச் சாராது. திருமண முறிவினால் கணவனும் மனைவியும் பிரிக்கப்படுகிறார்கள். அதன்பின் அப் பெண் மணமாகாத ஒரு பெண்ணைப்போல எந்தவிதக் கட்டுப்பாட்டிற்கும் உட்பட்டவள் அல்லள். பிரிந்து வாழும்படி தீர்ப்பளிக்கப்பட்டபின் கணவன் மனைவியின் பரஸ்பர உரிமைகள் முடிவடைகின்றன. அதன்பின் அவள் தன் விருப்பப்படி கணவனின் வாழ்வகத்தை விட்டு வேறு வாழ்வகத்தைப் பெறவியலாது என்னும் வாதத்தினை ஏற்றுக்கொள்ள வியலாது. தகுந்த காரணமின்றி மனைவியைப் புறக்கணித்து (desertion) கணவன் வாழும்போது வாழ்வகத்தினை மாற்றினால் மனைவியின் வாழ்வகமும் மாறும் என்று கூறுவது சரியன்று.

(2) கணவன் தீர்ப்புத் தண்டனையின்படி நாடு கடத்தப்பட்டிருந்தால் மனைவியின் வாழ்வகம் கணவனின் வாழ்வகத்தைச் சாராது. அப்படித் தண்டிக்கப்படும்போது சமூகத்தில் தன்னுடைய தகுதியைக் கணவன் இழக்கிறான். அதனுடன் கணவனின் வாழ்வகத்தை மனைவி சாரும் நிலை முடிவடைகிறது.

புத்தி சுவாதீனமற்ற ஒருவரின் வாழ்வகம் வேறு ஒருவரின் வாழ்வகத்தைச் சார்ந்து செல்லுமேயன்றி, எவ்வழியிலும் அவர் புதிய வாழ்வகத்தினையடைய முடியாது. ஏனெனில், அவராகவே தம் வாழ்வகத்தினை மாற்றவியலாது. அவரது காப்பாளராக இருப்பவரின் வாழ்வகத்தோடு அவரது வாழ்வகமும் மாறும். புத்தி சுவாதீனமற்றவர், ஒருவரின் பொறுப்பில்தான் இருக்க வேண்டுமென்பது வெளிப்படை. அக் காப்பாளர் யாரென அறிதல் நலம். புத்திசுவாதீனமற்றவர் வயது வராதவரானால், அவரது வாழ்வகம் பெற்றோரின் வாழ்வகமே. வயது வந்தபின் புத்தி சுவாதீனம் இழப்பதற்கு முன்பிருந்த வாழ்வகமே புத்தி

சுவாதீனம் இழந்த பின்னும் நீடிக்கும். புத்தி சுவாதீனமற்றவர் திருமணமான பெண்ணாக இருந்தால் கணவனின் வாழ்வகமே அவள் வாழ்வகமாகும்.

இந்தியாவிலுள்ள அசையாச் சொத்துகளின் வாரிசு உரிமை (பிரிவு 5), சொத்தின் சொந்தக்காரர் தாம் இறக்கும்போது கொண்டிருந்த வாழ்வகத்தினைக் கருதாமல் இந்திய நாட்டின் சட்டப்படி செயல்படுத்தப்படும். இறந்தவரின் அசையும் சொத்துகளின் வாரிசுரிமை அவர் இறக்கும்போது கொண்டிருந்த வாழ்வக நாட்டின் சட்டப்படி செயல்படுத்தப்படும் என்பது பொதுவான வாரிசுரிமை விதி.

இறந்தவரின் வாழ்வகத்தினை உறுதிப்படுத்தப் போதிய தடயங்கள் இல்லாதிருப்பின், அச் சொத்தினை எப்படிச் செயல்படுத்துவது என்னும் வினாவிற்கு பிரிவு 19 பதிலளிக்கிறது. இந்தியாவிலுள்ள சொத்தின் சொந்தக்காரருடைய அந்நிய நாட்டின் வாழ்வகத்தினை உறுதிப்படுத்தப் போதிய சான்றுகள் இல்லாதிருப்பின், அச் சொத்தின் வாரிசுரிமை இந்தியச் சட்டத்தின்படி செயல்படுத்தப்படும். அதாவது, இறந்தவர் இந்திய வாழ்வகத்தினையுடையவர் என உத்தேசமாகக் கொள்ளப்படுவார்.

# 2. திருமணம்
## (Marriage)

திருமணம் என்பது ஓர் ஆணும் ஒரு பெண்ணும் மனமுவந்து ஒருவரையொருவர் கணவன் மனைவியாக விரும்பியேற்று அவர்களை ஒன்றுசேர்த்து வைக்கும் விழாவே. ஒவ்வொரு சமயத்தினருக்கும் பிரிவினருக்கும் ஏற்ற தனிச் சட்டங்கள் உண்டு. ஈண்டு வாரிசுரிமையில் திருமணத்தின் விளைவுகளைக் கவனிப்போம். அவை பிரிவுகள் 20, 21-ல் கூறப்பட்டுள்ளன.

பிரிவு 20, வாரிசுரிமை வழியாக வரும் சொத்தினையன்றித் திருமணத்தின் வழியாக வரும் சொத்துகளைப்பற்றிக் குறிப்பிடுகிறது. இந்தியாவைத் தங்கள் வாழ்வகமாகக் கொண்டு இந்தியாவிலேயே திருமணம் செய்துகொண்டவர்கட்குத்தாம் இச் சட்டம் பொருந்தும். இந்தியாவில் திருமணம் செய்துகொண்ட வேற்று நாட்டினை வாழ்வகமாகக் கொண்டவர்கட்கு இச் சட்டம் பொருந்தாது. இதன் விளைவு யாதெனில், திருமணத்தினால் எந்தக் கணவனும் மனைவியின் சொத்தின்மீது எந்த உரிமையும் அடைவதில்லை; தன்னுடைய சொத்தினைப் பயன்படுத்துவதில் அல்லது விற்பதில் தனக்குரிய தனி உரிமையினைச் செயலாற்றுவதில் குறைவுபடுவதில்லை.

1866ஆம் ஆண்டு சனவரி மாதத்திற்குமுன் ஆங்கிலப் பொதுச் சட்டமே இந்தியாவில் அமலிலிருந்தது. அச் சட்டம் ஐரோப்பியரையும், கிறித்தவரையும், யூதரையும், ஆர்மீனியர்களையும், பார்சிகளையும் மட்டுமே கட்டுப்படுத்தியது. இந்துக்களும், மகமதியர்களும், புத்தமதத்தவர்களும், சீக்கியர்களும், ஜைனர்களும் இச் சட்டத்திற்குப் புறம்பானவர்கள். இங்கிலாந்தில், பெண்கள் சொத்துகளை மாற்றுவதிலும் வாங்குவதிலும் அவர்கள் உரிமையின் பேரிலிருந்த கட்டுப்பாடுகள் அனைத்தும் இந்தியாவிலும் அமலிலிருந்தன.

திருமணத்தின் மூலம் கணவன் தன் மனைவியின் அசையாச் சொத்துகளின்மேல் உரிமையைப் பெறுவான். கணவனின் பாது

காப்பிலிருக்கும்போது மனைவி தன்னுடைய சொத்துகளைக் கணவனின் அனுமதியின்றி மாற்ற முடியாது. மனைவியின் அசையும் சொத்துகளின்மீது கணவன் முழு உரிமையையும் பெறுவான். ஆகையால், கணவனின் பாதுகாப்பிலிருந்த மனைவி சொத்துகளையடைவதில் அநேக இடர்ப்பாடுகளைக் கொண்டிருந்தாள். 1865ஆம் ஆண்டு இந்திய வாரிசுரிமைச் சட்டம் அமலாக்கப்பட்ட பின் மனைவிக்கிருந்த எல்லாத் தடைகளும் இடர்ப்பாடுகளும் இந்தியாவில் நீக்கப்பட்டு, சட்டத்தின்முன் கணவனும் மனைவியும் ஒருவர் என்னும் கொள்கை தகர்க்கப்பட்டது. மனைவியின் சொத்தின்பால் அவளுக்கிருந்த உரிமைகளைப் பாதிக்காதபடி செய்வதே இச் சட்டத்தின் நோக்கம். அதன் பிறகு அவள் தன் கணவனின் அனுமதியின்றித் தனது சொத்தினை வாங்கவும் விற்கவும் முடியும். பிரிவு 20-ன் கீழுள்ள விதிவிலக்கு இந்துக்களையும் ஏனையோரையும் இச் சட்டத்திற்குப் புறம்பானவர்களாகக் கூறுகிறது. இந்துக்களுக்குத் தனித் திருமணச் சட்டம் இருப்பதால் அதில் தலையிடுதல் நன்றன்று எனச் சட்ட அவையினர் நினைந்து அவர்களைச் சட்டத்திற்குப் புறம்பானவர்களாக ஆக்கியிருக்கலாம்.

இந்தியாவைத் தன் வாழ்வகமாகக் கொண்ட ஒருவரும் அதனை வாழ்வகமாகக் கொள்ளாத ஒருவரும் திருமணம் செய்து கொண்டால் ஏற்படும் விளைவுகளைப் பிரிவு 21 கூறுகிறது. எவ்வாறு திருமணத்தின்போது இந்தியாவை வாழ்வகமாகக் கொண்ட ஒருவனும் ஒருத்தியும் மற்றவரின் சொத்தின்பேரில் உரிமை பெறமாட்டார்களோ அவ்வாறே இந்தியாவைத் தன் வாழ்வகமாகக் கொள்ளாத ஒருவர் இந்தியாவைத் தம் வாழ்வகமாகக் கொண்ட ஒருவரை இந்தியாவில் திருமணம் செய்து கொண்டால், அதனால் திருமணத்திற்குமுன் தீர்வுகண்ட சொத்தினைத் தவிர ஒருவர் மற்றவரின் சொத்தின்பேரில் எந்த உரிமையையும் பெறமாட்டார்.

இவ் விதி இயங்க இரு நிபந்தனைகள் தேவை : (1) இருவரில் ஒருவர் இந்தியாவைத் தம் வாழ்வகமாகக் கொண்டிருக்க வேண்டும். (2) அவர்களின் திருமணம் இந்தியாவில் நடைபெற்றிருக்க வேண்டும். இவ்விரண்டு நிபந்தனைகளும் நிறைவேற்றப்படுமானால் ஒருவர் மற்றவரின் சொத்தின்பேரில் எந்த உரிமையையும் பெறமாட்டார். இவ் விதியும் முந்திய விதியைப் போலவே திருமணத்தின் விளைவுகளைக் குறிக்கும்; ஆனால் வாரிசுரிமையினைப் பாதிக்காது. திருமணத்தின்மூலம் ஒரு பெண் தன்னுடைய கணவனின் வாழ்வகத்தைப் பெறுகிறாள் எனப்

பிரிவு 15, 16-ல் கண்டோம். ஒருவரின் அசையும் சொத்துகள் வாழ்வகத்தின் சட்டப்படி கட்டுப்படுத்தப்படும். ஆகையால், அசையாச் சொத்துகளைக் கொண்ட இந்தியப் பெண் ஆங்கில வாழ்வகமுடைய ஒருவரை மணமுடித்தால் இருவரும் உயிருடன் வாழும்போது கணவன், மனைவியின் சொத்தின்பேரில் எந்த உரிமையையும் அடைவதில்லை; ஆனால், மனைவி இறந்தபின் ஆங்கிலச் சட்டப்படி பிள்ளையைத் தள்ளிவிட்டு மனைவியின் சொத்து முழுவதற்கும் உரிமையுடையவனாகிறான்.

இவ் விதிக்கு விலக்கு, திருமணத்திற்குமுன் தீர்வு கண்ட சொத்து. அச் சொத்தின்மேல் இருவருக்கும் உரிமையுண்டு. மணமக்களுக்கும் அவர்களின் சந்ததியின் நலனை முன்னிட்டுச் சில சொத்துகளைத் தீர்மானித்து, மணமக்களின் பெற்றோர் ஒதுக்கி வைப்பது இங்கிலாந்தில் வழக்கம். அப்படி ஒதுக்கி வைக்கப்பட்ட சொத்தினைக் கணவனும் மனைவியும் அனுபவிக்கலாமே தவிர அதனை விற்கவோ, அதன்மீது கடன் வாங்கவோ கூடாது என ஆவணத்திலேயே எழுதி வைப்பதுண்டு.

ஆகையால், மணமக்களுக்கென ஒதுக்கிவிட்ட சொத்தினைத் தவிர மற்றவற்றில் ஒருவர் சொத்தில் மற்றொருவருக்கு எந்த வித உரிமையும் கிடையாது. தங்களுடைய சொத்துகளைக் கையாளுவதில் மணமான, மணமாகாத பெண்களின் நிலையினை ஒன்றுபடுத்துவதே இந்தச் சட்டத்தின் நோக்கம். இக் கொள்கை சொத்துமாற்றுச் சட்டம் உருவாக்குவதிலும் கடைப்பிடிக்கப் பட்டுள்ளது. சொத்துமாற்றுச் சட்டம் பிரிவு 10-ல் கூறப்பட்டுள்ளது. சொத்துகளை மாற்றுவதில் எந்தக் கட்டுப்பாடும் அல்லது நிபந்தனையும் விதித்தல் கூடாது. அதற்கு விதிவிலக்கு, திருமணத்தின்போது மணமக்களுக்கெனத் தீர்மானிக்கப்பட்ட சொத்தினை விற்கவோ, அதன்பேரில் கடன் வாங்கவோ அவளுக்கு உரிமை கிடையாது என்பதாகும் (முல்லாவின் சொத்து மாற்றுச் சட்டம் 6ஆம் பதிப்பு 1973, பக்கம் 101).

திருமணத்தை முன்னிட்டுத் தந்தையின் அனுமதியோடும் அல்லது தந்தை இறந்திருப்பின் அல்லது இந்தியாவை விட்டுத் தூரச் சென்றிருந்தால் உயர்நீதி மன்றத்தின் அனுமதியுடனும் வயதுவராதவர் ஒருவர் தம்முடைய சொத்தினை விற்கவோ அதனை மாற்றவோ செய்யலாம் (பிரிவு 22).

வயதுவராதவர் ஒப்பந்தங்களில் ஈடுபடவும் சொத்துகளை மாற்றவும் பொதுவாகத் தகுதியற்றவர். அவ் விதிக்கு விலக்காக மேற்கண்ட பிரிவு 22 அப்படிப்பட்டவருக்குத் தகுதியளிக்கிறது.

திருமணத்தை முன்னிட்டு மட்டும் அத் தகுதியளிக்கப்படுகிறது. அவசரப்பட்டு எச்செயலிலும் ஈடுபட்டுப் பிறகு வருந்தாதபடி வயதுவராதவரின் நலனை முன்னிட்டு அவரின் சொத்துகளை முடிவு காணுவதைச் செல்லுபடியாக்கத் தந்தையின் அனுமதியோ தந்தையில்லாதிருப்பின் உயர்நீதிமன்ற அனுமதியோ மிக அவசியம் என வலியுறுத்தப்படுகிறது. இந்த விதிக்கு ஆணென்றும் பெண்ணென்றும் பாகுபாடு கிடையாது. வயதுவராதவர் தம் சொத்துகளை அவர் தீர்வு காணுவதைத்தான் இவ்விதி குறிப்பிடுகிறது. வயதுவராதவருக்காக அவரின் சொத்தினை வேறொருவர் தீர்வு காணுவதை இது குறிப்பிடவில்லை.

திருமணத்தின் விளைவுகள் என்னும் சொற்களின் பொருளைச் சற்றுக் கவனித்துப்பார்த்தால், திருமணம் தம்பதிகட்கு அவர்களது சொத்தின்மேல் எந்த உரிமையையும் அளிக்கவில்லை. ஆனால் தகுதியற்ற, வயதுவராதவருக்கு அவரது நலனை முன்னிட்டுச் சொத்தினை விற்கத் தந்தையின் அனுமதி பெறுவதால் தகுதியளிக்கிறது.

# 3. இரத்த உறவு
## (Consanguinity)

பொதுவாக உறவு இருவகைப்படும். ஒன்று இரத்த உறவு, இரண்டாவது திருமணவழி உறவு என்பன. இருவர் ஒரே மூதாதையின் வழியில் தோன்றினால் அவர் இரத்த உறவினர் ஆவார். திருமணத்தின்மூலம், உறவினரல்லாத இருவர் உறவினராக்கப்படுவது திருமணத்தின்வழி உறவு ஆகும். வாரிசுரிமை செய்யச் செயல்படுமுன் இறந்தவரின் உறவினர் அவருக்கு எந்த வழியில், எவ்வாறு உறவினரென்று நிருணயிப்பது அவசியம். இப் பகுதியில் உறவின் முறையைக் கணிப்பதை அறிந்து கொள்வோம்.

இப் பகுதி இந்தியாவை வாழ்வகமாகக் கொண்ட கிறித்தவ சமயத்தைப் பின்பற்றுவோருக்கும், இந்தியக் கிறித்தவர்களுக்கும், ஐரோப்பியருக்கும், யூதர்களுக்கும், ஆர்மீனியருக்கும் 1866 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் முதலாம் நாள் முதல் பொருந்தும். மேற்குறிப்பிட்ட நாள், 1865 ஆம் ஆண்டு இந்திய வாரிசுரிமைச் சட்டம் அமலுக்கு வந்த நாளாகும்.

இரத்த உறவை ஆங்கிலத்தில் 'கின்ரட்' அல்லது 'கான்சான்குனிடி' என்பர். அது இருவகைப்படும் :

1. நேர்வழி இரத்த உறவு (Lineal consanguinity)

2. கிளைவழி இரத்த உறவு (Collateral consanguinity)

எவரிடமிருந்து உறவு கணிக்கப்படுகிறதோ அவரின் மூதாதையரும் (Ascendents), வழித்தோன்றல்களும் (Descendents), உடன்பிறப்புகளும் (Collaterals) சேர்த்து அவரது இரத்த உறவினர் எனப்படுவர். நெருங்கிய உறவினரெனக் கூறுவதற்கு இரத்த சம்பந்தம் இருக்கவேண்டும். ஆகையால், 'இன்டஸ்டசி' என்னும் உயில் இல்வழி வாரிசுரிமையின்படி கணவனின் சொத்தில் விதவைக்கும் பங்குண்டெனினும், அவள் நெருங்கிய

உறவினளல்லள். மனைவியின் தாயும் மாற்றாந்தாயும் நெருங்கிய உறவினரல்லர்.

### நேர்வழி இரத்த உறவு

இது எவரினின்று உறவு கணிக்கப்படுகிறதோ அவரிலிருந்து நேர்வழியில் மூதாதையராகவோ வழித்தோன்றலாகவோ இருக்கும் இருவரின் உறவேயாகும். எடுத்துக்காட்டாக, ஒருவரின் மூதாதையரான (Direct Ascending Line) தந்தையும், பாட்டனும், கொள்ளுப்பாட்டனும் அல்லது ஒருவரின் வழித்தோன்றல்களாகிய (Direct Descending Line) மகனும், பேரனும், கொள்ளுப் பேரனும் எல்லோருமாகச் சேர்ந்து நேர்வழி இரத்த உறவினராவர்.

உறவினைக் கணிக்கும்போது மூதாதையர் வழியிலும், வழித் தோன்றல்கள் வழியிலும் ஒவ்வொரு தலையும் மரபுவழியின் தலை முறைப் படிகளாகும் (Every generation constitutes a degree either ascending or descending). ஒருவரின் தந்தையும், மகனும் தலைமுறையின் முதல் படியினைச் சேர்ந்தவர்கள். ஒருவனின் பாட்டனும் பேரனும் தலைமுறையின் இரண்டாம் படியினைச் சேர்ந்தவர்கள். கொள்ளுப்பாட்டனும் கொள்ளுப்பேரனும் தலைமுறையின் மூன்றாம் படியினைச் சேர்ந்தவர்கள்.

### கிளைவழி இரத்த உறவு

அண்ணன் தம்பியாகிய இருவர், ஒருவருக்கொருவர் மூதாதையரோ வழித்தோன்றல்களோ அல்லர்; அதாவது நேர்வழி உறவினரல்லர். தம்பி தந்தையின் மூலமாகத்தான் அண்ணனுக்கு உறவினர். இவ்வழியில் தலைமுறைப் படியினைக் கணிக்கும்போது முதலில் சொத்தினை விட்டு இறந்தவருக்கும் அவரோடு உறவு கொண்டாடுபவருக்கும் பொதுவான மூதாதையரின் தலைமுறைப் படியினை இறந்தவரிலிருந்து முதலாவது கணிக்கவேண்டும். பிறகு மூதாதையரிலிருந்து உறவு கொண்டாடுபவரின் தலைமுறைப் படியினைக் கணிக்க வேண்டும். தலைமுறைப் படியினைக் கணிப்பதில் கவனிக்க வேண்டியது யாதெனில் எவரினின்று கணிக்கின்றோமோ, அவரை விட்டுவிட்டு அவருக்கு அடுத்தவரி லிருந்துதான் எண்ணிக்கை கொள்ளவேண்டும். இரத்த உறவுக் கட்டத்தினை இப் பகுதியின் இறுதியிலும், பின்னிணைப்புப் பட்டியல் 1-லும் காண்க.

வாரிசுரிமையின் பொருட்டு இச் சட்டம் இறந்தவரின் தந்தை வழி உறவினருக்கும், தாய்வழி உறவினருக்கும் எந்தவிதப் பாகு

பாடும் காட்டுவதில்லை. இருசாராரும் இறந்தவருக்குச் சமதூர இரத்த உறவினர்.

அதேபோல் இறந்தவரின் உடன்பிறந்த சகோதரருக்கும் தாய்-தந்தைவழிச் சகோதரருக்கும் எப் பாகுபாடும் காட்டுவதில்லை.

அதேபோல் இறந்தவரின் ஆயுட் காலத்தில் பிறந்து உயிரோடிருக்கும் குழந்தைக்கும், அவர் இறக்கும்போது கருவிலிருந்து பிறகு உயிரோடு பிறந்த குழந்தைக்கும் எப் பாகுபாடும் காட்டுவதில்லை. கருவிலிருக்கும் குழந்தையை 'என் வென்த்ரே சா மியர்' (En Ventre Sa Mere) என ஆங்கிலத்தில் குறிப்பர்.

## ஜெஸ்சாப் எ. வேட்சன்

ஒரு விதவைக்கு ஒரு மகளிருந்தாள். அவ் விதவை மறுமணம் செய்துகொண்டாள். இரண்டாம் கணவனின் மூலம் இரண்டு பிள்ளைகள் அவளுக்குப் பிறந்தனர். முதல் கணவனின் மகள் திருமணமாகாமலும், உயிலெழுதாமலும் சொத்தினை விட்டு இறந்துவிட்டாள். தாயுடன்கூடத் தாய்வழிச் சகோதரர், இறந்த சகோதரியின் சொத்தைப் பகிர்ந்துகொள்ள உரிமையுண்டு எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. இரத்த உறவினரின் தலைமுறைப்படி பின்னிணைப்புப் பட்டியல் 1-ல் கண்டவாறு கணிக்கப்படுகிறது.

# 4. உயில் இல்வழி வாரிசுரிமை

## (Intestate Succession)

சொத்துகளை விட்டு உயில் எழுதாமல் ஒருவர் இறந்து விட்டால், அவரது சொத்துகளின் வாரிசுரிமை செய்வதெப்படி என்று காண்போம். பின்வரும் விதிகள் இந்தியாவை வாழ்வக மாகக் கொண்ட ஐரோப்பியர்களுக்கும், இந்தியக் கிறித்தவர் கட்கும், யூதர்களுக்கும், ஆர்மீனியருக்கும், ஏனைய கிறித்தவர் கட்கும் மட்டும் பொருந்தும். பார்சிகளுக்கெனத் தனிவிதிகள் உண்டு. தற்போதுள்ள 1925ஆம் ஆண்டின் இந்திய வாரிசுரிமைச் சட்டம், 1865ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட இந்திய வாரிசுரிமைச் சட்டத்தின் மாற்றங்களோடு திரும்ப உருவாக்கப் பட்டது.' ஆகையால், இப்போதுள்ள சட்டமும் 1866ஆம் ஆண்டு சனவரித் திங்கள் முதல் நாளிலிருந்து அமலாக்கப் படுகிறது. மேற்கண்ட தேதிக்கு முன்னர் நிகழ்ந்த உயில் இல்வழி வாரிசுரிமையும் இச் சட்டத்தின்கீழ் வராது. இந்துக்களுக்கும், மகமதியருக்கும், புத்த மதத்தினருக்கும், சீக்கியருக்கும், ஜைன ருக்கும் தனித்தனியே வாரிசுரிமைச் சட்டங்கள் இருப்பதால், இச் சட்டம் அவர்கட்குப் பொருந்தாது.

வாரிசுரிமை உயில்வழி வாரிசுரிமை, உயில் இல்வழி வாரிசுரிமை என இருவகைப்படும். சொத்தின் உரிமையாளர் தம் வாழ்நாளிலேயே தமக்குப் பிறகு தம்முடைய சொத்துகள் எப்படிப் பங்கிடப்பட வேண்டுமென்று முன்கூட்டி ஆலோசித்து, எழுதிக் கையொப்பமிட்டு வைத்திருந்த ஆவணம் உயில் எனப்படும். அவர் இறந்தபின் அச் சொத்துகள் அவ் வுயிலில் கண்டுள்ளபடி வாரிசுகட்குப் பங்கிடப்படும். இம் முறையே உயில்வழி வாரிசுரிமையாகும். அப்படி உயில் எழுதாமல் இறந்திருந்தால் சட்டப்படி வாரிசுகட்குப் பங்கிடப்படும். இஃது உயில் இல்வழி வாரிசுரிமை எனப்படும்.

**உயில் இல்வழி யாது ?**

ஒருவர் தமது சொத்துகள் தமக்குப் பிறகு எப்படிப் பிரிக்கப் பட வேண்டுமென எழுதி வைக்காமல் இறந்து போயிருந்தாலும் அல்லது உயிலெழுதி வைத்திருந்து அதனைச் செயல்படுத்த இயலாத காரணத்தாலும் சொத்தினைவிட்டு உயில் இல்வழியில் இறந்துவிட்டார் எனக் கருதப்படுவார். உயில் மூலமாகத் தம்முடைய முழுச் சொத்தினையும் சட்டத்திற்கு முரணான பயன் களுக்கெனக் கொடையாக அல்லது உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்ட பொருள் அவர் இறக்கும்போது இல்லாதிருந் தாலும் உயிலினைச் செயல்படுத்த வியலாது.

**உதாரணம்**

1. A என்பவர் உயில் எழுதாமல் சொத்தினைவிட்டு இறந்து விட்டார். எனவே, அவர் தமது முழுச் சொத்தினை விட்டு விட்டு உயில் இல்வழியில் இறந்துவிட்டார் எனக் கூறலாம்.

2. A என்பவர் ஓர் உயிலினை எழுதி அதில் B-ஐத் தமது நிறைவேற்றுநராக (Executor) நியமித்தார். உயிலில் சொத்து களை எப்படிப் பிரிக்கவேண்டுமென்று ஒன்றும் குறிப்பிடவில்லை. சொத்தினைப் பிரித்துக் கொடுப்பதில் உயில் இல்வழியில் இறந்து விட்டார்.

3. A தம்முடைய முழுச் சொத்தையும் சட்டவிரோதமான செயலுக்குப் பயன்படும்படி கொடையாகக் கொடுத்தார். சொத்தினைப் பிரித்துக் கொடுப்பதில் உயில் இல்வழியில் இறந்து விட்டார்.

4. A என்பவர் B-க்கு ரூ. 1000-யும், C-ன் மூத்த மகனுக்கு ரூ. 1,000-யும் கொடையாகக் கொடுத்தார். வேறெந்தக் கொடையும் கொடுக்கவில்லை. ரூ. 2,000ஐ மட்டும் விட்டு இறந்துவிட்டார். அவருக்கு வேறெந்தச் சொத்தும் கிடையாது. C-மகப்பேறு இல்லாமல் A-க்கு முன்பாகவே இறந்துவிட்டார். ரூ. 1,000ஐப் பொறுத்தவரையில் அவர் உயில் இல்வழியில் இறந்துவிட்டார்.

இந்துவாகப் பிறந்து இந்தியக் கிறித்தவ சமயத்தைத் தழுவியவர் தமது சொத்தினை விட்டு உயில் இல்வழியில் இறந்தால், அவருடைய சொத்தினை வாரிசுரிமை செய்ய இந்துச் சட்டத்தைப் பயன்படுத்தவியலாது; இந்திய வாரிசுரிமைச் சட்டத்தைத்தான் பயன்படுத்த வேண்டும்.

உயில் இல்வழி இருவகைப்படும். முழு உயில் இல்வழி, பகுதி உயில் இல்வழி என்பன. ஒருவர் தம்முடைய சொத்தின் ஒரு பகுதியை உயில் மூலமாகவும் மீதியை உயில் இல்வழியிலும் வாரிசுரிமை செய்யவியலும். உதாரணமாக, ஒருவர் தம்முடைய உயில் மூலமாக அநேக விருப்பாவணக் கொடைகளை (Bequest) பலருக்குக் கொடுத்தார். மீதமுள்ள சொத்துகளைப்பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. மீதமுள்ள பகுதிக்கு மட்டும் அவர் உயில் இல்வழியில் இறந்துவிட்டார் எனலாம்.

### பார்சிகளைத் தவிர மற்றவர்களுக்கு உயில் இல்வழி வாரிசுரிமை

ஐரோப்பியர்களுக்கும் இந்தியக் கிறித்தவர்களுக்கும் மட்டுமே இங்குக் கூறப்படும் விதிகள் பொருந்தும். ஒருவர் உயில் எழுதி வைக்காமல் இறந்துவிட்டால் அவருடைய சொத்து அவரது மனைவிக்கோ, கணவனுக்கோ, இறந்தவரின் நெருங்கிய இரத்தத் தொடர்புகொண்ட உறவினருக்கோ போய்ச்சேரும். கணவன் இறந்தபின் கணவனின் சொத்தில் மனைவிக்கு எந்தப் பங்கும் கிடையாது எனத் திருமணத்திற்கு முன் கணவனும் மனைவியும் ஒப்பந்தம் செய்திருந்தால், விதவைக்குக் கணவனின் சொத்தில் பங்கு கிடையாது என்பது விதிவிலக்கு.

கணவன் தன்னுடைய விதவையையும் பிள்ளைகளையும் அல்லது பிள்ளைகளின் பிள்ளைகளையும் விட்டு இறந்திருந்தால் விதவையின் பங்கு 1/3 பாகம். மீதமுள்ள 2/3 பங்கு இறந்தவரின் பிள்ளைகட்குப் போய்ச் சேரும் [பிரிவு 33 (A)].

பிரிவு 33 (A)-ல் கூறப்பட்டதையன்றிக் கணவன், மகப் பேறின்றித் தன் விதவையையும் தனது இரத்தபாத்திய உறவின ரான தாய் தந்தையரையும் மட்டுமே விட்டு இறந்திருந்தால் விதவையின் பங்கு ½ பாகம். மீதமுள்ள அரைப்பங்கு இரத்த பாத்திய உறவினருக்குப் போய்ச் சேரும் [பிரிவு 33 (B)].

பிள்ளைகளும், தூரத்து உறவினரும் இல்லாதிருந்தால் அதாவது விதவை மட்டுமே இருந்தால் கணவனின் சொத்து முழுவதும் விதவையையே சேரும்.

### நேபன் பால் எ. சீதா காந்தா

ஓர் இந்து, கிறித்தவ மதத்தைத் தழுவி, அதன்பின் தமது கிறித்தவ மனைவியினையும் இந்துவாகவே இருக்கும் தமது சகோதரனையும் சகோதரியையும் விட்டு இறந்துவிட்டால், இந்திய வாரிசுரிமைச் சட்டத்தின்படி அவரது சொத்துகள்

பிரிக்கப்படும். அவரது விதவை சொத்தில் பாதிப் பங்கையும், அவரது சகோதரனும் சகோதரியுமாகச் சேர்ந்து மீதிப் பாதியையும் பங்கிட்டுக் கொள்வார்கள்.

கணவன் தன் வழித்தோன்றல்களின்றித் தன்னுடைய விதவையையும், இரத்தபாத்தியப்பட்ட உறவினரையும் விட்டு, தன்னுடைய முழுச்சொத்தும் எப்படிப் பிரிக்கப்பட வேண்டுமென்று உயில் எழுதாமல் இறந்திருந்தால், அச் சொத்து, பிரிவு (33) A-ல் கூறப்பட்டதுபோல் பிரிக்கப்படும்.

இந்தியக் கிறித்தவர்கட்கும், அவர்களது வழித்தோன்றல்களுக்கும், 1954ஆம் ஆண்டுச் சிறப்புத் திருமணச் சட்டம் 21ஆம் விதியின்படி திருமணம் செய்துகொண்ட எவர்களது சொத்துகள் இந்திய வாரிசுரிமைச் சட்டப்படி பிரிக்கப்பட வேண்டுமோ அவர்கட்கும் இவ் விதி பொருந்தாது. சொத்து முழுவதற்கும் உயில் இல்வழியில் இறந்திருந்தால் இவ் விதி பொருந்தும். இவ் விதி ஆங்கிலோ இந்தியர்களுக்குப் பொருந்தும்.

உயில் இல்வழியில் இறந்தவரின் நிகரச் சொத்துகளின் நிகர மதிப்பு ரூ. 5000/-க்கு மிகாமல் இருப்பின் சொத்து முழுவதும் அவரது விதவைக்குச் சேரும். ரூ. 5000/-க்கு அதிகமாக இருந்தால், முதல் ரூ. 5000-ஐ விதவைக்குக் கொடுக்க வேண்டும். மீதமுள்ள சொத்து பிரிவு 33-ல் கூறப்பட்டுள்ளதைப் போல் பிரிக்கப்பட வேண்டும். அதாவது விதவைக்குக் கொடுக்கப்படும் பங்கோடு ரூ. 5000 கூடுதலாகக் கொடுக்கப்படுகிறது. அதாவது அவருக்குக் கிடைக்க வேண்டிய பங்கோடு அதிகமாகக் கொடுக்கப்படுகிறது. ரூ. 5000-ஐக் கொடுக்கும்வரை முழுச் சொத்தின் பேரிலும் அவருக்குப் பொறுப்பு உண்டு. கணவன் இறந்தது முதல் சொத்துகளைப் பிரித்துக் கொடுக்கும் வரை ரூ. 5000-க்கு 4 சதவீத வட்டியுண்டு. வட்டியுடன் கொடுக்கவேண்டும்.

நிகரச் சொத்து என்பது, இறந்தவரின் இறுதிச் சடங்குகளுக்கான செலவுகளும், கடன்களும், சொத்து நிருவாகத்திற்கான செலவுகளும் மொத்தச் சொத்தின் மதிப்பினின்று கழிக்கப்பட்டு மீதமுள்ளதேயாகும்.

உயில் இல்வழியில் விதவையின்றி இறந்திருந்தால் வழித்தோன்றல்களுக்கு மட்டும் அவரது சொத்துகள் சேரும் அல்லது வழித்தோன்றல்கள் அல்லாத இரத்தபாத்திய உறவினருக்குச் சேரும்; எந்த உறவினரும் இல்லாதிருந்தால் அரசாங்கத்திற்குச் சேரும்.

மனைவி இறந்து கணவன் மட்டுமே உயிரோடு இருந்தால் பிரிவு 33-ல் கூறப்பட்டதுபோல் கணவனுக்கு மனைவியின் சொத்தில் உரிமையுண்டு. பிரிவு 33 (A)-ல் கூறப்பட்டதுபோல் ரூ. 5000-க்குப் பிணைப்பொறுப்பு உரிமையுண்டு.

விளக்கமாகக் கூறினால்,

1. வழித்தோன்றல்கள் மட்டுமேயிருந்தால் கணவனுக்கு 1/3 பங்கும், மீதி 2/3 பங்கு வழித்தோன்றல்களுக்கும் சேரும்.

2. வழித்தோன்றல்களின்றி இரத்த பாத்திய உறவினர் மட்டுமேயிருந்தால் கணவனுக்கு ½ பங்கும், மீதி ½ பங்கு இரத்தபாத்திய உறவினருக்கும் சேரும்.

3. இரத்தபாத்திய உறவினருமில்லாதிருந்தால் கணவனே சொத்து முழுவதையும் எடுத்துக்கொள்வார்.

4. வழித்தோன்றல்கள் எவருமின்றி, ரூ. 5000-க்கு மிகாமல் நிகரச் சொத்துகளை விட்டு மனைவி இறந்திருந்தால், சொத்து முழுவதும் கணவனையே சேரும்.

5. நிகரச் சொத்துகள் ரூ. 5000-க்கு அதிகமாக இருந்தால் பிரிவு 33 A(3)-ல் கூறப்பட்டபடி கணவன் தன் பங்கினைப் பெறுவார்.

**வழித்தோன்றல்கள் இருக்கும்போது பங்கு பிரித்தல்**

1. உயில் இல்வழியில் இறந்தவர் விதவை அல்லது கணவனைப் பிள்ளைகளுடன் விட்டுச் சென்றிருந்தால், விதவை அல்லது கணவனுக்கு மூன்றில் ஒரு பங்கும், பிள்ளைகட்கு மூன்றில் இரண்டு பங்கும் கிடைக்கும். விதவையோ கணவனோ இல்லாதிருந்தால், அதாவது பிள்ளைகள் மட்டுமிருந்தால் பிள்ளைகளுக்குச் சொத்து முழுதும் கிடைக்கும். இறந்துபோன பிள்ளையின் வழித்தோன்றல்களும் இருக்கக்கூடாது. தலைமுறையின் முதல் படியிலிருக்கும் ஒன்றிற்கு மேற்பட்ட வழித்தோன்றல்கள் மட்டுமேயானால் (Lineal descendents of the first degree) (மகன்களும் மகள்களும் மட்டுமே) அவர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட பங்கினை ஆண் பெண் என்ற பாகுபாடின்றிச் சமமாகப் பகிர்ந்து கொள்வர். தந்தை இறந்தபின் பிறந்த குழந்தைக்கு, தந்தை இருக்கும்போது பிறந்த

குழந்தையெனக் கருதி எல்லா உரிமைகளும் அளிக்கப்படும். தத்தெடுத்த பிள்ளை இச் சட்டத்தின்கீழ் எந்த உரிமையையும் பெறவியலாது. பிள்ளையெனக் குறிப்பிடுவது முறைப்படி திருமணமானவர்கட்குப் பிறந்த குழந்தையைத்தான் குறிக்கும்; வேறெதையும் குறிக்காது.

2. பிள்ளைகளும், இறந்துபோன பேரப்பிள்ளையின் வழித் தோன்றல்களும், இல்லாதிருந்து தலைமுறையின் இரண்டாம் படியிலிருக்கும் பேரப்பிள்ளைகள் மட்டுமே இருந்தால் (Lineal descendents in the second degree) அவர்கள் சமமாகப் பங்கு பெறுவர். சொத்து, தலைவிகிதத்தில் அதாவது இறந்தவருக்குச் சமதூரத்திலிருக்கும் உறவினரானால் எத்தனை பேர்கள் இருக் கின்றார்களோ அத்தனை பங்குகளாகப் பிரித்துக் கொடுக்கப் படும் (பிரிவு 38).

உதாரணம்

A என்பவருக்கு ஜான், மேரி, ஹென்றி என்று மூன்று பிள்ளை களுண்டு. ஜான் இரண்டு பிள்ளைகளையும், மேரி மூன்று பிள்ளை களையும், ஹென்றி நான்கு பிள்ளைகளையும் விட்டு, A-க்கு முன்னரே இறந்துவிடுகின்றனர். பின்னர் ஒன்பது பேரப் பிள்ளை




களையும் விட்டு A உயில் இல்வழியில் இறந்துவிடுகிறார். இறந்து போன பேரப் பிள்ளையின் வழித்தோன்றல்கள் கிடையாது. ஒவ்வொரு பேரப் பிள்ளையும் ஒன்பதில் ஒரு பங்கு பெறுவர். இது தலைவிகிதத்தில் சொத்தினைப் பிரித்தலாகும்.

கொள்ளுப் பேரப்பிள்ளைகளோ, ஒரே தலைமுறைப் படி யிலிருக்கும் தூரத்து வழித்தோன்றல்களோ இருந்தால் சமமாகப் பங்கு பெறுவர் (பிரிவு 39).

உயிரோடிருக்கிற வழித்தோன்றல்கள், உறவின் தலைமுறை யில் வெவ்வேறு படிகளிலிருந்தால், அதாவது பேரப்பிள்ளைகளும்

கொள்ளுப் பேரப்பிள்ளைகளும் இருந்தால் அவர்கள் தங்களுடைய பெற்றோருக்கு வரும் பங்கினைப் பெறுவார்கள்.

**உதாரணம்**

1. A தம்முடைய மனைவியையும், மகன் S-ஐயும், இறந்துபோன மகன் ($S_1$) வழியாக இரு பேரப்பிள்ளைகளையும் ($S_2 + D_2$), இறந்துபோன மகள் ($D_1$) வழியாக இரு பேரப்பிள்ளைகளையும் ($S_3 + D_3$) விட்டு இறந்துபோகிறார். மனைவிக்கு மூன்றில் ஒரு பங்கும், மீதி மூன்றில் இரண்டு பங்கு மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டு, S, $S_1$, $D_1$ ஆகியோருக்குத் தலைக்கு ஒன்பதில் இரண்டு பங்காகப் பிரித்துக் கொடுக்கப்படும். இறந்துபோன மகனின் 2/9 பங்கு அவரது மகன் $S_2$-விற்கும் மகள் $D_2$-க்கும் சமமாகத் தலைக்கு ஒன்பதில் ஒரு பங்கு (1/9) கொடுக்கப்படும். அதேபோல் இறந்துபோன மகளின் (2/9) பங்கு அவரது மகன் $S_3$-க்கும் மகள் $D_3$-க்கும் சமமாகத் தலைக்கு ஒன்பதில் ஒரு பங்கு (1/9) கொடுக்கப்படும்.




A = சொத்துகளைவிட்டு உயில் இல்வழியில் இறந்தவர்.
W = விதவை.
(வட்டமிட்டுச் சுழித்திருத்தல் அவர் இறந்துவிட்டவர் எனக் குறிக்கும்).

2. A என்பவர் தம் மனைவியையும் முன்பே இறந்துபோன மூன்று பிள்ளைகள் வழியில் உயிரோடிருக்கிற 4 பேரப்பிள்ளைகளையும், இறந்துபோன இரு பேரப்பிள்ளைகளின் வழியில் ஐந்து கொள்ளுப் பேரப்பிள்ளைகளையும் விட்டு இறந்துபோனார். மனைவிக்கு மூன்றில் ஒரு பங்கு; தலைமுறையின் முதல் படியில் பிள்ளைகள் மூவரும் இறந்து போனதனால், எந்தத் தலைமுறைப் படியில் உறவினர் உயிரோடிருக்கிறாரோ அந்தத் தலைமுறைப் படியில் சொத்தினைப் பிரிக்கவேண்டும். இங்குத் தலைமுறையின்

இரண்டாம்படியில்; அதாவது பேரப்பிள்ளைகள் இருக்குமிடத்தில் சொத்தினைப் பிரிக்க வேண்டும். மனைவிக்குப் போக மீதமுள்ள 2/3 பாகத்தை 6 பங்குகளாகப் போடவேண்டும். ஒவ்வொரு பேரப்பிள்ளைக்குமாகத் தலைக்கு 1/9 பங்கு கிடைக்கும். இறந்துபோன இரு பேரப்பிள்ளைகளின் பங்கு அவர்களது வழித் தோன்றல்களுக்குச் சமமாகப் பிரித்துக்கொடுக்கப்படும். கீழ்க் காணும் படம் அதனை விளக்கும்.




**வழித்தோன்றல்கள் இல்லாதபோது பங்கு பிரித்தல்**

உயில் இல்வழியில் வழித்தோன்றல்களின்றி இறந்தவரின் மனைவியும், தந்தையும் மட்டுமிருந்தால், மனைவிக்குப் பாதிப் பங்கும் தந்தைக்குப் பாதிப் பங்கும் கிடைக்கும்.

இறந்தவரின் மனைவியும் இல்லாதிருந்தால் தந்தை முழுச் சொத்தினையும் எடுத்துக்கொள்வார்.

## அட்மினிஸ்ட்ரேட்டர் ஜெனரல் எ. அனந்தாச்சாரி

A என்னும் பிராமணர் 1850ஆம் ஆண்டு எட்டு வயது நிரம்பிய S என்னும் பிராமணப் பெண்ணை இந்து முறைப்படி மணந்தார். திருமணம் நிறைவாக்கப்படவில்லை. 1851ஆம் ஆண்டு A கிறித்தவ மதத்தைத் தழுவினார். எனவே, S தம் முடைய கணவனிடத்தில் தமக்கிருந்த உரிமையனைத்தையும் துறந்தார். 1858 ஆம் ஆண்டு M என்பவரை A கிறித்தவ முறைப்படி மணந்தார். உயில் இல்வழியில் அவர் 1881 ஆம் ஆண்டு இறந்ததால் அவருடைய சொத்துகளை நிருவகிக்கும் பொறுப்பு அட்மினிஸ்ட்ரேட்டர் ஜெனரல் எனப்படும் தலைமை நிருவாகிக்கு வந்தது. சொத்துக்கு உரிமை பாராட்டியவர்கள்:

1. A-ன் தந்தை
2. தந்தையுடன் வாழும் A-ன் சகோதரர்.
3. M-ன் நிறைவேற்றாளர்.

S கணவனிடத்தில் தமக்கிருந்த உரிமைகளைத் துறக்காமலிருந்திருந்தால் A-ன் விதவையென அவளின் பங்கைப் பெற்றிருக்கலாம். ஆனால் உரிமையினை S துறந்ததால் முழுச்சொத்திற்கும் A-ன் தந்தையே உரியவர் ஆவார் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

உயில் இல்வழியில் இறந்தவரின் தந்தையும் இறந்துபோய் தாயும், சகோதரரும், சகோதரிகளும் மட்டும் உயிரோடிருந்தால், தாயும், சகோதர சகோதரிகளும் உயில் இல்வழியில் இறந்தவரின் சொத்தின்பேரில் தலைவிகிதப்படி சம பங்காக வாரிசுரிமை பெறுவர். இறந்துபோன சகோதர சகோதரிகளின் வழித் தோன்றல்கள் உயிரோடிருக்கக் கூடாது (பிரிவு 43). தந்தை உயிரோடிருந்தால் சகோதர சகோதரிகளைத் தள்ளிவிடுவார். ஆனால், தாய் அவர்களோடுகூட உடன்வாரிசாகப் பங்கு பெறுவார்.

வாரிசுரிமையின் பொருட்டு இச் சட்டம் உடன்பிறந்த சகோதரருக்கும் அல்லது தாய் தந்தைவழி உறவினருக்கும் எந்த விதப் பாகுபாடும் காட்டுவதில்லை (பிரிவு 27). எனவே, சகோதர சகோதரிகளுக்கு இறந்தவரின் சொத்தில் பங்குண்டு; மாற்றாந் தாய்க்குச் சொத்தில் பங்கு கிடையாது. ஏனெனில், தாய் என்னும் சொல் மாற்றாந்தாயைக் குறிக்காது என ஆல்ஸ்பரி பதிப்பு (10 ஆம் பதிப்பு 603 ஆம் பக்கம்) கூறுகிறது.

தாயும், சகோதர சகோதரிகளும் முன்பே இறந்துபோன சகோதர சகோதரிகளின் வழித்தோன்றல்களும் மட்டுமிருந்தால் இறந்தவர்களின் சொத்துக் கிளை விகிதத்தில் (Per stirps) சமமாகப் பிரிக்கப்படும் (பிரிவு 44).

உயில் இல்வழியில் இறந்துபோனவரின் தாயும், முன்பே இறந்துபோன சகோதர சகோதரிகளின் வழித்தோன்றல்களும் மட்டுமே இருந்தால் கிளை விகிதத்தின்படி சமமாகப் பங்கு பெறுவார்கள் (பிரிவு 45).

உதாரணமாக, A என்பவர் தாயையும், முன்பே இறந்து போன மேரி என்னும் சகோதரியின் வழியில் ஒரு வழித்தோன்றலையும், முன்பே இறந்துபோன ஜார்ஜ் என்னும் சகோதரனின்

வழியில் இரு பிள்ளைகளையும் விட்டு உயில் இல்வழியில் இறந்து போகின்றார்.




தாய்க்கு மூன்றில் ஒரு பங்கும், மேரிக்குச் சேரவேண்டிய மூன்றில் ஒரு பங்கு மேரியின் வழித்தோன்றலுக்கும், ஜார்ஜுக்குச் சேரவேண்டிய மூன்றிலொரு பங்கு அவரின் இரு பிள்ளைகட்கும் சமமாகத் தலைக்கு ஆறில் ஒரு பங்காகக் கொடுக்கப்படும்.

வாரிசுரிமையில் பிரதிநிதித்துவம் சகோதரரின் பிள்ளைகட்குத்தான் உண்டு; சகோதரரின் பேரப்பிள்ளைகட்குக் கிடையாது (The representation is not to be carried beyond brothers' and sisters' children).

உயில் இல்வழியில் இறந்தவரின் நெருங்கிய உறவினர் இறந்துபோய், தாய் மட்டுமிருந்தால் இறந்தவரின் விதவையின் பங்கு போக மீதியுள்ளது தாயைச் சேரும்.

வழித்தோன்றல்களும், பெற்றோருமின்றி ஒருவர் உயில் இல் வழியில் இறந்துவிட்டால் அவரது சொத்தினை அவரது சகோதர சகோதரிகள் சமமாகப் பகிர்ந்துகொள்வர். முன்பே இறந்து போன சகோதர சகோதரிகளின் பிள்ளைகள் தங்களது பெற்றோரின் பங்கினைச் சமமாகப் பகிர்ந்துகொள்வார்கள்.

வழித்தோன்றல்களும், பெற்றோரும், சகோதர சகோதரிகளுமின்றி உயில் இல்வழியில் ஒருவர் இறந்திருந்தால் அவரது மனைவியின் பங்குபோக மீதியுள்ள சொத்தினை அவரது ஏனைய நெருங்கிய உறவினர் சமமாகப் பிரித்துக்கொள்வார்கள். உறவினைக் கணித்தல் எவ்விதமெனில், இறந்தவருக்கும் சொத்தில் உரிமை கோருபவருக்கும் பொதுவான மூதாதையரின் தலைமுறையின் படியைக் கணித்துக்கொண்டு அவரிலிருந்து அவரது

வழித்தோன்றல்களின் தலைமுறைப் படியை உரிமை கோருபவர் வரை கணிக்க வேண்டும்.

**உதாரணம்**

1. A என்பவர் தம்முடைய மனைவியையும், தந்தையின் சகோதரரையும், தந்தைவழிப் பாட்டனையும், பாட்டியையும் விட்டு இறந்துவிடுகிறார்.

(2) GF GM

(1) F — FB (3)

A — W

Ⓐ —உயில் இல்வழியில் இறந்தவர்
Ⓕ —தந்தை முன்பே இறந்துவிட்டார்
FB —தந்தையின் சகோதரர்
GF —தந்தையின் தந்தை-பாட்டன்
GM —தந்தை வழிப் பாட்டி
W —மனைவி

பங்கு விகிதம்

| W | GF | GM |
|---|---|---|
| $\frac{1}{2}$ | $\frac{1}{4}$ | $\frac{1}{4}$ |

FB(u) —இல்லை. மூன்றாம் படியில் இருப்பதால் தள்ளப்படுவார்.

2. A என்பவர் தம்முடைய சகோதரனின் மகனையும், தந்தையின் சகோதரனையும், கொள்ளுப்பாட்டனையும் விட்டு இறந்துவிடுகிறார்.

(3) GGF

(2) GF

(1) F — FB(u)

A B (2)

N

GGF —கொள்ளுப்பாட்டன்
GF பாட்டன்
F —தந்தை
FB(u) —தந்தையின் சகோதரர்
B —உடன்பிறந்த சகோதரன்
N —சகோதரனின் மகன்

| GGF | FB(u) | N |
|---|---|---|
| $\frac{1}{3}$ | $\frac{1}{3}$ | $\frac{1}{3}$ |

உரிமைகோரும் மூவரும் இறந்தவரிலிருந்து சமதூரத்து உறவினர். மூவரும் தலைமுறையின் மூன்றாம் படியினைச் சேர்ந்தவர்கள். இறந்தவரின் சொத்தில் மூவருக்கும் சமஉரிமை உண்டு. எனவே மூவரும் தலைக்கு 1/3 பங்கு பெறுவர்.

**முன்னேற்றத்திற்காகக் கொடுக்கப்பட்ட சொத்து**

தம்முடைய வாழ்நாளின்போது தம்முடைய பிள்ளைக்கு அல்லது பிள்ளையின் முன்னேற்றத்திற்காக ஏதாவது பணம் அல்லது சொத்தினைக் கொடுத்திருந்தால், அவர் உயில் இல்வழியில் இறந்த பின் அவரது சொத்தினை மதிப்பிட்டுப் பங்கு பிரிக்கும்போது, முன்பு கொடுக்கப்பட்ட சொத்தினைக் கணக்கில் கொண்டுவர வேண்டியதில்லை (பிரிவு 49).

ஆங்கிலச் சட்டப்படி, உயில் இல் வழியில் ஒருவர் இறந்து விட்டால், அவரிடமிருந்து அவரது பிள்ளை தன்னுடைய முன்னேற்றத்திற்கெனப் பொருள் ஏதும் பெற்றிருந்தால், இறந்தவரின் சொத்திலிருந்து தன்னுடைய பங்கினைப் பெறுமுன், தான் பெற்ற பொருளினைத் திருப்பிக் கொடுத்துவிடல் வேண்டும். ஆனால், இந்தியச் சட்டப்படி அப் பொருளினைத் திருப்பித் தரவேண்டியதில்லை.

முன்னேற்றத்திற்கெனக் கொடுத்தல் வேறு, சொத்தில் ஒரு பகுதியினைக் கொடுத்தல் என்பது வேறு. பிள்ளையின் நன்மையினைக் கருதி தன்னுடைய வாழ்நாளில் தந்தை கொடுப்பது முன்னேற்றத்திற்குக் கொடுப்பதாகும். சொத்தில் ஒரு பகுதியினைக் கொடுத்தல் என்பது பெற்றோரென்ற முறையில், கடமையில் சொத்தினைக் கொடுப்பதாகும்.

**உயில் இல்வழியில் இறந்த பார்சிகளுக்கான தனி விதிகள்**

1837ஆம் ஆண்டுவரை ஆங்கிலப் பொதுச்சட்டமே பார்சிகளின் வாரிசுரிமையை நிருணயிக்கப் பயன்படுத்தப்பட்டது. நிறைய அசையாச் சொத்துகளை விட்டுப் பார்சி ஒருவர் பம்பாயில் 1835ஆம் ஆண்டு இறந்துபோனார். இங்கிலாந்திலுள்ள தலைமகன் வாரிசுரிமைச் சட்டத்தின்படி, தமது தந்தையின் சொத்துகளனைத்தும் தம்மையே சேரவேண்டுமெனத் தீர்ப்பளிக்கும்படி, அவரின் தலைமகன் பம்பாய்த் தலைமை நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தார். இதைக் கண்டு திடுக்கிட்ட பம்பாய் மாநிலப் பார்சிகளின் முறையீட்டுக்கிணங்க, பார்சி செட்டல்ஸ் ரியல் சட்டம் என்னும் சட்டத்தினைச் சட்டமன்றம் 18[illegible]ஆம் ஆண்டு இயற்றியது. அதன் விளைவாகத் தலைமகன் வாரிசு முறை என்னும் ஆங்கிலச் சட்டத்தின் பிடியினின்று பார்சிகள் விடுவிக்கப்பட்டனர். உயில் இல்வழியில் இறந்துவிட்டால் விதவைக்கு மூன்றிலொன்றும், மீதமுள்ளதைப் பிள்ளைகளும், பிள்ளைகளின் பிள்ளைகளும் சமமாகப் பகிர்ந்துகொள்ள

வேண்டுமென்றும் ஆங்கிலச் சொத்து பங்கிடும் சட்டத்தில் கொண்டுவரப்பட்டது.

1860ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ஆம் தேதி 'மரபுரிமைச் சொத்து வாரிசுரிமைகளைப் பற்றினவை' எனும் சட்டத் தொகுப்பைச் சட்டமன்ற மேலவையிடம் பார்சி சட்டக் கூட்டுச் சங்கம் சமர்ப்பித்தது. அதனைத் திறனாயும்படி ஒரு செயலாணைக் குழு நியமிக்கப்பட்டது. அக் குழுவின் முடிவின்படி (1) பார்சிகளின் திருமண, விவகாரத்துச் சட்டம், (2) பார்சிகளின் மரபுரிமை, வாரிசுரிமைச் சட்டம் என்னும் இரு சட்டங்கள் 1865ஆம் ஆண்டு உருவாயின. இந்த வாரிசுரிமைச் சட்டம் 1925ஆம் ஆண்டுவரை அமலில் இருந்தது. இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டபோது, பார்சிகளின் மரபுரிமை, வாரிசுரிமைச் சட்டம் அப்படியே ஓர் எழுத்தும் மாறாமல் சேர்த்துக்கொள்ளப்பட்டு, அச் சட்டம் அமலிலிருந்து நீக்கப்பட்டது.

பார்சிகளின் மத்திய சங்கம், 1933ஆம் ஆண்டு, பார்சி மக்களின் கருத்துகளைப் பெறும் பொருட்டுச் சில மாறுதல்கள் ஏற்படுத்துவதற்கான மனு ஒன்றை அனுப்பிற்று. அதில் கண்ட மாறுதல்களாவன :

1. உயிலின்றி இறந்துபட்ட ஆண் பார்சியின் சொத்தில் விதவைக்கும் மகளுக்கும் உடைய தகுதியின் நிலைமை உயர்த்துதல் வேண்டும்.

2. உயிலின்றி இறந்த ஆண் பார்சியின் சொத்தில் தந்தைக்கும் தாய்க்கும் பங்கு தரவேண்டும்.

3. இந்திய வாரிசுரிமைச் சட்டம் பிரிவு 56-ல் கண்ட உயிலின்றி இறந்தவரின் சொத்தில் அவருக்கு முன்பே இறந்துபோன மகளின் கணவனின் உரிமையை நீக்குதல்.

4. உயிலின்றி இறந்தவரின் வழித்தோன்றல்களின் நிலைமையை உயர்த்துதல்.

மேற்கூறிய கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு திருத்துதல் சட்டம் 19[illegible]ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டுப் பிரிவுகள் 50 முதல் 56 வரை மாற்றியமைக்கப்பட்டன.

## உயிலின்றி இறந்த பார்சிகளுக்கான விசேட விதிகள்

**பார்சிகளுக்கான உயில் இல்வழியில் வாரிசுரிமை விதிகள்**

(a) இறந்தவரின் வாழ்நாளின்போது பிறந்தவர்கட்கும் அவர் இறந்தபோது கருவிலிருந்து பின்பு உயிருடன் பிறந்தவர்கட்கும் எந்தவிதமான பாகுபாடும் கிடையாது (பிரிவு 50).

(b) உயில் இல்வழியில் இறந்தவரின் வாழ்நாளில், ஒரு விதவையையோ, ஒரு விதுரனையோ அல்லது ஏதாவதொரு வழித்தோன்றலையோ அல்லது அவரின் விதவையையோ பின் விட்டுச் செல்லாமல் இறந்து போன வழிதோன்றலை, இறந்தவரின் சொத்தினைப் பிரிப்பதில் கணக்கில் கொள்ளக்கூடாது.

(c) உயில் இல்வழியில் இறந்தவரின் வாழ்நாளில், அவரது உறவினரின் விதவை மறுமணம் செய்துகொண்டால் அவ் விதவைக்கு, உயில் இல்வழியில் இறந்தவரின் சொத்தில் பங்கேதும் கிடையாது. உயில் இல்வழியில் இறந்த நேரத்தில் அவ் விதவை உயிருடனில்லை எனக் கொள்ளப்படுவார்.

பிரிவு 50 (a) இச் சட்டத்தில் முன் குறிப்பிட்ட பிரிவு 27ஐச் சார்ந்ததாகும்.

**பிரிவு 51 : பார்சி ஆண்மகனின் சொத்தினைப் பிரித்தல்**

விதவையையும் பிள்ளைகளையும் விட்டு உயில் எழுதாது இறந்திருந்தால் ஒவ்வொரு மகளின் பங்கினைப்போல் இரு மடங்கு பங்கு ஒவ்வொரு மகனுக்கும் விதவைக்கும் கொடுக்க வேண்டும்.

விதவையின்றிப் பிள்ளைகளை மட்டுமே விட்டுச் சென்றிருந்தால், ஒவ்வொரு மகனின் பங்கு, ஒவ்வொரு மகளின் பங்கைப் போல் இரு மடங்காக இருத்தல் வேண்டும்.

விதவையுடனும் பிள்ளைகளுடனும், இறந்த பார்சி ஆண் மகனின் பெற்றோர் ஒருவரோ இருவருமோ இருந்தால் உயில் இல்வழியில் இறந்தவரின் சொத்தில் தந்தை ஒரு மகனின் பங்கில் சரிபாதிப் பங்கும், தாய் ஒரு மகளின் பங்கில் சரிபாதிப் பங்கும் பெறுவர்.

பெற்றோருக்கு மகனின் சொத்தில்தான் பங்கு உண்டு; மகளின் சொத்தில், பங்கு கிடையாது. பெற்றோரென்னும் சொல் தாயின் கணவனையோ (Step Father), தந்தையின் மனைவி என்னும் மாற்றாந்தாயையோ (Step Mother) குறிப்பதன்று. தாயின் கணவனின் சொத்தில், முதல் கணவனின் மகனுக்கும் (Step Son) மகளுக்கும் (Step Daughter) உரிமை கிடையாது. ஆனால், வெவ்வேறு கணவர்களின் வழியில் பெற்ற பிள்ளைகளைக் கொண்ட ஒரு தாயின் சொத்தில் அப் பிள்ளைகள் எல்லோருக்கும் உரிமையுண்டு.

**பிரிவு 52 : பார்சிப் பெண்ணின் சொத்தினைப் பிரித்தல்**

உயில் இல்வழியில் ஒரு பார்சிப் பெண் தனது விதுரனையும் பிள்ளைகளையும் விட்டு இறந்திருந்தால், விதுரனும் ஒவ்வொரு பிள்ளையும் சமமாகப் பங்கு பெறுவர்.

பிரிவு 54 : உயில் இல்வழியில் இறந்தவர், வழித்தோன்றல்களின்றித் தம்முடைய விதவையையோ, விதுரனையோ, ஏதாவதொரு வழித்தோன்றலின் விதவையையோ விட்டுச் சென்றிருந்தால் சொத்தினைப் பிரிக்கும் முறை :

(a) உயில் இல்வழியில் இறந்தவர் தம்முடைய விதவையையோ, விதுரனையோ மட்டுமே விட்டுச் சென்றிருந்தால், விதவை அல்லது விதுரன் இறந்தவரின் சொத்தில் பாதியை எடுத்துக்கொள்வார்.

(உ-ம்.) விதவை (அ) விதுரன் ½ பங்கு
பின்னிணைப்புப் பட்டியல் II, பாகம் I-ல் கூறப்பட்ட உறவினர் ½ பங்கு

(b) உயில் இல்வழியில் இறந்தவர் விதவை அல்லது விதுரனுடன், வழித்தோன்றலின் விதவையையும் விட்டுச் சென்றிருந்தால், அவரது விதவை அல்லது விதுரன் சொத்தில் மூன்றில் ஒரு பங்கைப் பெறுவார். வழித்தோன்றலின் விதவை மூன்றில் ஒரு பங்கும், பின்னிணைப்புப் பட்டியல் II. பாகம் I-ல் சொல்லப்பட்ட உறவினர் மூன்றில் ஒரு பங்கும் பெறுவர்.

விதவை (அ) விதுரன் 1/3 பாகம்
வழித்தோன்றலின் விதவை 1/3 பாகம்
பின்னிணைப்புப் பட்டியல் II, பாகம் I-ல் உள்ள உறவினர் 1/3 பாகம்

வழித்தோன்றல்களின் விதவைகள் ஒருவருக்கு மேற்பட்டவர்களாக இருந்தால் ஒரு விதவையின் பங்கை யாவரும் சமமாகப் பகிர்ந்துகொள்வர்.

(c) உயில் இல்வழியில் இறந்தவர் வழித்தோன்றலின் ஒரு விதவையை மட்டும் விட்டுச் சென்றிருந்தால் அவ் விதவை மூன்றில் ஒரு பங்கு பெறுவார். வழித்தோன்றல் களின் விதவைகள் ஒருவருக்கு மேற்பட்டவர்களாக இருந்தால் மூன்றில் இரண்டு பங்கைச் சமமாகப் பிரித்துக் கொள்வர். எஞ்சிய சொத்து பின்னிணைப்புப் பட்டியல் II, பாகம் I-ல் சொல்லப்பட்ட உறவினருக்குப் போகும்.

(i) வழித்தோன்றலின் விதவை — 1/3 பங்கு
பின்னிணைப்புப் பட்டியல் II, பாகம் I-ல்
உள்ள உறவினர் — 2/3 பங்கு

(ii) வழித்தோன்றலின் விதவைகள் — 2/3 பங்கு
பின்னிணைப்புப் பட்டியல் II, பாகம் I-ல்
உள்ள உறவினர் — 2/3 பங்கு

பின்னிணைப்புப் பட்டியல் II, பாகம் I-ல் ஆறுவகை உறவினர்கள் கூறப்பட்டுள்ளனர். முதல் வகையில் கூறப்பட்ட உறவினர்கள் ஒருவருமில்லையானால் இரண்டாம் வகையில் கூறப்பட்ட உறவினருக்குக் கொடுக்க வேண்டும். அப்படியே ஆறாம் வகை வரையில் கொடுக்க வேண்டும்.

எஞ்சிய சொத்தினைப் பின்னிணைப்புப் பட்டியல் II, பாகம் I-ல் உள்ள உறவினருக்குப் பிரிக்கும்போது தந்தைக்கு இரு பங்கும், தாய்க்கு ஒரு பங்கும், சகோதரனுக்கு இரு பங்கும், சகோதரிக்கு ஒரு பங்கும் கொடுக்க வேண்டும்.

எஞ்சிய சொத்தினைப் பெறுவதற்கு உறவினர் யாருமில்லையானால், எஞ்சிய சொத்து முழுவதும், சொத்தினையடைய அடிப்படை உரிமை கொண்டவர்கட்கே அவர்களின் சொத்தின் விகிதத்தில் பிரித்துக் கொடுக்கவேண்டும்.

சகோதர சகோதரிகள் என்னும் சொற்கள் உடன்பிறந்தோரையும், தந்தைவழிச் சகோதர சகோதரிகளையும் மட்டுமே குறிக்கும்; தாய்வழிச் சகோதரர்களைக் குறிக்காது.

**உயில் இல்வழியில் இறந்தவரின் சொத்தினை முன்பே இறந்துபோன வழித்தோன்றலின் வழித்தோன்றல்கட்குப் பிரித்தல் (பிரிவு 53)**

வழித்தோன்றல்களைவிட்டு ஒரு பார்சி இறந்துபோனால், அவரது வாழ்நாளிலே ஒரு பிள்ளை இறந்து போயிருந்தால், உயில் இல்வழியில் இறந்தவரின் சொத்தினைப் பிரிக்கும்போது அவர் இறந்தபோது, அப் பிள்ளை உயிரோடிருந்ததாகக் கொள்ள வேண்டும்.

(a) அப்படி முன்பே இறந்துபோன பிள்ளை மகனாக இருந்தால் அவனின் விதவையும் மக்களும் அவனின் பங்கினை, மேற்கூறிய விகிதத்தில் (விதி 51) பிரித்துக்கொள்வர். அப்படி முன்பே இறந்துபோன மகன் தனது விதவையையோ, வழித்தோன்றலின்றி வழித்தோன்றலின் விதவையையோ மட்டும் விட்டுச் சென்றிருந்தால் அவர்கட்குரிய பங்கினை முன்பே இறந்துபோன மகனின் பங்கினின்று கொடுத்துத் தீர்த்து மீதமுள்ள பங்கினை உயில் இல்வழியில் இறந்தவரின் சொத்துகளுடன் சேர்த்து, திரும்பவும் எல்லோருக்கும் பிரித்துக் கொடுக்க வேண்டும். அப்படித் திரும்பப் பிரிக்கும்போது முன்பே இறந்த மகனைச் சேர்க்கக் கூடாது.

உதாரணம் :

1. ஒரு பார்சி ஆண்மகன் பின்வரும் உறவினரை விட்டு இறக்கின்றார்.

தந்தை, தாய், விதவை, மகள், மகன், முன்பே இறந்த மகன் வழியாக விதவை, மகள், மகன்,

| தந்தை | தாய் | விதவை | மகள் | மகன் | முன்பே இறந்த மகன் |
|---|---|---|---|---|---|
| 2/17 | 1/17 | 4/17 | 2/17 | 4/17 | 4/17 |

| மகள் | மகன் | விதவை |
|---|---|---|
| 4/85 | 8/85 | 8/85 |

அவரது சொத்து 8½ பங்குகளாகப் பிரிக்கப்படல் வேண்டும். முன்பே இறந்த மகனின் பங்கு 5 பாகமாகப் பிரித்துக் கொடுக்கப்படவேண்டும். ஆனால், அம் மகனின் விதவை தனது மாமனாரின் வாழ்நாளிலேயே மறுமணம் செய்துகொண்டிருந்தால் பங்கின்றித் தள்ளப்படுவார் [பிரிவு 50(c)].

ஒரு பார்சிப் பெண் பின்வரும் உறவினரை விட்டு இறந்து போனால்,




அவரது சொத்து பிரிவு 52-ல் கூறப்பட்டதுபோல் யாவருக்கும் சமமாக 5 பங்குகளாகப் பிரிக்கப்பட வேண்டும். அடுத்தபடியாக முன்னதாக இறந்துவிட்ட மகளின் 1/5 பங்கு சமமாக மகனுக்கும் மகளுக்கும் பிரித்துக் கொடுக்கப்பட வேண்டும். முன் இறந்த மகளின் விதுரனுக்கு உயில் இல்வழியில் இறந்த முன்னோரின் சொத்தில் பங்கு கிடையாது [பிரிவு 53 (b)]. அடுத்தபடியாக முன் இறந்த மகனின் 1/5 பங்கு அவரது மகன், மகள், விதவை மூவருக்கும் பிரிவு 51-ன்படி மகனுக்கு 2 பங்கு, மகளுக்கு 1 பங்கு, விதவைக்கு 2 பங்கெனப் பிரிக்கப்பட வேண்டும்.

ஆனால், முன் இறந்த மகன் தன் விதவையை மட்டும் விட்டு இறந்திருந்தால்,




முதலாவதாக அவரது சொத்தினை ஏழு பங்குகளாகப் போட்டு விதவைக்கு 2/7 பங்கும், மகளுக்கு 1/7 பங்கும், மகனுக்கு 2/7 பங்கும், மு. இ. மகனுக்கு 2/7 பங்கும் பிரிவு 51-ன்படி கொடுக்க வேண்டும். இரண்டாவதாக, பிரிவு 54 (a)-ன்படி முன்பு இறந்த மகனின் பங்கு இரு பங்குகளாகப் பிரிக்கப்பட்டு விதவைக்கு ஒரு பங்கை அதாவது 1/7 பங்கு கொடுக்க

வேண்டும். எஞ்சியுள்ள 1/7 பங்கு எச்சமாக A-யின் சொத்தோடு சேர்க்கப்படும். அப்பங்கு முன்பு இறந்த மகனைத் தவிர ஏனையோருக்குப் பிரிவு 51ன்படி பிரிக்கப்படும். அது 5 பங்குகளாகப் பிரிக்கப்பட்டு 1/7-ல் 2/5 பங்கு விதவைக்கும், 1/7-ல் 1/5 பங்கு மகளுக்கும், 1/7-ல் 2/5 பங்கு மகனுக்கும் கொடுக்கப்படவேண்டும்.

2. முன்பு இறந்த மகன் தனது விதவையையும் வழித்தோன்றலின் விதவையையும் விட்டுச் சென்றால்,




முதலில் அவரது சொத்து ஏழு பாகமாகப் பிரிக்கப்பட்டு விதவைக்கு 2/7 பங்கும், மகளுக்கு 1/7 பங்கும், மகனுக்கு 2/7 பங்கும், முன்னதாக இறந்துவிட்ட மகனுக்கு 2/7 பங்கும் கொடுக்கப்பட வேண்டும். முன்பு இறந்த மகனின் 2/7 பங்கைப் பிரிவு 54(b)-ல் சொல்லியபடி 2/7-ல் 1/3 = 2/21 பங்கு அவனின் விதவைக்கும், 2/7-ல் 1/3 = 2/21 பங்கு அவன் வழித்தோன்றலின் விதவைக்கும் கொடுக்க வேண்டும். எஞ்சியுள்ள 2/21 பங்கு A-ன் சொத்தோடு சேர்த்து முன்பு இறந்த மகனைத் தவிர்த்து ஏனையோருக்குப் பிரிவு 51ன் படி பிரிக்கப்படும். அது 5 பங்குகளாகப் பிரிக்கப்பட்டு விதவைக்கு 2/21-ல் 2/5 = 4/105 பங்கும், மகளுக்கு 2/21-ல் 1/5 = 2/105 பங்கும், மகனுக்கு 2/21-ல் 2/5 = 4/105 பங்கும் கொடுக்கப்படும்.

(b) அப்படி முன்பே இறந்துபோன பிள்ளை மகளாக இருந்தால், அவர் பங்கினை அவரது மக்கள் சமமாகப் பிரித்துக் கொள்வர்.

உதாரணம் :

1. முன் இறந்த மகள் தன் விதுரனையும் மக்களையும் விட்டு இறந்திருந்தால்,




முதலாவது சொத்தினை 6 பங்குகளாக்கி அதில் விதவைக்கு 2/6 பங்கும், மகளுக்கு 1/6 பங்கும், மு.இ. மகளுக்கு 1/6 பங்கும், மகனுக்கு 2/6 பங்கும் கொடுக்க வேண்டும். இரண்டாவதாக மு.இ. மகளுக்குக் கொடுக்கப்பட்ட 1/6 பங்கை அவரின் மகளுக்கும் மகனுக்கும் சமமாகக் கொடுக்கவேண்டும். அவரின் விதுரனுக்குப் பங்கு கிடையாது.

(c) உயில் இல்வழியில் இறந்தவரின் வாழ்நாளிலேயே அவரின் முன் இறந்த பிள்ளையின் வழித்தோன்றலும் இறந்திருந்




ந்தால், உயில் இல்வழியில் அவர் இறந்த நாளன்று அவ் வழித்தோன்றல் உயிரோடிருந்தால் அவன் அல்லது அவள் மேற்கண்ட (a), (b) பிரிவில் கூறப்பட்டதுபோல் பங்கினைப் பெறுவர்.

A என்பவர் உயில் இல்வழியில் (1) விதவை, (2) மகள், (3) முன்னால் இறந்த மகளின் வழியாக அவளது மகளின் விதுரன், மகனின் விதவை, பேரப்பிள்ளைகள், (4) மகன், (5) முன்னால் இறந்த மகனின் வழியாக விதவை, இறந்த மகன் வழிப் பேரப்பிள்ளைகள், இறந்த மகனின் விதவை ஆகியோரை விட்டு இறந்துவிடுகிறார்.

முதலாவதாக, பிரிவு 51-ல் கூறப்பட்டபடி சொத்தினை 8 பங்குகளாகப் பிரிக்க வேண்டும்.

இரண்டாவதாக, முன்பே இறந்த மகளின் 1/8 பங்கைப் பிரிவு 53(b)-ல் சொல்லப்பட்டபடி அவளின் இறந்த மகளுக்கும், இறந்த மகனுக்கும் சமமாகப் பிரிக்கவேண்டும். இறந்த மகளின் 1/16 பங்கை அவரின் மகளுக்கும் மகனுக்கும் சமமாகப் பிரித்துக் கொடுக்க வேண்டும். அவரின் விதுரனுக்குப் பங்கு கிடையாது. இறந்த மகனின் 1/16 பங்கைப் பிரிவு 53(a)-ல் கூறியபடி 5 பங்காகப் பிரித்து அவனின் விதவை, மகள், மகன் ஆகியோருக்கும் கொடுக்க வேண்டும்.

அடுத்தபடியாக, முன்பே இறந்த மகனின் 2/8 பங்கை 5 பங்குகளாக்கி அவனின் விதவைக்கு 2 பங்கும், இறந்த மகளுக்கு 1 பங்கும், இறந்த மகனுக்கு 2 பங்கும் கொடுக்க வேண்டும். இறந்த மகளின் 2/40 பங்கினை அவளின் மகளுக்கும் மகனுக்கும் சமமாகப் பிரித்துக் கொடுக்கவேண்டும். இறந்த மகனின் 4/40 பங்கு பிரிவு 54 (a)-ல் உள்ளபடி அவன் விதவைக்குப் பாதியும், அவன் தாய்க்குப் பாதியுமாகப் பிரிக்கப்படும். இங்குத் தாய் என்பவர் (முன்பே இறந்த மகனின் விதவையே), பிரிவு 54 (d)-ல் குறிப்பிடப்பட்ட பின்னிணைப்புப் பட்டியல் II பாகம் I-ல் உள்ளவர்.

(d) மேற்சொன்ன உறவினருக்குக் கொடுத்ததுபோக எஞ்சியுள்ளது பின்னிணைப்புப் பட்டியல் II, பாகம் I-ல் கூறப்பட்ட உறவினருக்குக் கொடுக்கப்படும். அப் பிரிவில் ஆறுவகையான உறவினர் கூறப்பட்டுள்ளனர். முதல் வகையினருக்கு முதலாவதும், அப் பிரிவில் எவருமில்லையானால் அடுத்த பிரிவில் உள்ளவர்கட்குக் கொடுக்கப்பட வேண்டும். இப்படியே கடைசிவரை வாரிசுரிமை இருக்கும் சம உறவினரான ஆணுக்குப் பெண்ணைவிட இருமடங்கு பங்கு கொடுக்கவேண்டும்.

(e) எஞ்சியதைப் பிரித்துக்கொள்ள உறவினரில்லையானால் ஏற்கெனவே பங்கு பெற்றவர்களே தங்களது பங்கு விகிதத்தில் எச்சத்தைப் பிரித்து எடுத்துக்கொள்வர்.

பிரிவு 55: ஒரு பார்சி விதவையோ, விதுரனோ, வழித் தோன்றலோ அல்லது வழித்தோன்றலின் விதவையோ, மற்ற நெருங்கிய உறவினரின்றி உயில் இல்வழியில் இறந்திருந்தால், அவரது முழுச் சொத்தும் பின்னிணைப்புப் பட்டியல் II, பாகம் I-ல் கூறப்பட்ட உறவினருக்குப் போகும். சமஉறவினரான ஆணுக்குப் பெண்ணைவிட இரு மடங்கு பங்கு கொடுக்க வேண்டும்.

பிரிவு 56: மேற்கூறிய வகையில் வாரிசுரிமை செய்ய உறவினரில்லாவிட்டால் உயில் இல்வழியில் இறந்தவரின் சொத்து, தூரத்து உறவினருக்குச் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்கப்பட வேண்டும்.

# 5. உயில்வழி வாரிசுரிமை

உயில் என்றால் என்ன? தான் இறந்த பிறகு தன்னுடைய சொத்து எப்படிப் பிரிக்கப்பட வேண்டும் என்ற விருப்பத்தை எழுதிவைக்கும் ஆவணமே உயில் எனப்படும் விருப்பு ஆவண மாகும். அதனை உருவாக்கியவர் உயிலினை உருவாக்கியவர் அல்லது விருப்பாவணமளித்தவர் எனப்படுவார். விருப்பாவண மளித்தவர் தம்முடைய உயிலிலோ, உயிலிணைப்பிலோ முன்பே எழுதப்பட்ட ஓர் ஆவணத்தைக் குறிப்பிட்டு அது அவரது எண்ணங்களைத் தெரிவிக்கும் எனக் குறிப்பிட்டிருந்தால் அவ்வா வணமும் சேர்ந்து உயிலெனப்படும். அவ்வாறு குறிப்பிடப்பட்ட ஆவணம் அமலிலிருக்கும் விருப்பாவணமாக இருத்தல் வேண்டும். உயிலில் கண்ட குறிப்பைக்கொண்டு எளிதில் கண்டுபிடிக்கக்கூடிய தாக இருத்தல் வேண்டும். அதனை உயிலோடு சேர்த்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் தெளிவாகக் கூறப்பட்டிருக்கவேண்டும். உயிலினை உருவாக்கிய பின்னர் வேறோர் ஆவணத்தின் மூலம் அந்த உயிலில் சேர்த்தோ, மாறுதல் செய்தோ அந்த ஆவணத் தையும் உயிலோடு சேர்த்து உயிலெனக் கொள்ள வேண்டும். அவ்வாவணமே உயிலிணைப்பாகும்.

**உயிலின் நோக்கம்**

(1) விருப்பாவணம் தந்தவர் (Testator) இறந்தபின் அவரது சொத்துகளைப் பங்கிடவும் அவரது விருப்பத்தினை நிறைவேற்ற நிறைவேற்றாளரை நியமிக்கவும்.

(2) உயில்வழிக் காப்பாளரை நியமிக்கவும் (Testamentary Guardian).

(3) அடுத்த வாரிசினை நியமிக்கும் அதிகாரத்தினைச் செயல் படுத்தவும் (for exercising the power of appointment).

(4) முன்பு எழுதிய உயிலினைத் தள்ளுபடி செய்யவும் (revocation) அல்லது மாற்றுவதற்கும் உயில் பயன்படுகிறது.

**உயிலின் குணங்கள்**

(1) விருப்பாவணம் தந்தவரின் உள் எண்ணத்தினைச் சட்டப்படி அறிவிப்பதாக இருக்க வேண்டும்.

(2) அவ்வறிவிப்பு விருப்பாவணம் தந்தவரின் சொத்தினைப் பற்றியதாக இருக்க வேண்டும்.

(3) அவ்வறிவிப்பு விருப்பாவணம் தந்தவர் இறந்த பிறகு செயல்படுத்தப்பட வேண்டியதாக இருக்கவேண்டும். அதாவது, அவர் தம்முடைய வாழ்நாளில் அவ்வறிவிப்பினை ரத்து செய்யக் கூடும் (revocation).

இம் மூன்று தேவைகளில் ஒன்று குறைவுபட்டாலும் அந்த ஆவணத்தினை உயிலெனக் கருத முடியாது.

**1. சட்டப்படி அறிவித்தல்**

உயிலெனப்படும் ஆவணம் சட்டபூர்வமானதாக இருக்க வேண்டும். அதாவது, இந்திய வாரிசுரிமைச் சட்டம் 63ஆவது பிரிவைச் சார்ந்து எழுதிக் கையொப்பமிட்டு (executed) முடித்த அக் கையொப்பத்திற்குச் சான்றொப்பமளிக்கப்பட்டதாகவும் (attestation) உயிலினை ஆக்கியவர் அதனைச் செய்யத் தகுதியுடையவராகவும் இருக்கவேண்டும். கையொப்பமின்றியும், சான்றொப்பமளிக்கப்படாமலும் இருந்தால் அவ் வுயில் சட்டப்படி அறிவிக்கப்பட்டதன்று. வயதுவராதவர் உயில் எழுதச் சட்டப்படி தகுதியற்றவர். வயதுவராதவரின் உயில் சட்டப்படி அறிவிக்கப் பட்டதன்று என விஜயரத்னம் எ. சுதர்சனராவ், 48 Mad. 614 PC, என்னும் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது. உயிலெனும் சொல்லைப் பயன்படுத்தி ஓர் ஆவணத்தின் மூலமாகச் சொத்துப் பங்கீட்டு முறையை அறிவிக்காவிட்டால் அவ்வாவணம் உயிலாகாது.

**2. அவ்வறிவிப்பு சொத்துப் பற்றியது**

விருப்பாவணம் தந்தவர் பங்கிட விரும்பும் அவருடைய சொத்தினைப்பற்றியதாக இருக்கவேண்டும். அவ்வறிவிப்பு சொத்தினைப் பங்கிடுவதைக் குறிக்காமல், தமக்குப் பிறகு தம்முடைய பதவிக்கு யார் வரவேண்டுமெனக் கூறியிருந்தாலும், சொத்தினைக் கண்காணிக்க ஒரு மேலாளர் நியமித்திருந்தாலும், தம்முடைய விதவைக்குத் தத்தெடுத்துக் கொள்ள உரிமை கொடுத்திருந்தாலும் அவ்வாவணம் உயிலாகாது.

**உதாரணம் :**

### பிரிஜ்ராஜ் எ. சியோதம் (40 IA 161)

ஒரு வயதான இந்து, உயிலெனக் கருதி ஓர் ஆவணத்தின் மூலமாகத் தம்முடைய சொத்துகளைத் தம்முடைய மகன்களுக்கிடையே பங்கிட்டுக் கொடுத்தார். அவ்வாவணத்தில் கண்டிருந்ததாவது: 'புனித யாத்திரையினின்று நான் எப்போதாவது திரும்பி வரும்போது, சொத்துகள் தவறாக நிருவகிப்பதையோ, யாராவது ஒருவரின் ஒழுக்கக் குறைவினையோ கண்டால், உயிலினை ரத்துச் செய்ய எனக்கு உரிமையுண்டு' என்பதாகும். இது ஒரு குடும்ப உடன்பாடேயல்லாமல், உயிலன்று என்த் தீர்ப்பளிக்கப்பட்டது.

### பீமதியோ எ. பி. ஹாரி (44 Mad. 738 PC.)

ஓர் இந்து, பின்வரும் ஆவணத்தை உருவாக்கினார். உன்னுடைய விருப்பம்போல் ஒரு மகனை நீ தத்தெடுத்துக் கொண்டு சொத்துகளை நல்ல முறையில் நிருவாகம் நடத்த நான் சம்மதம் தெரிவிக்கின்றேன். இதனை மறுத்துரைக்க (to raise dispute) என்னுடைய எந்த வாரிசுக்கும் உரிமை கிடையாது. என்னுடைய சம்பந்தத்தின்பேரில் இவ் வுயில் உருவாக்கப்பட்டது. இவ்வாவணம் உயிலன்று எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

### இராமச்சந்திரா எ. இராமாபாய் (39 Bom. L.R. 165)

தம்மையும், உடன்பிறந்தாரின் மகனையும் (Nephew) கொண்ட கூட்டுக் குடும்பத்தைச் சேர்ந்த ஓர் இந்து, விவஸ்தப் பத்திரம் எனப்படும் ஓர் ஆவணத்தை உருவாக்கினார். அந்நாள் முதல் உடன்பிறந்தாரின் மகனினின்று அவர் பிரிந்துவிட்டதாகவும், சொத்துகளை எல்லை வரையறுத்துப் பிரிக்கவியலாததால், அடையாளப் பாகப் பிரிவினை (symbolic partition) செய்துகொண்டதாகவும் அறிவித்திருந்தார். அதன் பின்னர்த் தம்முடைய சொத்தின் வருமானத்தில் பாதிப் பங்கினைத் தமது விதவைக்குக் கொடுக்கும்படி சொத்தினை வகுத்தமைத்தார் (disposition). உடன்பிறந்தார் மகனும் ஆவணத்தில் கையொப்பமிட்டிருந்தார். மேற்கூறிய பத்திரம் இருவரும் கூட்டாகவிருந்த நிலையை உடனடியாகப் பிரித்துவிட்டது. மேலும், சொத்தினை வகுத்தமைத்ததால் உயிலெனக் கொள்ளலாம். ஆகவே, உயில் மெய்ப்பிதழ் பெறத் தகுதி பெற்றது (Probate) எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

**3. விருப்பாவணம் தந்தவரின் சொத்தினை வகுத்தமைப்பது பற்றிய அறிவிப்பு**

அவர் இறந்தபின் செயல்படுத்தவேண்டிய நோக்கத்தோடு இருக்கவேண்டும். உயிலினை உருவாக்கியவரின் நோக்கத்தினை உடனடியாக நிறைவேற்ற வேண்டிய அறிவிப்பாயின் அதாவது, உயிரோடிருக்கிற இருவரிடையே நடைபெறும் செயலாயின் அதனை உயிலெனக் கொள்ளவியலாது. உயிலினை உருவாக்கியவரின் வாழ்நாளிலேயே அதனைத் தள்ளுபடி செய்ய அவருக்கிருக்கும் தன்மையினைக் கொண்டதே முறைப்படி அமைத்த உயிலின் சாராம்சமாகும். உயிலினை உருவாக்கியவர் இறக்கும் வரையில் உயில் நிலையற்றது எனக் கூறுவது மிகையாகாது. ஒரு பத்திரம் உயிலா, சாதாரணப் பத்திரமா என முடிவெடுக்க உதவுவது அதனைத் தள்ளுபடி செய்யும் அதிகாரமாகும். ஓர் ஆவணம் அல்லது பத்திரம் தள்ளுபடி செய்யவியலாமல், இறுதியாக உடனடியாகச் செயல்படுத்தப்பட வேண்டியதாயின், அது முறைப்படியமைந்த உயிலாகாது.

உயிலினை உருவாக்கியவர், அதனைத் 'தள்ளுபடி செய்யவியலாது அல்லது தள்ளுபடி செய்யமாட்டேன்' என உறுதியளித்திருந்தாலும், அதன் தள்ளுபடி செய்யும் தன்மையினை மாற்றமுடியாது. ஓர் ஆவணத்தை உருவாக்கியவர் சொத்தில் ஆயுள் பாத்தியத்தை மட்டும் வைத்துக்கொண்டால் அவ்வாவணம் உயிலாகாது.

**உதாரணம் :**

ஓர் இந்து, ஒரு பத்திரத்தில் பின்வருமாறு எழுதியிருந்தார் : ''நான் வாழ்கின்றவரை எனது சொத்தின் இலாபத்தினை எடுத்துக் கொள்வேன். நீ என்னை உன்னுடைய குடும்பத்தில் ஒரு நபராகக் கொண்டு காப்பாற்ற வேண்டும். இந் நாள் முதல் எனக்குச் சொத்துரிமை ஏதும் கிடையாது. சொத்துரிமை உன்னைச் சேர்ந்ததாகும். மேற்சொன்னவற்றைத் தவிர நான் இறந்த பிறகு இருக்கும் சொத்துகளனைத்தையும் உனக்குக் கொடுத்துவிட்டேன்'. அப் பத்திரம் உயிலாகாது எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

ஜே. கே. முடி என்பவர் மருத்துவமனையில் இறந்துவிட்டார். அவர் வைத்திருந்த தாள்களிலே ஒரு கடிதம் இருந்தது. 'முகவர், ஏசியன் அசுரன்சு கம்பெனி லிமிடெட் அவர்கட்கு, பாலிசி எண் 8180-ம் 1927-ம் — மேற்கண்ட பாலிசிகளை எஸ்.எம்.

என்பவருக்கு உரிமைமாற்றம் செய்யவேண்டும். இச் செயலினை உருவாக்கியவர் (Party) உயிரோடு இல்லையானால் இவ் வுரிமை மாற்றம் செல்லுபடியாகும். இல்லையானால் இப் பணம் இச் செயலினை உருவாக்கியவரான ஜே. கே. முடியைச் சென்றடையும்.' இக் கடிதம் எழுதிக் கையொப்பமிடப்பட்டிருந்தது. இக் கடிதம் ஓர் உயிலாகும்.

**உயிலின் அமைப்பு**

ஓர் உயில் எவ்வித வடிவத்திலும் அல்லது அமைப்பிலும் இருக்கலாம். ஆனால், உயில் பயனுடையதாகவிருக்க இச் சட்டத்தில் கூறியபடி முறைப்படி கையொப்பமிடப்பட்டுச் சான்றளிக்கப்பட்டதாக இருக்கவேண்டும். உயில் செயல்படுவதற்கு ஆவணத்தின் வடிவத்தில் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. அந்த ஆவணம் உயிலாகச் செயல்படவேண்டும் என்ற எண்ணமிருக்க வேண்டும் (Animus testandi). எனவே உடன்பாடுகள், கடிதங்கள், மாற்றுச்சீட்டு (Bill of Exchange), அதிகாரப் பத்திரம், விவஸ்தப் பத்திரம் எனப்படும் அறுதியாவணம், சம்பந்த நிருணயப் பத்திரம் எனப்படும் திருமண ஒழுங்குப் பத்திரம், தாம்லீக் நாமா எனப்படும் உரிமைமாற்றுப் பத்திரம், இக்ரார் நாமா எனப்படும் உடன்பாட்டுப் பத்திரம் ஆகியவை முறைப்படி உருவாக்கப்பட்டு, அதனை உருவாக்கினவர் இறந்தபின் அதில் கூறப்பட்ட பங்கீடுகள் செயல்படுத்தப்படவேண்டுமென்ற எண்ணத்தினைத் திரட்டக்கூடுமானால், உயில்களாகச் செயல்படுத்தவியலும். சுருங்கக் கூறின், ஒரு பத்திரம் உயிலாகச் செயல்பட வேண்டுமானால் இரு நிபந்தனைகட்குட்பட வேண்டும்.

1. ஆவணத்தில் கூறப்பட்ட பயன்களைச் செயல்படுத்த வேண்டுமென்பதே அதனை உருவாக்கியவரின் எண்ணம். அவ்வாவணம் உயிலாகக் கருதப்பட்டால் அதில் கண்ட பயன்கள் செயல்படுத்தக் கூடியதாக இருக்கவேண்டும்.

2. ஆவணத்தை உருவாக்கியவரின் இறப்பே அவ்வாவணத்தைச் செயல்படுத்தச் செய்கிறது. ஆவணத்தினை உருவாக்கினவரின் இறப்பிற்குச் சம்பந்தப்படாமல், அதில் கூறப்பட்ட பயன்கள் வாழ்வோரிடையே கொடுக்கப்படுமானால், அது உயிலாகாது.

**உயிலின் மொழி**

ஓர் உயில் எந்த மொழியில் வேண்டுமானாலும் எழுதப்பட்டிருக்கலாம். குறிப்பிட்ட கலைச்சொற்களைத்தாம் பயன்படுத்தியிருக்கவேண்டுமென்றில்லை. பயன்படுத்தியுள்ள சொற்களினின்று விருப்பாவணம் தந்தவரின் எண்ணத்தைத் தெரிந்துகொள்ளக் கூடியதாக இருக்கவேண்டும். ஓர் உயில், மையினாலோ வரை கோலினாலோ (Pencil) எழுதப்பட்டிருக்கலாம். உயிலினை உருவாக்கியவரேதான் அதனை எழுதியிருக்க வேண்டுமென்பதில்லை. யார் வேண்டுமானாலும் எழுதலாம். உயிலை எழுதியவரே அதன்மூலம் பயன்பெறுகிறார் என்றால், பேரி எ. பட்லின் என்ற வழக்கில் கூறப்பட்ட விதிகளைக் கடைப்பிடித்தல் வேண்டும். உயில்களும், உயிலிணைப்புகளும் ஆவண வரியினின்றும் விலக்களிக்கப்பட்டுள்ளன. அவைகட்கு ஆவண முத்திரைகள் ஒட்ட வேண்டியதில்லை.

**உயிலின் வகைகள்**

இருவகை உயில்கள் மட்டுமே இச் சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றோடுகூட இன்னும் சிலவகை உயில்களும் உண்டு.

**இச் சட்டத்தில் குறிப்பிடப்பட்ட உயில்கள் :**

1. *தனிச் சலுகை உயில்கள்* (Privileged Wills).
2. *தனிச் சலுகையற்ற உயில்கள்* (Unprivileged Wills).

**ஏனைய உயில்கள் :**

1. விருப்ப ஆவண வாய்மொழி உயில் (Nuncupative or Oral Will). இதனை வாய்மொழி உயில் எனவும் கூறலாம்.
2. உரியவர் கையெழுத்து ஆவண உயில் (Holograph Will).
3. பரஸ்பர உயில் (Mutual Will).
4. இணை உயில் (Joint Will).
5. நிபந்தனை உயில் (Conditional Will).
6. பணிக் கடனற்ற உயில் (Inofficious Will).

மேலே குறிப்பிட்ட முதல் இரண்டு உயில்களும் இச் சட்டத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளதால் அவற்றினைப் பின்னர்க் கவனிப்போம். ஏனைய உயில்களைப் பற்றிய தெளிவு மிக அவசியம். எனவே அவற்றினை ஒன்றன்பின் ஒன்றாகக் கவனிப்போம்.

**1. வாய்மொழி உயில் (Nuncupative or Oral Will)**

சொத்துக்குரியவர் அல்லது ஆவணத்தைத் தந்தவர் போதிய எண்ணிக்கையுள்ள சாட்சிகளின் முன்னிலையில் தம்முடைய சொத்தினைப் பற்றிய எண்ணத்தைத் தெரிவித்தலே வாய்மொழி உயிலாகும். இங்கிலாந்து நாட்டில் மோசடிச் சட்டம் (Statute of Fraud) அமலாக்கப்பட்ட பின்னர் ஆங்கிலச் சட்டப்படி போரில் ஈடுபட்டிருக்கும் இராணுவ வீரர்கட்கும், கப்பற்படை வீரர்கட்கும், விமானப்படை வீரர்கட்கும் வாய்மொழி உயில் இயற்றத் தனிச் சலுகையளிக்கப்பட்டது. இந்தியாவில் இந்திய வாரிசுரிமைச் சட்டத்தின்கீழ் இருக்கிறவர் வாய்மொழி உயில் செய்ய வியலாது. இச் சட்டம் அமலாக்கப்படாத மாநிலங்களில் இருக்கிறவர்கள் வாய்மொழி உயில் இயற்றலாம். இஸ்லாமியச் சட்டப்படி ஒரு முஸ்லிம் தற்போதும்கூட வாய்மொழி உயில் செய்யவியலும். வாய்மொழி உயிலினை நிரூபித்து நிலைநிறுத்தும் பொறுப்பு மிகவும் அதிகமானது.

**2. உரியவர் கையெழுத்து ஆவண உயில் (Holograph Will)**

சொத்துக்குரியவர் தம் சொந்தக் கையாலேயே முழுவதும் எழுதிய உயிலே உரியவர் கையெழுத்தாவண உயிலாகும். இவ்வகை உயில் தனிச் சலுகையற்ற உயில்களின் வகையைச் சாரும். சொத்துக்குரியவரே எழுதும்போது அதனால் ஏற்படும் விளைவுகளையும் தாம் என்ன செய்கிறோம் என்ற செயலின் தன்மையையும் நன்கு உணர்ந்தவராகவே எழுதுவதால் இவ்வகை உயிலினை எளிதில் ஒதுக்கிவிடவியலாது.

**3. பரஸ்பர உயில் (Mutual Will)**

இருவர் பரஸ்பர உயில் எழுத உடன்பட்டு ஒருவருக்கொருவர் தம்முடைய சொத்தின்பேரில் மற்றவருக்கு உரிமை ஏற்படுத்தி எழுதிக்கொடுக்கும் ஆவணங்களிலொன்றே பரஸ்பர உயிலாகும். ஒரே நாளில் எழுதப்பட்ட கூறுகள் ஒன்றோடொன்றொத்த இரு உயில்களாகும். இவ்வகை உயிலின் தன்மை யாதெனில், இருவரின் வாழ்நாள்களிலேயே இருவரில் ஒருவர் மற்றவருக்குத் தெரிவித்துவிட்டுப் பரஸ்பர உயிலினை மாற்றிவிடக் கூடியது.

இருவரிலொருவர் இறந்த பின்னர், உயிரோடிருப்பவர் இறந்தவரின் உயில்வழியாகப் பயனையடைந்த பின்னர், உயில்களை மாற்றிவிடவியலாது. விளக்கமாகக் கூறின், (1) பரஸ்பர உயில்கள் எழுதிய இருவரில் ஒருவர் இறந்த பின்னர் அவ்வுயில்கள் மூலமாக இறந்தவரின் சொத்திலிருந்து உயிரோடிருக்கும் மற்றவர் பயனடைந்திருக்கவேண்டும். (2) உயிலினை உருவாக்குகின்றவர்கள் அவற்றினை மாற்றக்கூடாது என்ற உடன்பாட்டின் பேரில் பரஸ்பர உயில்கள் எழுதப்பட்டிருக்கவேண்டும். இவ்விரு நிபந்தனைகளும் ஒரே சமயத்தில் நிறைவேற்றப்பட்டால் பரஸ்பர உயிலினை மாற்றியமைக்கவியலாது. எனினும், ஒரு புதிய உயிலை உருவாக்குவதன் மூலம், உயிருடனிருக்கிற உரிமையாளர், முன்பு ஏற்படுத்திய உடன்படிக்கையினை மீறிப் பரஸ்பர உயிலினை மாற்றியமைத்தால், உயிருடனிருக்கிற (survivor) உரிமையாளரின் சொந்தச் சொத்துகள் வரையில்தான் புதிய உயிலுக்கு உயில் மெய்ப்பிதழ் அனுமதிக்கப்படும்.

## 4. இணை உயில் (Joint Will)

ஒன்றுக்கு மேற்பட்ட உரிமையாளர்கள் ஒரே ஆவணத்தை அனைவரும் இணையாக உருவாக்குவதன்மூலம், தங்கள் தனிச் சொத்துகளுக்கோ பொதுச் சொத்துகளுக்கோ வகைசெய்தால் (disposing) அவ்வாவணம் இணை ஆவணம் அல்லது இணை உயில் எனப்படும் (ஆல்ஸ்பரி புத்தகம் 34 ப. 17). சுருங்கக்கூறின், இணை உயில் என்பது இருவர் ஒரே ஆவணத்தின் மூலமாகத் தங்கள் விருப்பாவண விருப்பத்தைச் செயல்படுத்துதல் எனப் பொருள்படும். இவ்வகை உயில், ஒரு தனி உயிலன்று. ஒவ்வொருவரும் அல்லது உயிருடனிருக்கிற உரிமையாளரும் இதனை எந்தச் சமயத்திலும் தள்ளுபடி செய்யவோ மாற்றியமைக்கவோ வியலும்.

இரு இந்துக்கள் சேர்ந்து ஓர் இணை உயிலினை உருவாக்கவியலும். ஆனால், இந்துக் கூட்டுக் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர், கூட்டுக் குடும்பச் சொத்தில் தமது பங்கினைப் பொறுத்த மட்டில் ஓர் உயிலினை எழுதவியலாது. ஏனைய பங்குரிமையாளர் அனைவரும் உடன்பட்டு விருப்பத்தைத் தெரிவித்தால் அப்படி எழுதப்பட்ட உயிலினை ஒரு குடும்ப ஏற்பாடாகக் கொண்டு செயல்படுத்தலாம்.

## 5. நிபந்தனை உயில் (Conditional Will)

ஓர் உயில் செயல்படுவது உறுதியில்லாத, ஏற்படக்கூடிய நிகழ்ச்சி ஒன்றினைச் சார்ந்ததாக இருக்கலாம். குறிப்பிட்ட அந்

நிகழ்ச்சி நடைபெறாவிட்டால் அவ் வுயிலினைச் செயல்படுத்த இயலாது. மேலும், அதற்கு உயில்மெய்ப்பிதழும் பெற இயலாது. இவ்வகை உயில், நிபந்தனை உயில் எனப்படும். ஓர் உயிலினை நிபந்தனை உயிலாகக் கருத, அவ் வுயிலில் கூறப்பட்டவை உறுதியில்லாத ஒரு நிகழ்ச்சி நடைபெறுவதைச் சார்ந்தது. அப்படி நடைபெறாவிட்டால் உயிலன்று என அதில் பயன்படுத்தப் பட்டுள்ள சொற்களினின்று தெளிவாக ஏற்படுதல் வேண்டும். (உ-ம்) பயணத்தை மேற்கொள்ளவிருக்கும் ஓர் உரிமையாளர், பின்வரும் சொற்களைக் கொண்டு ஓர் உயில் எழுதுகின்றார். 'புறப்படவிருக்கும் கடற் பயணத்தினின்று நான் திரும்பி வரா விட்டால் இவ் வுயில் செயல்படும்'. அவர் வீட்டிற்குத் திரும்பி, பின்னர் இறந்துபோனால் இவ் வுயிலினைச் செயல்படுத்த முடியாது. மேலும் இதற்கு உயில் மெய்ப்பிதழ் பெறவியலாது.

## ஜெகநாத் எ. ராம்பாரோசா

(38 Bom. L. R. 776)

ஒரு சொத்தின் உரிமையாளர், தாம் டெல்லி தர்பார் காணச் சென்ற சமயத்தில் ஓர் உயிலினை எழுதி வேறு ஒருவரிடத்தில் கொடுத்துச் சென்றார். அதில் கண்டிருந்ததாவது : 'நான் தர்பாருக்காக டெல்லி செல்கிறேன். அதனால் என்னுடைய சொத்தினைக் குறித்துச் சில நிபந்தனைகளை எழுதிச் செல்கிறேன். தெய்வ கிருபையினால் எந்தவித அசம்பாவிதமும் விளையக்கூடாது என எதிர்பார்க்கிறேன். ஆனால், காலத்தின் போக்கு விபரீதமாக உள்ளது'. உயிலினை உருவாக்கியவர் டெல்லி தர்பார் சென்று திரும்பி வந்து பல ஆண்டுகள் வாழ்ந்து இறந்துபோனார். முன்பு அவர் கொடுத்த உயிலினைத் திரும்பப் பெற்றுக்கொள்ளவில்லை. தம்முடைய உயில் வரையறுக்கப் பட்டுச் செயல்பட வேண்டுமென்று உயிலினை உருவாக்கியவர் எண்ணினாரென்றும், அவர் டெல்லியைக் காணச்சென்ற சமயத்தில் இறக்க நேரிட்டால் அவ் வுயில் செயல்பட வேண்டுமென வரையறுக்கப்பட்டதனை டெல்லியைக் காணச் சென்ற சம்பவம் சுட்டிக்காட்டுகிறது. அது நடைபெறவிருக்கும் சம்பவமாகும்.

இது நடைபெறவிருக்கும் நிகழ்ச்சியினைச் சார்ந்த உயிலன்று எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. இத் தீர்ப்புக்குக் காரணம் யாதெனில், உயிலினைத் தந்தவர் மேற்கொண்ட பயணம் அவரை உயில் எழுதத் தூண்டியதற்கு ஏதுவான சம்பவமாகும். ஆனால், அவர் திரும்பி வந்தால் அந்த உயில் தானாகவே செயல் இழக்கும் என அவர் உயிலில் குறிப்பிடவில்லை. திரும்பி

வந்தவுடன் உயிலினை மாற்றியமைக்க வேண்டுமென்று அவர் மனத்தில் எண்ணியிருக்கலாம். அவ் வெண்ணத்தைக்கொண்டு நடைபெறவிருக்கும் நிகழ்ச்சியினைச் சார்ந்த உயில் எனக் கொள்ளவியலாது. இச் சந்தர்ப்பங்களில் புதியதோர் உயிலினை உருவாக்கும் வரையில் முன்பெழுதிய உயில் செயலிலிருக்க வேண்டும் என்பது உறுதியான நோக்கமாகும்.

**6. பணிக் கடனற்ற உயில் (Inofficious Will)**

உயிலினை உருவாக்கியவர் இயற்கையான அன்பிற்கும், நீதி நெறிக் கடமைக்கும் ஒவ்வாத விதத்தில் உருவாக்கின உயில் பணிக் கடனற்ற உயில் எனப்படும். அப்படி உருவாக்கல் சொத்தின் சொந்தக்காரரின் மனநிலையைப் பொறுத்ததாகும்.

**7. இரு பிரதி உயில்**

உயில் இரு பிரதிகளாக உருவாக்கப்பட்டு, அதனை உருவாக்கியவர் ஒன்றினையும், மற்றொன்றை வேறொருவர் பொறுப்பிலும் கொடுத்துவைத்தால் அவ் வுயில் இரு பிரதி உயிலெனப் படும். உயில் மெய்ப்பிதழ் பெறுவதற்கு இரு பிரதிகளும் நீதி மன்றத்தில் தாக்கல் செய்யப்பட வேண்டும். உருவாக்கினவர் வசத்திலிருக்கும் பிரதியினை அழித்தல் உயிலினை முழுவதுமாகத் தள்ளிவிட்டதற்கு ஈடாகும்.

உயில்வழி வாரிசுரிமை இந்தியச் சொத்து வாரிசுரிமைச் சட்டத்தினுள் மிக முக்கியமானதாகும். ஏனெனில், இப் பகுதி சொத்தின் உரிமையாளர் தம் விருப்பம்போல் எவ்வழியிலும் அதனைச் செலவழிக்கலாம் என்னும் உரிமையினைப்பற்றிக் கூறு கின்றது. முதலாவதாக ஒருவர் சட்டத்தி(ற்குட்பட்டு)ன்படி உயில் எழுதத் தேவையான நிபந்தனைகளைக் கூறுகின்றது. உயில் எழுதுகின்றவர் வயதுவந்தவராகவும், திடசித்தம் அல்லது மனத்தெளிவு உடையவராகவும் இருக்கவேண்டும் என்பது அவசியம். வயதுவந்தவர் எனக் குறிப்பிடும்போது அவர் 18 வயதைத் தாண்டியவராக இருக்கவேண்டும். இந் நிபந்தனை எல்லாச் சட்டங்களுக்கும் பொதுவானதாகும். மேற்சொன்ன வயதினையடையாத வயதுவராதவர் தம்மைக் காத்துக்கொள்ள இயலாதவர் எனக் கருதப்படுகிறது.

**உயில் எழுதத் தகுதி**

பதினெட்டு வயதைத் தாண்டிய திடசித்தம் உள்ள எவரும் உயில் வழியாகத்தான் சொத்துகளுக்கு வழிசெய்யலாம். விருப்பத் தேர்வு செய்யப் போதிய திறமையும், விருப்பச் சுதந்திரமும்

உடைய எல்லோரும் உயில் வழியாகத் தங்கள் சொத்துகளுக்கு வழிசெய்யத் தகுதி பெற்றவராவர். உயில் செல்லுபடியாவதற்கு, அதனை உருவாக்கியவர் திடசித்தமும், ஞாபக சக்தியும், புரிந்து கொள்ளும் ஆற்றலும் உடையவராயிருப்பது இன்றியமையாதது. இவை அவரது வகுத்தமைக்கும் மனோதிடத்தினைச் சுட்டுகின்றன. வகைசெய்யும் மனோதிடம் என்பது, உயிலினை உருவாக்கியவர் தம்முடைய சொத்தின்பேரில் மற்றவருக்குள்ள உரிமை அனைத்தையும் நன்குணர்ந்தவராகவும் உயில்வழியாக வகைசெய்யப்படும் சொத்தின் அளவினை உணரும் தகுதியுடையவராகவும் இருக்க வேண்டுமென்பதைத் தெளிவுபடுத்துகின்றது.

பதினெட்டு வயதை அடையாதவர் வயதுவராதவர் எனக் கருதப்படுவார். வயதுவராத ஒருவர் உயில் வழியாகத் தம் சொத்தினை வகுத்தமைக்கும் தகுதி பெற்றவர் ஆகமாட்டார். ஒருவருக்கு நீதிமன்றமே காப்பாளரை அல்லது கார்டியனை நியமித்திருந்தால் அவர் 21 வயதினை அடைந்த பின்னர் வயது வந்தவராகக் கருதப்படுவார். அதுவரை அவருக்கு உயிலினை உருவாக்கும் தகுதி கிடையாது. உயில் உருவாக்க உரிமை வயதினை 1875 ஆம் ஆண்டு இந்திய உரிமை வயதுச் சட்டம் நிருணயிக்கின்றது. இச் சட்டம் உயிலினை உருவாக்கும் தகுதியைப் பொறுத்தமட்டில், இந்துக்களையும் மகமதியரையும் சேர்த்து அனைவருக்கும் பொருந்துகின்றது. வயதுவந்த திடசித்தமுடைய ஒரு மகமதியனும் உயிலினை உருவாக்கலாம். ஒரு மகமதியன் தன்னுடைய நிகரச் சொத்துகளில் (Net Estate) மூன்றிலொரு பங்கை மட்டுமே உயில்வழியாக வகுத்தமைக்க இயலும். உயில்வழிக் கொடையாகத் தன் வாரிசுகட்கே கொடுக்க இயலாது. உயில் வழியாக மூன்றிலொரு பங்கிற்கு அதிகமாக வகுத்தமைத்தாலும், கொடையாக வாரிசுகட்கே கொடுத்தாலும், அவர் இறந்தபின் ஏனைய வாரிசுகள் இசைவளிக்காவிட்டால், அவ் வுயில் செல்லுபடியாகாது.

திருமணமான ஒரு பெண் தன்னுடைய வாழ்நாளில் கணவனின் விருப்பத்தைப் பெறாமல், தன்னுடைய எந்தச் சொத்தினையும் உயில்வழியாக வகைசெய்யும் தகுதியடைவாள். மணமான பெண்களின் சொத்துச் சட்டம் உருவாக்குமுன்னர் மணமான பெண், கணவனின் அனுமதியின்றித் தன் சொத்துகளை வகைசெய்யத் தகுதியுடையவளல்லள். திருமணத்திற்குப்பின் மனைவியின் சொத்துகள் கணவனின் சொத்துகளாகிவிடுகின்றன. இந் நிலை தற்போது மாறி, ஒரு பெண் தன் கணவனின் விருப்பமின்றித் தன் சொத்துகளை வகைசெய்ய இயலும்.

செவிடரும், ஊமையரும், குருடரும் உயில் உருவாக்குவதன் மூலம் அவர்கள் என்ன செய்கிறார்கள். அதன் விளைவுகள் என்ன வென்று அறியக்கூடுமானால், அவர்களும் உயிலினை உருவாக்கத் தகுதியுடையவர்கள். குருடர் உயிலுக்குச் சான்றளிக்கவியலாது (Cannot attest a Will).

பித்துப்பிடித்தவரும் திடசித்தமுள்ளவராயிருக்கும் சமயத்தில் உயிலினை உருவாக்கலாம். ஒருவர் ஓர் ஒப்பந்தத்தில் ஈடுபடும்போது அதனைப் புரிந்துகொள்ளக்கூடியவராகவும், அதன் விளைவுகளை நேர்மையாக நிதானிக்கக் கூடியவராகவும் இருந்தால், அவர் திடசித்தம் கொண்டவரென்று இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் பன்னிரண்டாம் விதி கூறுகின்றது. ஒருவர் திடசித்தத்துடன் இருக்கும்போது ஓர் உயிலினை உருவாக்கிப் பின்னர்ப் பித்துப்பிடித்தவரானால், அவருக்குப் பித்துப்பிடித்து விட்டது என்பதனைக் கொண்டு அவரது உயிலினைத் தள்ளுபடி செய்யவியலாது.

ஒருவர் குடிபோதையினாலோ, நோயின் கொடுமையினாலோ, வயதின் முதிர்ச்சியினாலோ தாம் செய்வது இன்னதென்று அறியாத மனநிலையிலிருக்கும்போது உயிலினை உருவாக்க முடியாது.

அதிகக் குடிபோதையில், எதையும் நிதானிக்கும் சுயநினைவிழந்த நிலையில் ஒருவர் உருவாக்கின உயில் செல்லாது. இதனை அதிகக் குடியினால் ஏற்படும் மூளைக்கோளாறு எனப்படும் சன்னி (Delirium Tremens), எப்பொழுதும் குடிப்பழக்கத்திற்கு அடிமையான ஒருவர் நிலைகுலையாமலும் அல்லது மூளை குழம்பாமலும் இருந்தால் செல்லத்தக்க உயிலினை உருவாக்கலாம்.

(உ-ம்) A என்பவர் தம்மைச் சுற்றி என்ன நடக்கிறது என்று அறியக்கூடிய நிலையிலும், தெரிந்த கேள்விகட்குப் பதிலளிக்கும் நிலையிலும் இருந்தார். ஆனால் தம்முடைய சொத்துகளின் விவரத்தையோ, தம்முடைய உறவினர்களையோ, உயிலினை யார் பெயருக்கு எழுதுவது நல்லது என்பதனையோ அவர் நிதானிக்கக்கூடிய நிலையிலில்லை. A செல்லத்தகு உயிலினை உருவாக்க முடியாது.

**உயில் எழுதத் தகுதியற்றவர்**

(1) வயதுவராதவர், உயில்வழியாகத் தம் சொத்தினை வகுத்தமைக்கும் தகுதியற்றவர். பதினெட்டு வயதையடையாதவர் வயதுவராதவர் எனக் கருதப்படுவார். ஒருவருக்கு நீதி

மன்றமே காப்பாளரை நியமித்திருந்தால், அவர் 21 வயதினை அடைந்த பின்னர்தான் வயதுவந்தவராகக் கருதப்படுவார்.

(2) காப்பாளரின் நீதிமன்றச் சட்டத்தின்கீழ் வரும் ஒரு காப்பாளர் (a ward), காப்பாளர் நீதிமன்றத்தின் இசைவின்றித் தம்முடைய சொத்துகளை உயில்வழியாக வகுத்தமைக்கத் தகுதி பெற்றவரல்லர்.

**தனிச் சலுகையற்ற உயில்** (Unprivileged Will—Sec. 63)

போரிலீடுபட்டுள்ள இராணுவ வீரரோ, விமானப்படை வீரரோ, கப்பற்படை வீரரோ அல்லாத எவரும் சட்டத்தின்படி தனிச் சலுகையற்ற உயிலினை உருவாக்கலாம். இவ் வுயில் எழுத்தால் எழுதப்பட்டிருத்தல் வேண்டும். வாய்மொழி உயில் செல்லாது.

தனிச் சலுகையற்ற உயிலினை எழுத்தால் உருவாக்கியவர் அல்லது விருப்பாவணமளித்தவர் அதில் கையொப்பமிட்டிருத்தல் வேண்டும். கையொப்பமிட இயலாதவரானால் கைநாட்டைப் பதித்திருத்தல் வேண்டும். கையொப்பமிட இயலாதவர் என்பது எழுத்தறிவில்லாதவரையும், வயதின் முதிர்ச்சியினாலும் ஊனத்தினாலும் படித்தறிந்து கையொப்பமிட இயலாதவரையும் குறிக்கும். எனவே, அவர்களும்கூடக் கைநாட்டைப் பதிக்கலாம். அப்படிக் கைநாட்டைப் பதிப்பதில், அவரது விரலினைப் பிடித்துப் பதிக்க மற்றவர் உதவலாம்.

விருப்பாவணமளித்தவரின் கையொப்பம் அல்லது கைநாட்டு அல்லது அவருக்காகக் கையொப்பமிடுபவரின் கையொப்பம் உயிலின் ஆரம்பத்திலோ இறுதியிலோ இருக்கலாம். அவ்வாவணம் உயிலெனக் கொண்டு செயல்படுத்தப்பட வேண்டுமென்ற எண்ணத்தோடு உருவாக்கப்பட்டது என்று தெளிவுறும்படி கையொப்பமிடப்பட்டிருக்க வேண்டும். **அமரேந்திரநாத் எ. காசிநாத்** என்னும் வழக்கில் கையொப்பம் ஆரம்பத்திலேயே இருந்தது. அதனைச் சரி என்று ஏற்றுக் கல்கத்தா நீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளது.

உயிலில் விருப்பாவணமளித்தவரின் கையொப்பத்திற்கு இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சாட்சிகள் சான்றளித்திருக்க வேண்டும். (1) ஒவ்வொரு சாட்சியும் விருப்பாவணமளித்தவர் கையொப்பமிட்டதை அல்லது கைநாட்டிட்டதைக் கண்டிருத்தல் வேண்டும். அல்லது (2) விருப்பாவணமளித்தவரின் ஆணையின் பேரில் அவரது முன்னிலையில் அவருக்காக வேறொருவர் உயிலில்

கையெழுத்திட்டதை ஒவ்வொரு சாட்சியும் கண்டிருத்தல் வேண்டும். அல்லது (3) உயில் ஏற்கெனவே கையொப்பமிடப் பட்டிருந்தால் அக் கையொப்பம் அல்லது கைநாட்டு தம்முடையது தான் என்றும் அல்லது தமக்காக வேறொருவர் இட்ட கையொப் பம் என்றும் ஒவ்வொரு சாட்சியும் விருப்பாவணமளித்தவரின் சொந்த அங்கீகாரத்தைப் பெற்றிருத்தல் வேண்டும். இரு சாட்சி களும் ஒரே சமயத்தில் கண்டிருக்க வேண்டியதில்லை. விருப் பாவணமளித்தவர் ஒரு சாட்சியின் முன்னிலையில் கையொப்ப மிட்டு, மற்றொரு சாட்சியினிடம் தம்முடைய கையாப்பத்தினை ஒப்புக்கொண்டிருக்கலாம். ஒவ்வொரு சாட்சியும் விருப்பாவண மளித்தவரின் முன்னிலையில் உயிலில் கையொப்பமிட்டிருத்தல் வேண்டும். வேறெந்தத் தனிப்பட்ட சான்றளிப்புகளும் வேண்டிய தில்லை.

உயிலை உருவாக்கியவர் தம்முடைய உயிலிலோ, உயிலிணைப் பிலோ ஓர் ஆவணத்தையோ அல்லது முன்பு எழுதிய சட்டப்படி உருவாக்கப்படாத ஓர் உயிலையோ குறிப்பிட்டு அது தம்முடைய எண்ணத்தை வெளிப்படுத்தும் எனக் குறிப்பிட்டிருந்தால் அந்த ஆவணங்களையும் பிந்திய உயிலோடு இணைத்துக்கொள்ள வேண்டும். இதனையே கூட்டிணைவுத் தத்துவம் (Doctrine of Incorporation) என்பர். அப்படி இணைக்கப்படுவதற்குக் கீழ்க் காணும் நிபந்தனைகள் நிறைவேற்றப்படவேண்டும் :

1. அவ்வாவணம் உயிலின் தன்மைகளைக் கொண்டதாக இருக்க வேண்டும்.
2. உயில் அல்லது உயிலிணைப்பு எழுதப்பட்ட தேதியில் அவற்றில் அமலிலிருப்பதாகக் குறிப்பிடப்பட்ட ஆவணம் அமலிலிருக்க வேண்டும்.
3. உயிலில் கொடுக்கப்பட்டுள்ள விவரிப்பைக்கொண்டு அவ்வாவணம் எளிதில் கண்டுபிடிக்கக் கூடியதாக இருக்க வேண்டும்.
4. அதனை உயிலோடு இணைக்கும் எண்ணம் தெளிவாக இருத்தல் வேண்டும்.

**தனிச் சலுகை உயில்**

உயில் எழுதத் தனிச் சலுகை சிலருக்குதான் கொடுக்கப்பட் டுள்ளது. போரில் ஈடுபட்டிருக்கும் பதினெட்டு வயதையடைந்த இராணுவ வீரனோ, விமானப் படை வீரனோ, கப்பற் படை வீரனோ தனிச் சலுகை உயில் எழுதத் தகுதிபெற்றவராவர். இச் சலுகையினைப் போரில் ஈடுபட்டிருப்பவர்தாம் பயன்படுத்த

முடியும்; போர்க் காலத்தில் போரில் ஈடுபடாத வீரர் பயன்படுத்த இயலாது.

இராணுவ வீரர் ஒருவர் தம்முடைய சட்ட முகவரைக் (Solicitor) காணச் சென்று உயில் தயார்செய்யக் கூறிவிட்டு, அது தயார் செய்யப்படுமுன் சுட்டுக் கொல்லப்பட்டால் அவர் சட்ட முகவரைக் காணச் சென்றிருந்த சமயத்தில் போரில் ஈடுபட்டிருந்தார் எனக் கொள்ள முடியாது.

**தனிச் சலுகை உயில் உருவாக்கும் விதம்**

ஒரு தனிச் சலுகை உயில் வாய்மொழியாகவோ எழுத்து வடிவிலோ இருக்கலாம். வாய்மொழியாக இருப்பின், அவர் தமது விருப்பத்தை ஒரே சமயத்தில் இருக்கும் போதிய சாட்சிகளின் முன்னிலையில் தெரிவிக்கவேண்டும். வாய்மொழி உயில் உருவாக்கிய பின்னர், அதனை உருவாக்கியவர் ஒரு மாதத்துக்கு மேல் உயிருடனிருந்தால் அதனைச் செயல்படுத்த முடியாமல் விழலாகிவிடும். மேலும் அவர் தனிச் சலுகை உயில் செய்யத் தகுதியற்றவராவார்.

அஃது எழுத்து வடிவிலிருந்தால்—

(1) உருவாக்கியவர் தாமே முழுவதும் எழுதியிருந்தால், அவர் அதில் கையொப்பமிடவேண்டா அல்லது அது சான்றளிக்கப்பட வேண்டியதில்லை.

(2) வேறொருவரால் உயில் பகுதியோ, முழுவதுமோ எழுதப்பட்டிருந்தால், உயிலை உருவாக்கியவர் கையெழுத்திட வேண்டும், சான்றளிக்க வேண்டியதில்லை. உருவாக்கியவர் கையொப்பமிடாவிட்டால், அவ்வுயில் உருவாக்கியவரின் கட்டளையின்படி உருவாக்கப்பட்டது எனக் காட்டப்படல் வேண்டும் அல்லது அவர் அவ்வுயிலினைத் தம்முடையது என ஒப்புக் கொண்டதாகத் தெரிவிக்க வேண்டும்.

(3) இராணுவ வீரர் அல்லது விமானப்படை வீரர் அல்லது கப்பற்படை வீரர் ஒருவர் உயில் எழுதுவதற்கான அறிவுரைகளை எழுதிக் கொடுத்திருந்து அதனை உருவாக்கிச் செயல்படுத்துமுன் இறந்துவிட்டால், அவ்வறிவுரைகளையே உயிலாகக் கொள்ளலாம்.

(4) மேற்சொன்ன வீரர் உயிலை எழுத வாய்மொழி அறிவுரைகளை இரு சாட்சிகளின் முன்னிலையில் கொடுத்திருந்து அவை அவரது வாழ்நாளிலேயே

எழுதப்பட்டிருந்து, உயிலினை உருவாக்கிச் செயல் படுத்துமுன் இறந்துவிட்டால் அவ் வறிவுரைகள் அவர் முன்னிலையில் எழுதப்பட்டு, வாசிக்கப்படாவிட்டாலும் அவைகளை உயிலாகக் கொள்ளலாம்.

**சான்றொப்பமிடும் சாட்சிகளைப் பற்றியது**

உயிலுக்குச் சான்றொப்பமிட எவருக்கும் தகுதியுண்டு. வயதுவராத ஒருவரும்கூடச் சான்றளிக்கும் சாட்சியாக இருக்கலாமெனச் சாட்சியங்களின் சட்டம் பிரிவு 118 கூறுகிறது. தாம் சான்றொப்பமிடும் உயிலின் பொருளடக்கம் என்னவென்று அவருக்குத் தெரியவேண்டிய அவசியமில்லை. சான்றளிப்பதைக் கொண்டு அவருக்கு உயிலின் பொருளடக்கம் அனைத்தும் தெரியுமென்று அவரைக் கட்டுப்படுத்தவியலாது. உயிலினை உருவாக்கியவர் உயிலில் கையொப்பமிடுவதை அவர் சாட்சியாகக் கவனிப்பார். உயிலினை உருவாக்கியவரை அடையாளம் காட்டவும், அவருக்கு உயிலெழுத எண்ணமிருந்தது என்பவற்றை உறுதிப்படுத்துவதே சான்று அளிப்பதன் நோக்கமாகும். உயிலில் பெயர் குறிப்பிட்டுள்ள நிறைவேற்றாளருங்கூட அவ் வுயிலுக்குச் சான்றொப்பமிடுபவராகவோ, உயில்வழி உரிமை பெறுபவராகவோ, பயனடைபவராகவோ இருக்கலாம். உயிலுக்குச் சான்றொப்பமிடும் மனைவிக்கோ, கணவனுக்கோ அல்லது அவர்கள் இருவர் வழியாக உரிமை பெறும் எவருக்குமோ கொடுக்கப்பட்ட கொடை செல்லுபடியாகாது.

**உதாரணம் :**

(1) A என்பவர் தம்முடைய உயில்வழியாக உயிலுக்குச் சான்றொப்பமிட்ட சாட்சிகளில் ஒருவரான B என்பவருக்கு ரூ. 1000-த்தை உயில்வழிக் கொடையாகக் கொடுக்கின்றார். உயில் செல்லத்தக்கது. ஆனால், ரூ. 1000-த்தைப் பெற B-க்கு உரிமையில்லை.

(2) A என்பவர் உருவாக்கின உயிலுக்கு B-யும், C-யும் சான்றொப்பம் இடுகின்றனர். B-யின் மனைவியான D-என்பவருக்கு உயில்வழிக் கொடையாக ரூ. 1000-மும், C-யின் மகனான E-க்கு ரூ. 1000-மும் கொடுக்கப்பட்டது. உயில் செல்லத்தக்கது. E-க்கு கொடுத்த கொடையும் செல்லத்தக்கது. ஆனால் D-க்குக் கொடுத்த கொடை செல்லாது. சான்றொப்பமிடும் சாட்சியின் மகனுக்குக் கொடுக்கப்பட்ட கொடை சான்றளிப்பவரின் மூலமாக உரிமை பெறுபவராக அல்லாமல், சுயேச்சையாகக் கொடுக்கப் பட்டதால் செல்லுமென Mrs. I E. மூர் எ. E. M. டர்னர், AIR 1937 L 292 என்னும் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

(3) A என்பவர் உருவாக்கிய உயிலிற்கு B-யும், C-யும் சான்றொப்பமிடுகின்றனர். B-க்கு ரூ. 1000 உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டது. A இறந்துவிடுகிறார். B அக் கொடையினைப் பெறாமல் E என்பவரைத் தம்முடைய வாரிசாக விட்டு இறந்துவிடுகிறார். B-யின் வழியாக E உரிமை பெறுவதால் அவர் அக் கொடையினைப் பெற இயலாது.

(4) A என்பவர் தமது உயிலுக்குச் சான்றொப்பமிட்ட சாட்சியான B-க்கு ஓர் உயில்வழிக் கொடையினைக் கொடுத்தார். பின்னர் ஓர் உயிலிணைப்பை உருவாக்கி அதில் B-க்குக் கொடுத்த கொடையினை உறுதியாக்கினார். B உயிலிணைப்பிற்குச் சான்றொப்பமிட்ட சாட்சியல்லர். உயிலிணைப்பின்படி உயில் வழிக் கொடைக்கு B உரிமையாளராவார் (Anderson *vs.* Anderson).

(5) A என்பவர் தமது உயில்வழியாக உயில்வழிக் கொடையினை B என்பவருக்குக் கொடுத்தார். C-யும், D-யும் அதற்குச் சான்று அளித்தனர். பின்னர் அவ் வுயிலினை உறுதிப்படுத்தும் பொருட்டு உருவாக்கின உயிலிணைப்பிற்கு B-யும் C-யும் சான்றளித்தனர். உயிலிணைப்பிற்குச் சான்றொப்பமிடுவதால் B தமக்குக் கொடுத்த கொடையினை இழக்கமாட்டார்.

(6) A என்பவர் தம்முடைய உயில்மூலமாக B-க்கு ரூ. 1000 கொடுத்தார். அவ் வுயிலுக்கு C-யும், D-யும் சான்றளித்தனர், பின்னர் B, C-யைத் திருமணம் செய்துகொள்கிறார். அதனால் B-க்குக் கொடையாகக் கொடுத்த ரூ. 1000 செல்லாததாகி விடுமா? சான்றொப்பமிட்ட பின்னர் நடைபெற்ற திருமணம், கொடுத்த கொடையினை எவ்விதத்திலும் பாதிக்காது (Thorpe *vs.* Berstwick).

(7) A என்ற ஓர் இந்து உருவாக்கிய உயிலில், 'இவ் வுயிலினைத் தயாரித்துச் சான்றொப்பமிட்ட சட்ட முகவரின் நன்மைக்காக' என்று கண்டிருந்தது. அந்தச் சட்ட முகவருக்கு, அதன் பயன் கிட்டாமல் போகுமா? இந்த வாரிசு உரிமைச் சட்டம் பிரிவு 67, இந்துக்களுக்குப் பொருந்தாது. இந்து உயில் வழிச் சட்டத்தின்படி ஓர் இந்துவின் உயிலுக்குச் சான்றொப்ப மிட்ட சாட்சிக்குக் கொடுத்த கொடையினை அவர் இழப்ப தில்லை(பாய் கங்காபாய் எ. பகவன்தாஸ்).

# 6. உயிலினை ரத்துச்செய்தல்

## (Revocation of Wills)

ஓர் உயிலினை உருவாக்கிய பின்னர் அதனை மாற்றியமைக்க வியலும். இத் தன்மையே உயிலினை வேறு ஆவணங்களினின்று வேறுபடுத்திக் காட்டுகின்றது. ஓர் உயில் உருவாக்கியவுடன் உருவாக்கியவரின் வாழ்நாளில் செயல்படுவதில்லை; அவர் இறந்த பின்னர்தான் செயல்படுகிறது. அதனால், உருவாக்கிய வரின் வாழ்நாளில் ஓர் உயில், நிலையற்ற அல்லது மாற்றியமைக் கும் தன்மையைக் கொண்டது எனக் கூறல் மிகையாகாது. அதனை உருவாக்கியவர் அவரது வாழ்நாளில் எப்போது வேண்டுமானாலும் மாற்றியமைக்கலாம்.

ஒருவர் தம்முடைய வாழ்நாளுக்குப் பிறகு தம்முடைய சொத்துகள் எப்படிப் பிரிக்கப்பட வேண்டும் என்று தீர்மானித்து, அத் தீர்மானத்தை எழுத்து வடிவில் உருவாக்கி ஆவணமாக வைத்துள்ளதே உயில். காலப்போக்கினாலும், இயற்கையின் விளைவுகளினாலும், குடும்பச் சூழ்நிலைகளினால் ஏற்பட்ட விளைவுகளினாலும் அவர் மேற்கொண்ட தீர்மானத்தை நிறை வேற்றவியலாத நிலையில் இருக்கலாம். எடுத்துக்காட்டாக ஒருவர் தம்முடைய மக்களிலொருவருக்குத் தம்முடைய சொத்துகள் அனைத்தையும் உயில்வழியாக எழுதி வைத்துவிட்டார் என்று வைத்துக்கொள்வோம். உரியவரின் வாழ்நாளிலேயே அம் மகன் இறந்துவிட்டால், உரியவர் இறந்தபின் அவரின் உயிலினைச் செயல்படுத்தவியலாது. இச் சந்தர்ப்பத்தில் அவர் அவ் வுயிலினை மாற்றியமைக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. மேலும், உயிலினை மாற்றியமைக்க வியலாதென்றால் அது, சொத்து மாற்றுச் சட்டம் உரியவருக்கு உறுதியளிக்கும் உரிமையினைப் பாதிக்கும். அச் சட்டத்தின்படி உரியவர் தம்முடைய சொத்துகளை எப்படி வேண்டுமானாலும் அனுபவிக்கலாம். எனவே, உயிலினை உருவாக்கியவர் அதனை மாற்றவியலாது என்னும் கொள்கை, சொத்துமாற்றுச் சட்டம் அவருக்களிக்கும் உரிமைக்கு முரணானது. சட்டங்களனைத்தையும் ஒன்றை யொன்று அனுசரித்து இசைந்தே செல்லவேண்டும். ஆகையால், உயில் மாற்றியமைக்கும் தன்மையயுடையது.

ஓர் உயில் மாற்றியமைக்கத் தக்கதன்று எனச் சிறப்பாகக் குறிப்பிட்டிருந்தாலுங்கூட அஃது ஒரு விருப்பாவணமாக இருந்தால் உருவாக்கியவர் அதனை மாற்றியமைக்கக்கூடும். ஒருவர் மற்றொருவரிடம் உயிலினை மாற்றி அமைப்பதில்லையென உடன்பாடு செய்திருந்து அவ் வுடன்பாட்டை மீறினால், அவ் வுடன்பாட்டினைச் சட்டப்படி குறிப்பாகச் செயல்படுத்தக் கோர இயலாவிட்டாலும், பாதிக்கப்பட்டவர் நட்டஈடு கோரி வழக்குத் தொடரலாம். அதாவது, அவர் உயிலினை மாற்றியமைத்தலை அவ் வுடன்பாடு எவ்விதத்திலும் தடைசெய்யாது.

மார்ஸ்லேண்ட் என்பவரின் வழக்கில், சொத்தின் சொந்தக்காரர் ஒருவர் ஓர் உயிலினை உருவாக்கி அதன் மூலமாகத் தம் மனைவிக்கும் மக்கட்கும் சில கொடைகளைக் கொடுத்தார். அதன் பின்னர்த் தாமும் தம்முடைய மனைவியும் பிரிந்து வாழ உருவாக்கிய ஆவணத்தில் கணவன், மனைவிக்கும் மக்கட்கும் கொடுத்த கொடையினைப் பாதிக்குமாறு அவ் வுயிலினை மாற்றவோ, மாற்றியமைக்கவோ கூடாது என ஓர் உடன்பாடு இருந்தது. மனைவி இறந்தபின் கணவன் மறுமணம் செய்து கொண்டார். மறுமணம் அவரது உயிலினை மாற்றிவிட்டதா என்ற வினாவெழுந்தது. உயில் அழிக்கப்பட்டது. ஆனால் உடன்பாடு மீறப்படவில்லை. உயிலினை உருவாக்கியவரின் வாழ்நாளில் உயில் அழிக்கப்பட்டதற்கான வழக்குத் தொடரவியலாது.

பரஸ்பர உயிலும், இணைவுயிலும் உயிலினை உருவாக்கிய இருவரிலொருவர் இறந்தபின் உயிருடனிருப்பவர் உயிலில் கண்டுள்ளபடி பயனையடைந்திருந்தால் அவ் வுயிலினை மாற்றியமைக்கவியலாது.

உயிலினை இருவிதத்தில் மாற்றியமைக்கவியலும். (1) சட்டத்தின் நடைமுறையில் ரத்துச்செய்தல்; (2) ஆவணத்தில் ஈடுபாடு உடையோர் செயல்முறையில் ரத்துச்செய்தல். இரண்டாம் வகை இரு உட்பிரிவுகளைக் கொண்டது. அவை :

(a) புதியதோர் உயில்வழி ரத்துச்செய்தல்.

(b) அழித்தலின்மூலம் ரத்துச்செய்தல்.

**சட்டத்தின் நடைமுறையில் ரத்துச்செய்தல்**

உயிலினை உருவாக்கியவர் அதனை எப்போது வேண்டுமானாலும் ரத்துச்செய்யலாம். உயிலினை உருவாக்கிய ஆணோ,

பெண்ணோ அதன் பின்னர் திருமணம் செய்துகொண்டால், அவர் உருவாக்கிய உயிலினைச் செயல்படுத்தவியலாது; அதனை ரத்துச் செய்தலுக்கு அல்லது அழித்தலுக்கு ஈடாகும். இதுவே சட்டத்தின் நடைமுறையில் ரத்துச்செய்தலாகும். திருமணத்தினால் உயிலினை உருவாக்கியவரின் நிலையில் மாறுதல்கள் ஏற்படுகின்றன. புதியதாக அவருக்கேற்பட்ட சட்டப்பிணைப்பும் கடமைகளும் முன்பு ஏற்படுத்திய உயிலினைச் செயல்படுத்த விழையமாட்டாரென யூகிக்கச் செய்கின்றன. திருமணம் செய்துகொள்ளும் அவர், அதற்குத் தகுதி படைத்தவராக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் திருமணத்தினால் அவரது உயில் அழிக்கப்பட்டது எனக் கொள்ளவியலாது.

ஒருவரால் உருவாக்கப்பட்ட எந்த உயிலும் தனிச் சலுகை உயிலானாலும் அல்லது தனிச் சலுகையற்ற உயிலானாலும்கூட, அவருக்குத் திருமணமானவுடன் அழிந்துவிடும். திருமணம் மட்டு மல்லாமல் மறுமணமும்கூட உயிலினை அழிக்கும். திருமணத்திற்குப் பின்னரும், மறுமணத்திற்கு முன்னரும் முதல் மனைவியின் வாழ்நாளில் உருவாக்கப்பட்ட உயில் விழலாகும் அல்லது அழிக்கப்பட்டதெனக் கல்கத்தா உயர்நீதி மன்றம் கேபிரியேல் எ. மொர்தகாய் என்னும் வழக்கில் தீர்ப்பளித்துள்ளது.

(1) தமதல்லாத சொத்திற்குத் தமக்குக் கொடுக்கப்பட்ட வாரிசு நியமன அதிகாரத்தைப் பயன்படுத்தி ஓர் உயிலினை உருவாக்கினால் அவர் மணம் செய்துகொள்வதால் அவ் வுயில் அழிந்துவிடாது. வாரிசு நியமன அதிகாரம் (Power of Appointment) என்றால் என்ன? ஒரு சொத்தின்பேரில் எந்தவித உரிமையுமல்லாத ஒருவருக்கு அச் சொத்தினை அவரது வாழ்நாள்வரை அனுபவிக்கக் கொடுத்து, அவருக்குப்பின் யாருக்குச் சொத்துச் செல்லவேண்டும் என்று குறிக்கின்ற அதிகாரத்தைக் கொடுப்பதே வாரிசு நியமன அதிகாரமாகும். இது, உயிலினை ரத்துச்செய்தலுக்கு விதிவிலக்காகும்.

(2) இருவர் பரஸ்பர உயிலினை ஏற்படுத்தினால் ஒருவரது திருமணம் மற்றவரின் உயிலினை ரத்துச்செய்யாது.

(3) ஓர் இந்து ஏற்படுத்திய உயிலினை அவரது திருமணம் ரத்துச்செய்யாது.

(4) ஒரு முசுலிம் உருவாக்கிய உயிலினை அவரது திருமணம் ரத்துச்செய்யாது.

(5) விழலான திருமணம் (Void Marriage) உயிலினை ரத்துச்செய்யாது.

ஆவணத்தில் ஈடுபாடுடையோர் செயல்முறையில் ரத்துச்செய்தல்.
இவ்வகை இரு உட்பிரிவுகளைக் கொண்டது. அவை :

(a) புதியதோர் உயில்வழி ரத்துச்செய்தல்.

(b) அழித்தலின் மூலம் ரத்துச்செய்தல்.

**(a) புதியதோர் உயில்வழி ரத்துச்செய்தல் :** பின்னர் உருவாக்கும் புதிய உயில்மூலமாக, முன்னர் உருவாக்கிய உயிலினை மாற்றியமைக்கலாம் அல்லது செயல்படாமல் அழிக்கலாம். புதிய உயில் பழைய உயிலினை மாற்றியமைக்கின்றது எனத் தெளிவாகவும், குறிப்பாகவும் காட்டப்பட்டிருத்தல் வேண்டும். உருவாக்கியவரின் கடைசி உயிலே முந்திய முரணான உயில்களைத் தள்ளிவிட்டுச் செயல்படும் என்பது பொது விதி. ஒருவன் இரு உயில்களை விட்டு இறக்கவியலாது என்பது பொதுமொழி. பிறிதோர் உயிலினை உருவாக்கியதால், முந்திய உயிலும் பிந்திய உயிலும் முரண்பட்டு ஒன்றாக இயைந்து செயல்படாவிட்டாலும் அல்லது முந்திய உயிலினை மாற்றியமைக்கின்ற தெனக் குறிப்பாகக் குறிப்பிடாவிட்டாலும், புதிய உயில் முந்திய உயிலினை ரத்துச்செய்வதில்லை. பிந்திய உயில் முந்திய உயிலினை ரத்துச்செய்கிறது எனக் கூறுபவர் அதனை நிரூபிக்க வேண்டும். உண்மைக்கு மாறான கருத்தோடு, புதிய உயில் உருவாக்கப்பட்டிருந்தால் அது முந்திய உயிலினை ரத்துச்செய்யாது.

## கேம்பல் எ. பிராஞ்ச்

ஒருவர் உயில்வழியாகத் தம்முடைய சகோதரியின் பேரப்பிள்ளைகட்குத் தம்முடைய சொத்துகளைக் கொடையாகக் கொடுத்தார். பின்னர் ஓர் உயிலினைப்பின் மூலமாக, அக் கொடையைப் பெறும் பேரப் பிள்ளைகள் இறந்துவிட்டதாக அக் கொடையினை மாற்றியமைத்தார். அப் பேரப்பிள்ளைகள் இறக்கவில்லையென நிரூபிக்கப்பட்டது. உயிலினை ரத்துச் செய்யக் கூறிய காரணம் பொய்யானதால் அவ் வுயில் கொடை ரத்துச் செய்யப்படவில்லையெனத் திர்ப்பளிக்கப்பட்டது.

**(b). அழித்தலின்மூலம் ரத்துச்செய்தல் :** உயிலினை அழிக்கும் அல்லது ரத்துச்செய்யும் எண்ணத்தோடு அதனை உருவாக்கியவரோ, அவரது ஆணையின்படி அவரது முன்னிலையில் வேறொருவரோ உயிலினைத் தீயிட்டுக் கொளுத்தினாலோ, கிழித்தாலோ அவ் வுயில் அழிந்துவிடும். தீயிட்டுக் கொளுத்துவது என்றால் உயில் முழுவதும் எரிந்துவிட வேண்டுமென்பதில்லை. உண்மையிலேயே தீயிட்டுக் கொளுத்தப்பட்டது என்பதற்காக

இரளவிற்கு எரிந்திருக்க வேண்டும். உயிலினை உருவாக்கியவர் அதனை அழிக்கும் நோக்கத்தோடு தம்முடைய கையெழுத்தையோ, சாட்சிகளின் கையெழுத்தையோ வெட்டி எடுத்தால் உயில் முழுவதும் அழிக்கப்பட்டதாகக் கருதவேண்டும். வெட்டுதலும் கிழித்தலுக்குச் சமமாகும். கிழித்தலென்றால் உயிலினைச் சுக்குநூறாகக் கிழிக்க வேண்டுமென்பதில்லை. அழிக்கும் நோக்கத்தோடு சிறிது கிழித்தாலுமே போதும். மூன்றாம் நபர் உயிலினைக் கிழித்தாலோ, கொளுத்தினாலோ அச் செய்கை உயிலினை உருவாக்கியவரின் ஆணையின்படியும் அவர் முன்னிலையிலும் நடைபெற வேண்டும். இருவகையிலும் உயிலினை முழுவதுமாக அழிக்கும் நோக்கமிருக்க (Animus Revocandi) வேண்டும். உயிலின் குறுக்கே கோடுகளிட்டு அதனை ரத்துச் செய்வதன்மூலம் உயிலினை அழிக்க முடியாது.

## பிரண்ட் எ. பிரண்ட்

(1) A என்பவர் பித்துப்பிடித்த நிலையில் தம்முடைய உயிலைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்துவிட்டார். எல்லாத் துண்டுகளும் பத்திரமாக வைக்கப்பட்டு அவருக்கு மனத்தெளிவு ஏற்பட்டவுடன் அவர் உயிலை என்ன செய்தாரெனக் கூறினவுடன் புதிய உயிலை உருவாக்குவதாகக் கூறினார். புதிய உயிலை உருவாக்காமலே A இறந்துவிட்டார். அவரது உயில் அழிக்கப்படவில்லை. காரணமென்னவெனில் அதனைக் கிழித்தபோது அவருக்கு அதனை அழிக்கும் நோக்கமில்லை (Animus Revocandi) என்பதே.

(2) A என்பவர் B மற்றும் C என்பவர்களின் முன்னிலையில், 'நான் என்னுடைய உயிலினை ரத்துச்செய்து விட்டேன்' என்று கூறினார். அவ் வுயில் ரத்துச்செய்யபபடவிலலை. வாய்மொழியாக ஓர் உயிலினை மாற்றியமைக்கவியலாது.

(3) சென்னையில் வசிக்கும் A என்பவர், சேலத்திலிருக்கும் B என்னும் சட்ட முகவருக்குத தம்முடைய உயிலினை அழித்துவிடும்படி கடிதம் எழுதினார். B-யும் அப்படியே அழித்துவிட்டார். அவ் வுயில் அழிக்கப்படவில்லை. அதனின் நகலைக் கொண்டு உயில் மெய்ப்பிதழ் பெறலாம். காரணமென்னவெனில் உயிலினை உருவாக்கியவரின் முன்னிலையில்தான் உயில் வேறொருவரால் அழிக்கப்படவேண்டும்.

## காரசேட்ஜீ எ. கேகோபாத்

5-6-1919 அன்று J என்னும் மாது ஓர் உயிலினை உருவாக்கித் தன்னுடைய வழக்குரைஞர்களிடம் கொடுத்து வைததாள்.

1926ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் அவ் வுயிலினைக் கொணரச் செய்து அதன் முதல் பக்கத்தின் குறுக்கே இரு கோடுகளிட்டு அதன் தலைப்பில் இவ் வுயில் ரத்துச்செய்யப்பட்டது என எழுதிக் கையொப்பமிட்டாள். மற்றைய பகுதிகள் ரத்துச்செய்யப்பட வில்லை. அவள் 1927-ல் இறந்த பின்னர், அதன் நிறைவேற்றாளர் கள் உயில் மெய்ப்பிதழ் கோரினர். J-யின் மகன் அவ் வுயில் ரத்துச்செய்யப்பட்டதென எதிர்த்தார். அவ் வுயில் ரத்துச் செய்யப்படவில்லை எனத் தீர்ப்பளித்து நீதிமன்றம் உயில் மெய்ப் பிதழ் அளித்தது.

(4) உயிலினை உருவாக்கியவர் அதன் குறுக்கே கோடிட்டு 'இவ் வுயில் அழிக்கப்பட்டுவிட்டது' என அதன் பின்புறத்தில் எழுதினார். அவ் வுயில் அழிக்கப்படவில்லை. காரணமென்ன வெனில் அவர் எழுதிக் கையொப்பமிட்டு அதற்கு இருவர் சான்றளிக்க வேண்டும்.

**விளைவு :** பிந்திய உயில் மூலம் முந்திய உயிலினை அழித் தால் முந்திய உயில் செயல்படாது. ஆனால், பிந்திய உயிலில் சொத்துகளின் விவரம் சரிவரக் குறிப்பிடப்படாவிட்டால் அதனைக் கண்டுபிடிக்க, முந்திய உயிலை உபயோகிக்கலாம்.

**முதல்நிலை உயிலைத் தழுவிய ரத்துச்செய்யும் தத்துவம் (Doctrine of Dependent Relative Revocation)**

முன்னர் உருவாக்கிய உயிலினை உறுதிப்படுத்தும் நோக்கத் தோடு பிந்திய உயிலினை ரத்துச்செய்தால், அந் நோக்கம் ஒரு நிபந்தனைக் குட்பட்டதாகும். உறுதிப்படுத்தவிருக்கும உயிலின் செல்லும் தன்மையே அந் நிபந்தனையாகும். பிந்திய உயில் சரிவர உருவாக்கப்படாமலிருந்தால் முந்திய உயிலினை ரத்துச் செய்யவியலாது. முந்திய உயில் சட்டப்படி உருவாக்கப்பட் டிருந்தால் ஒழியப் பிந்திய உயிலினை ரத்துச்செய்வதன் மூலம் அதனை உறுதிப்படுத்தவியலாது. இதனை முதல்நிலை உயிலைத் தழுவிய ரத்துச்செய்யும் தத்துவம் எனக் கூறுவர். இத் தத்துவம் உயிலினை உருவாக்கியவர் அவ் வாவணத்தை அழிக்கும் செயகைகளனைத்தும் இருபொருள் மயக்கங்கொள்ளும் கொள் கையினைச்சார்ந்தது. இத் தத்துவத்தின் விதியினை இருவகையில் பயன்படுத்தலாம்.

முதலாவதாக, முந்திய உயிலினை ரத்துச்செய்தல் அதற்கு மாற்றாக உருவாக்கவிருக்கும் உயிலினைச் சார்ந்தது அல்லது முந்திய உயிலின் செல்லுந்தன்மையைப்பற்றிய தவறான எண்ணத்தைச் சார்ந்தது. அதாவது, உறுதிப்படுத்தவியலாத

முந்திய உயிலினை உறுதிப்படுத்தும் நோக்கத்தோடு பிந்திய உயிலினை ரத்துச்செய்தால் அது ரத்துச்செய்யப்பட்டதாகாது.

இரண்டாவதாக, புதியதோர் உயிலினை உருவாக்கும் பொருட்டு முந்திய உயிலினை அழிக்கும் எண்ணத்தோடு அழித்திருந்து, புதிய உயில் முறைப்படி உருவாக்கப்படாததாலும் அல்லது சான்றளிக்கப்படாததாலும் சட்டப்படி செல்லாது போனால், முந்திய உயில் இன்னும் செயலில் இருந்துகொண்டுதான் உள்ளது எனக் கொள்ளவேண்டும். ஏனெனில், முந்திய உயில் செயலிழக்கும் தன்மை புதிய உயிலின் செயலாற்றும் தன்மையினைச் சார்ந்தது என்பதே உட்கருத்தாகும்.

கேரள உயர்நீதிமன்றம் இத் தத்துவத்தினை அந்தோனி எ. மேத்யு, AIR 1962 Ker. 48 என்னும் வழக்கில் பயன்படுத்தியுள்ளது. நான்கு விருப்பாவணங்களை உருவாக்கிவிட்டு விருப்புறுதியளித்தவர் இறந்துவிட்டார் முதலாவது ஆவணம் 23-1-1953-ல் எழுதப்பட்ட உயிலாகும். பின்னர் 26-2-1953, 28-2-1953 தேதிகளில் இரு உயிலிணைப்புகளை உருவாக்கினார். பின்னர் 26-3-1953-ல் புதியதோர் உயிலினை உருவாக்கினார். நான்கு ஆவணங்களும் உண்மையென நிரூபிக்கப்பட்டன. அவரால் 23-1-1953, 26-3-1953 தேதிகளில் உருவாக்கப்பட்ட இரு உயில்களின் முக்கியப் பாகங்களில் அறக்கொடையெனக் குறிப்பிடப்பட்டிருந்தது. விருப்புறுதியளித்தவர் 11-4-1953 அன்று இறந்துவிட்டார். முதல் உயில் உருவாக்கியபின், பன்னிரண்டு மாதங்கள் கழித்தும், இரண்டாம் உயில் உருவாக்கிய பன்னிரண்டு மாதங்களுக்குள்ளும் அவர் இறந்துவிட்டார். முதலாவது உருவாக்கப்பட்ட உயிலினையும், இரு உயிலிணைப்புகளையும் இரண்டாவது உருவாக்கப்பட்ட உயில் குறிப்பாக ரத்துச்செய்தது. இரண்டாம் உயில், இந்திய வாரிசுரிமைச் சட்டம் பிரிவு 118-க்கு முரணானது. எனவே, இவ் வழக்கில் முதல்நிலை உயிலைத் தழுவிய ரத்துச்செய்யும் தத்துவம் பயன்படும். செல்லுடைமையாகும் புதியதோர் உயில் ஏற்படுத்திவிட்ட தவறான எண்ணத்தோடு விருப்புறுதியளித்தவர் தம்முடைய 23-1-53-ல் உருவாக்கிய முந்திய உயிலினை, ரத்துச்செய்தார். இரண்டாவது உயிலில் கண்ட அறக்கட்டளை, ரத்துச்செய்தல் ஆகிய சொற்களை நீக்கி, உயிலிணைப்பில் கூறப்பட்ட கொடையினை மேற்கொண்டு, நான்கு ஆவணங்களையும் சேர்த்து உயில் மெய்ப்பிதழ் அளிக்க வேண்டுமென்று தீர்ப்பளிக்கப்பட்டது.

ரத்துச்செய்யும் எண்ணத்தோடு ஓர் உயிலினைச் சிதைத்த பின்னர், நீண்ட நாள்களாகியும் புதியதோர் உயிலினை உருவாக்

காமலே விருப்புறுதியளித்தவர் இறந்துவிட்டால் சிதைக்கப்பட்ட உயில் ரத்துச்செய்யப்படவில்லை எனப் புரோவ் ஆம் என்பவரின் சொத்து வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது (1952) 1 All ER. P. 110.

(உ-ம்) In the Estate of Bolting (1951) 2 All ER. 997.

A என்பவர் 1947ஆம் ஆண்டு ஓர் உயில் உருவாக்கினார். புதியதோர் உயிலினை 1949ஆம் ஆண்டு உருவாக்கினார். அப் புதிய உயிலுக்குச் சான்றளிக்கப்படவில்லை. 1947ஆம் ஆண்டு உருவாக்கிய உயில் விருப்பாவணமளித்தவரின் வசத்திலிருந்து காணாமற்போய்விட்டது. அவர் இறந்த பிறகுங்கூட அது கிடைக்கவில்லை. அவ் வுயிலின் முழுவதுமாக எழுதப்பட்ட முன் வரைவு (Draft) மட்டும் கிடைத்தது. வாதி 1947-ன் உயிலை நிலை நாட்ட விரும்பினார். 1949ஆம் ஆண்டு புதியதோர் உயிலினை உருவாக்க வேண்டுமென்பதே விருப்பாவணமளித்தவரின் நோக்கம். அந்நோக்கம் நிறைவேறாததால் முதல்நிலை உயிலைத் தழுவிய ரத்துச்செய்யும் தத்துவத்தினைப் பயன்படுத்தி 1947-ல் உருவாக்கப்பட்ட உயில் செயலிழக்கவில்லை எனத் தீர்ப்பளிக்கப் பட்டது.

**ரத்துச்செய்தலின் சாட்சியங்கள்**

உயிலினை ரத்துச்செய்யும் எண்ணத்தினை நிச்சயமான, தெளிவான, உறுதியான வாய்மொழிச் சாட்சியங்களைக் கொண்டு நிரூபிக்கலாம். விருப்பாவணமளித்தவர் இறந்தபின் உயில் கிழிந்து காணப்பட்டு, அதனை ரத்துச்செய்ய அவருக்கு நோக்கமிருந்தது என நிரூபிக்க நேர்முகச் சாட்சியங்களில்லாம லிருந்தால் அதனை ரத்துச்செய்யும் எண்ணம் அவருக்கிருந்தது என்பது யூகம் (Halsbury Vol.34 p.87).

தனிச் சலுகையற்ற உயிலினை உருவாக்கிய பின்னர் ஏற்படுத்தும் மாற்றங்கள் இடைவரிச் சேர்க்கை, அழித்தல் எதுவானாலும் அதனருகில் ஓரத்தில் விருப்பாவணமளித்தவரும், சான்றளிப்பவரும் கையெழுத்திட்டு அம் மாற்றத்திற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும் அல்லது பின்னர் ஏற்படுத்திய மாற்றங்கள் உயிலின்கீழே குறிப்பிடப்பட்டு விருப்பாவணமளித்தவரும் சாட்சி களும் கையெழுத்திட்டிருந்தாலும் போதும். சாட்சிகள் மட்டும் கையெழுத்திட்டிருந்தால் போதாது.

(உ-ம்) (1) A என்பவர் உயிலின் மூலமாக B-க்கு ரூ. 1000-த் தைக் கொடையாகக் கொடுத்தார். பின்னர் அவர் ரூ. 1000 என்பதை ரூ. 500 ஆகத் திருத்தினார். அம் மாற்றத்திற்கு அவர் கையெழுத்திடவில்லை. அம் மாற்றம் செல்லுபடியாகாது.

முன்னர்க் கொடுத்த கொடையே செல்லும். B ரூ. 1000-ஐப் பெறுவார்.

(2) A என்பவர் தம்முடைய உயிலில் 'நான் B-க்கு ரூ. 1000-ஐக் கொடையாகக் கொடுக்கிறேன்' என எழுதிக் கொடையாகக் கொடுத்தார். பின்னர் ஒரு காகிதத் துண்டை அவ் வெழுத்துகளின்மீது ஒட்டி 'நான் C-க்கு ரூ. 500-ஐக் கொடையாகக் கொடுக்கிறேன்' என எழுதினார். அப்படி ஒட்டியதற்கு அவர் கையெழுத்திடவில்லை. C-க்குக் கொடுத்த கொடை செல்லுபடியாகாது. ஒட்டிய காதிதத் துண்டின்கீழ் என்னவிருக்கிறது என அறிய அதனைப் பிரித்தெடுக்கக் கட்டளையிடவியலாது. B-க்கும் ஒன்றும் கிடைக்காது. ஆனால், பெயரை விட்டுவிட்டுத் தொகையின்மீது மட்டும் ஒட்டியிருந்தால் முதல் நிலை உயிலினைத் தழுவிய ரத்துச்செய்யும் கொள்கையைக் கொண்டு ஒட்டிய காகிதத் துண்டின்கீழ் என்னவிருக்கிறது என அறிய நீதிமன்றம் அதனைப் பிரித்தெடுக்கலாம்.

(3) A என்பவர் தம்முடைய உயிலில் சில மாற்றங்களைச் செய்கிறார். அம் மாற்றத்திற்கு அருகில் கையெழுத்திடவில்லை. பின்னர் அவ் வுயிலுக்கு உயிலிணைப்பினை உருவாக்கி அதில் உயிலில் ஏற்படுத்திய மாற்றங்களைக் குறிப்பிட்டு உறுதிப்படுத்தினார். அம் மாற்றங்களைச் செயல்படுத்தவியலும்.

(4) A என்பவர் நான்கு தாள்கள் கொண்ட ஓர் உயிலினைத் தாமே எழுதி, ஒரு குண்டூசி கொண்டு இணைத்துத் தேதியையும் குறிப்பிட்டார். பின்னர் இரண்டாம் தாளைப் பிரித்தெடுத்து அதற்குப் பதிலாக வேறொரு தாளை இணைத்தார். உயில் உருவாக்கப்பட்ட தேதியில் பிறவாத ஒருவருக்குக் கொடை கொடுக்கப்பட்டதாக அப் புதிய தாளில் எழுதப்பட்டிருந்தது. புதிதாக இணைக்கப்பட்ட தாளுக்கு உயில் மெய்ப்பிதழ் அளிக்க முடியாது எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

தனிச் சலுகையற்ற உயில் சட்டத்தின் நடைமுறையிலும், உயிலில் ஈடுபாடுடையோரின் செய்கையின் மூலமாகவும் ரத்துச் செய்ய முடியும்.

தனிச் சலுகை உயிலினை உயிலில் ஈடுபாடுடையோர் செயல் முறையிலும் ரத்துச்செய்யலாம். அது மூவகைப்படும். அவை:

(1) தனிச் சலுகையற்ற உயிலினையோ, உயிலிணைப்பினையோ உருவாக்குவதன் மூலம் தனிச்சலுகை உயிலினை ரத்துச்செய்யலாம்.

(2) உயிலினை ரத்துச்செய்யும் எண்ணத்தைத் தெரிவிக்கும் எந்தச் செய்கையோடுங்கூட, தனிச் சலுகை உயிலினைச் செல்லுபடியாக்கப் போதுமான சம்பிரதாயங்களைக் (Formalities) கடைப்பிடித்தலாலும் தனிச் சலுகை உயிலினை ரத்துச்செய்யலாம்.

(3) விருப்பாவணமளித்தவரோ, அவரது ஆணைப்படி அவரது முன்னிலையில் வேறொருவரோ உயிலினை ரத்துச்செய்யும் எண்ணத்தோடு தனிச் சலுகை உயிலினைத் தீயிட்டுக் கொளுத்தினாலோ, கிழித்தாலோ, அழித்தாலோ அதனை ரத்துச்செய்தார் எனக் கொள்ள வேண்டும்.

தனிச் சலுகை உயிலினை எப்போது வேண்டுமானாலும் ரத்துச்செய்யலாம்; போரில் ஈடுபட்டிருக்கும்போதுதான் ரத்துச் செய்ய வேண்டுமென்றில்லை. இராணுவ சேவையிலில்லாத சமயத்திலும் ரத்துச்செய்யலாம்.

## தனிச் சலுகையற்ற உயிலினைப் புதுப்பித்தல் (Revival)

ரத்துச்செய்யப்பட்ட ஓர் உயிலினையோ, உயிலிணைப் பினையோ புதுப்பிக்க இரு வழிகளுண்டு.

(1) **மறு உருவாக்கல்** (By Re-execution) : ரத்துச் செய்யப் பட்ட உயிலினை மறுபடியும் உருவாக்கி அதில் விருப்பாவண மளித்தவர் கையொப்பமிட்டு, சாட்சிகள் சான்றொப்பமிடுவதன் மூலம் புதுப்பிக்கலாம். இதுவே மறுவெளியீடு (Republication) என்றழைக்கப்படுகிறது. குறிப்பிட்ட சம்பிரதாயங்களின்படித் தான் மறு உருவாக்கல் முடியும். விருப்பாவணமளித்தவர் உயிலில் தம்முடைய கையொப்பத்தை வெட்டியெடுத்துச் சிதைத்த பின்னர், அக் கையொப்பத்தை அதே இடத்தில் ஒட்டிவைப்பதன் மூலம் திரும்பவும் அவ் உயிலினைப் புதுப்பிக்க முடியாது.

(2) **புதுப்பித்தல்** :_ ரத்துச்செய்த உயிலினைப் புதுப்பிக்கும் எண்ணத்தை ஓர் உயிலிணைப்பினை உருவாக்குவதன்மூலம் தெரிவித்தால், அதுவே புதுப்பித்தல் என்றழைக்கப்படுகிறது. உயிலினைப் புதுப்பிக்கும் எண்ணத்தினை அவ் உயிலிணைப்புக் குறிப்பிட்டு மிகத் தெளிவாக அறிவிக்க வேண்டும். அவ் உயிலும் அமலில் இருக்கவேண்டும். ஓர் உயில் முதலில் ஒரு பகுதி மட்டும் ரத்துச்செய்யப்பட்டு, பின்னர் முழுவதுமாக ரத்துச்செய்யப்பட் டிருந்து புதுப்பிக்கப்பட்டால் உயில் முழுவதும் புதுப்பிக்கப்பட

வேண்டுமென்கிற எண்ணத்தினை வெளிப்படுத்தாவிட்டால் இறுதியாக ரத்துச்செய்யப்பட்ட பகுதி மட்டும்தான் புதுப்பிக்கப் படும்.

இரண்டிற்குமிடையேயுள்ள வேறுபாடு யாதெனில் ரத்துச் செய்யப்பட்ட உயிலினையோ, உயிலிணைப்பினையோ புதுப் பித்தல் மறுபடியும் செயல்படச் செய்கிறது. மறு வெளியீடு என்பது ரத்துச்செய்யப்படாத விருப்பாவணத்தை உறுதிசெய்து வெளியிடப்பட்ட நாளன்று உருவாக்கப்பட்டது போன்று செயல் படுகின்றது.

உயிலினை மறுபடியும் வெளியிடுவது புதியதாக உயில் உரு வாக்குவதற்கு ஈடாகும்.

# 7. உயிலின் பொருள் விளக்கம்

## (Of the Construction of Wills)

ஓர் உயிலினை வாசிக்கும்போது உயிலினை உருவாக்கி இறந்தவர் அவ் உயிலினை என்ன நோக்கத்தோடு அல்லது எண்ணத்தோடு உருவாக்கினார்? என்னென்ன சொத்துகளை யார்யாருக்கு எப்படிக் கொடுக்க விரும்பினார்? என்பது போன்ற சில ஐயங்கள் தோன்றலாம். உயில் உருவாக்கியவர் தமது வாழ்க்கையின் இறுதிக்கட்டத்திலோ, சாவின் வாசல் கதவினைத் தட்டிக்கொண்டிருக்கிற நேரத்திலோதான் உயில் எழுத முற்படுவார். முன் எச்சரிக்கையாக உயிலினைத் தயார்செய்து வைத்திருப்பவர் வெகுசிலரே. நமது நாட்டிலே உள்ளவர்கள் பரம்பரைச் சொத்துகள் தங்களது குடும்பத்தைவிட்டு வெளியில் சென்றுவிடக் கூடாது என்ற எண்ணம் உடையவர்களே. அந்த எண்ணத்தோடு இறுதி மூச்சினை விடப்போகும் அவர் உயில் எழுதுவதற்கு ஒரு சட்ட நிபுணரைத் தேடிச் செல்வது இயலாது. அப்படிச் சமயமிருப்பினும் எல்லோரும் சட்ட வல்லுநரைக்கொண்டு உயில் எழுதுவர் என்றும் கூறிவிட முடியாது. ஆகையால், விருப்பாவணமளித்தவர் தமக்குத் தெரிந்த வழக்கத்திலிருக்கும் சொற்களைக் கொண்டே உயிலினை உருவாக்கியிருப்பார். அப்படி உருவாக்கப்பட்ட உயிலின் பொருள் விளக்கத்தினை நன்கறிந்த பின்னர் உயிலில் கண்டுள்ளபடி சொத்துகளைப் பிரிக்க விழைதல் சாலச் சிறந்தது.

உயில் எழுதுவதற்கான கலைச்சொற்களையும் சட்ட நுணுக்க வார்த்தைகளையும் அறிந்தவர்கள் சட்டவல்லுநர்களே. அவர்கள் உருவாக்கிய உயிலினைப் பொருள்கொள்வதில் சிரமம் ஏதுமிருக்காது. சட்ட வல்லுநரைக் கொண்டு உயில் எழுதுபவர் சிலரே. ஆதலால், ஒருவர் உருவாக்கிய உயிலுக்குப் பொருள்விளக்கம் கொள்ளுதல் மிக அவசியமே. அப்படிப் பொருள் கொள்வதற்குச் சில விதிகளுண்டு;

உயில் எழுதுவதற்குக் குறிப்பிட்ட அல்லது தனிப்பட்ட வார்த்தைகளைத்தாம் பயன்படுத்த வேண்டுமென்றில்லை. எந்த மொழியிலும் எந்தப் படிவத்திலும் உருவாக்கலாம். உயிலினை உருவாக்கச் சட்ட நுணுக்க வார்த்தைகளையும், கலை நுட்பமான சொற்களையும்தாம் பயன்படுத்த வேண்டுமென்றில்லை. உயில் எழுதும் சட்ட நுணுக்கத்தை அறியாதவர் எழுதின உயிலை, சட்ட வல்லுநர் எழுதிய உயிலை மதிப்பிடும் தரப்பாடுகளைக் கொண்டு மதிப்பிடுதல் சரியன்று. உயிலின் பொருள்விளக்கம் காணும்போது இரு கொள்கைகளைக் கவனித்தல் அவசியம். முதலாவது, சட்டதிட்டம், இரண்டாவது, பொருள் விளக்க விதிகள். உயிலினை உருவாக்கியவரின் எண்ணங்களை வெளிப் படையாகவோ, குறிப்பாகவோ அறிய இயலாத சமயத்தில் பொருள் விளக்க விதிகளை நீதிமன்றம் என்ன செய்ய வேண்டு மென்று சுட்டிக் காட்டும். உருவாக்கியவரின் எண்ணங்கள் வேறாக இருந்தபோதிலும், குறிப்பிட்ட சூழ்நிலையில் சட்ட திட்டங்கள் செயல்படும்.

1. பொருள்விளக்கம் காண்பதில் நீதிமன்றத்தின் தலையாய கடமையாதெனில், உயிலினை முழுவதுமாகப் படித்து உருவாக்கி யவரின் உயிலில் கண்ட சரியான நோக்கத்தையறிந்து அதனைச் செயல்படச் செய்தல் வேண்டும். உயில் எழுதுவதில் பயன் படுத்தப்பட்ட சொற்கள் உருவாக்கியவரின் விருப்பத்தைத் தெரிவிக்கின்றன. உயிலினை முழுவதுமாக வாசிப்பதன் மூலம் அச் சொற்களினின்று அவரது எண்ணங்களைக் கிரகிக்கக்கூடும். அவரது எண்ணங்களைக் கணிக்கும்போது, உயிலில் விடுபட்ட பகுதிகளை நிரப்புவதன் மூலம் தற்சமயத்திற்குப் பொருந்தும் எண்ணத்தினைக்கொண்டு செயல்படுத்த நீதிமன்றத்திற்கு அதிகாரமில்லை.

உயிலில் வெளிப்படையாகவோ, குறிப்பாகவோ தெரிவித் திருக்கும் எண்ணங்களை மட்டுமே நீதிமன்றம் செயல்படுத்த வியலும்.

விருப்பாவணமளித்தவரின் எண்ணங்களையறிந்த பின்னர், உயிலில் பயன்படுத்தப்பட்ட சொற்களைக்கொண்டு யார்யாருக்கு என்னென்ன சொத்துகளைக் கொடுக்க விரும்பினார் எனத் தெளிதல் வேண்டும். உயிலின் சொற்களைக்கொண்டு விருப்பா வணமளித்தவரின் குடும்பச் சூழ்நிலையையும், உறவினர்களையும், சொத்துகளின் மதிப்பீட்டினையும், உயிலினை எழுதியபோது அவர் மனத்திற்கொண்ட கருத்துகளையும் நீதிமன்றம் தெரிந்து கொள்ள வேண்டும். அப்படித் தெரிந்துகொள்ளுதலைத்தான்

ஆம் சேர் ரூல் (Arm Chair Rule) எனப்படும் 'சாய்வு நாற்காலி விதி' என்பர். நீதிமன்றம் தன்னை விருப்பாவணமளித்தவராகப் பாவித்து அவரது சாய்வு நாற்காலியிலிருந்து அவர் மனத்திற் கொண்ட கருத்துகளை உணரவேண்டும். உயிலெழுதும் நாளன்று கொடையாகக் கொடுக்கப்படும் சொத்துகள் விருப்பாவண மளித்தவருக்குச் சொந்தமாக அவர் வசத்திலிருக்கவேண்டும். அப்படியில்லாவிட்டால் உயிலினைப் பொருள்விளக்கங் கொள்ள உதவும் ஆம் சேர் ரூல் எனப்படும் சாய்வு நாற்காலி விதியினைப் பயன்படுத்த முடியாது. பொருள்விளக்கங் காணும்போது உயில் வழியாகப் பயனடைவோரைப்பற்றியாவது, சொத்துகளைப் பற்றியாவது ஐயம் ஏற்படின் புறம்பான சாட்சியங்களை ஏற்றுக் கொள்ளலாம்.

(உ-ம்) (1) A என்பவர் தம் உயிலில், 'நான் C-யிடம் வாங்கிய சொத்துகளை B-க்கு அளிக்கிறேன்' என எழுதியிருந் தார். C-யிடமிருந்து வாங்கிய சொத்துகள் எவை என்பதை அறியப் புறம்பான சாட்சியங்களை ஏற்றுக்கொள்ளலாம்.

(2) A என்பவர் தம்முடைய சொத்துகளைக் கொடையாக உடன்பிறந்தாரின் மகன்களுக்கும், மகள்களுக்கும் என எழுதி வைத்தார். உயில் எழுதிய நாளிலோ அவர் இறந்த நாளிலோ அவருக்கு உடன்பிறந்தாரின் மகன்களோ மகள்களோ கிடையாது. ஆனால், அவரது மனைவியின் உடன்பிறந்தார் பிள்ளைகளுண்டு. உயிலில் குறிப்பிட்ட சொற்கள் மனைவியின் உடன்பிறந்தாரின் பிள்ளைகளைத்தாம் குறிப்பிடுகின்றன என்பதைக் காட்டப் புறம் பான சாட்சியங்களை ஏற்றுக்கொள்ளலாம்.

2. விருப்பாவணமளித்தவர் உயில்வழி உரிமையாளரின் பெயரைக் குறிப்பிட்டு, அவரைப்பற்றிய விவரங்களையும் கொடுத்திருந்தால், குறிப்பிட்ட பெயரையுடைய நபரிலிருந்து, ஆனால் விவரங்கள் சரியில்லாதிருந்தால் விவரங்களைத் தள்ளிவிட வேண்டும்.

(உ-ம்) A என்பவர் உயில்வழிக் கொடையினை அளித்து 'என்னுடைய சகோதரன் ஜானின் இரண்டாவது மகனாகிய தாமஸிற்கு' என எழுதியிருந்தார். விருப்பாவணமளித்தவருக்கு ஜான் என்ற ஒரே ஒரு சகோதரனிருந்தார். அவரது முதல் மகனின் பெயர் தாமஸ். இரண்டாம் மகனின் பெயர் வில்லியம். தாமஸ் அக் கொடையினைப் பெறுவார்.

கொடுக்கப்பட்ட விவரங்கள் சரியாகவிருந்து பெய சரியில்லை என்றால், பெயரைத் தள்ளிவிட வேண்டும்.

(உ-ம்) A என்பவர் உயில்வழிக் கொடையினையளித்து, 'என்னுடைய சகோதரன் ஜானின் இரண்டாம் மகனாகிய தாமஸிற்கு' என எழுதியிருந்தார். விருப்பாவணமளித்தவருக்கு ஜான் என்ற ஒரே சகோதரனிருந்தார். அவருக்கு தாமஸ் என்ற மகனே கிடையாது. அவரது இரண்டாம் மகனின் பெயர் வில்லியம். வில்லியம் அக் கொடையினைப் பெறுவார். உயில்வழி உரிமையாளர் யார் என்பதனைத் தெளிவாக அறிய முடிந்த போது, அவரைப்பற்றிய விவரங்கள் தவறானவை என்பதற்காகக் கொடை செல்லாது போகாது. இதனையே 'தவறான வருணனை, கொடையை அழிக்காது' (Falsa Demonstratio Non-nocat) என்பர்.

3. ஒரு சாராரை அல்லது வகுப்பினரை இத்தனை பேர்கள் எனக் குறிப்பிட்டு அவர்கட்குக் கொடையளிக்கப்பட்டிருந்த உயில் எழுதிய நாளன்று அவர்கள் எண்ணிக்கையில் குறைந்திருந்தால், நீதிமன்றம் எண்ணிக்கையினைத் தவறான யூகமெனக் கொண்டு உயில் எழுதிய நாளன்று உயிரோடிருப்பவர்கள் கொடையினைப் பெறத் தகுதிபெற்றவர்கள் என முடிவெடுக்கும். உயிலில் குறிப்பிடப்பட்டுள்ள பிள்ளைகளின் எண்ணிக்கை உண்மையான எண்ணிக்கையைவிட அதிகமாக இருந்தால் எல்லாப் பிள்ளைகளும் கொடையினைப் பெறுவர். உயில் எழுதுகின்ற நாளன்று எத்தனை பிள்ளைகள் இருந்தனரென்று கணக்கிட வேண்டுமேயொழிய விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்று இருப்பவரின் தொகைகளைக் கணக்கிடக் கூடாது.

(உ-ம்) (1) A என்பவருக்கு 3 மகன்களும், ஒரு மகளும் இருந்தனர். A-யின் நான்கு மகன்களுக்கென்று ஒரு கொடையளிக்கப்பட்டால், அந்த ஒரு மகளும் மகன்களோடு கொடையினைப் பெறுவார்.

(2) A என்பவர் தம்முடைய மூன்று பிள்ளைகட்கும் தனித்தனியே ரூ. 1000/-ஐக் கொடையாக எழுதிவைத்தார். உயில் எழுதப்பட்ட நாளன்று A-க்கு நான்கு பிள்ளைகள் உண்டு. விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளன்று இந் நான்கு பேரும் உயிரோடிருந்தால், ஒவ்வொருவரும் ரூ. 1000/-ஐக் கொடையாகப் பெறுவர்.

4. உயிலினைப் பொருள்கொள்ள மிகத் தேவையான சில சொற்கள் விடுபட்டதால் ஏற்படும் ஐயப்பாடுகளைக் களைவதற்கு அச் சொற்களைப் புகுத்த நீதிமன்றத்திற்கு அதிகாரம் உண்டு.

(உ-ம்) விருப்பாவணமளித்தவர் A என்கின்ற தமது மகளுக்கு உயில்வழிக் கொடையாக 500-ம், B என்கிற மற்றொரு மகளுக்கு உயில்வழிக் கொடையாக ரூ. 500/-ம் கொடுத்தார். உயில்வழிக் கொடையாக A ரூபா 5C0/-ஐப் பெறுவார்.

ஈண்டு ரூபா என்கிற சொல் விடுபட்டிருந்தது. பின் பகுதியில் கொடுக்கப்பட்ட கொடையினைக் கொண்டு முதலாவது கொடையும் ரூபாவாகத்தான் இருக்க வேண்டுமென அனுமானிக்கவியலு கிறது. ஆகையால், அப்படிப்பட்ட வார்த்தைகளை நிரப்பு வதற்கு நீதிமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. உயிலினைப் பார்த்த மாத்திரத்திலேயே இந்தச் சொல்தான் விடுபட்டிருக்க வேண்டுமெனத் தெரியவேண்டும். ஆனால், தவறுதலாக விடுபட்ட சொற்களினால் விருப்பாவணமளித்தவரின் நோக்கம் தெளிவாக அறியவியலாதபோது அச் சொற்களை உயிலில் நிரப்ப நீதிமன்றத் திற்கு அதிகாரம் கிடையாது. விருப்பாவண நோக்கம் தெளி வாகத் தெரியாதபோது விடுபட்ட சொற்களை நிரப்பினால், உயிலின் பொருள் மாறுபட்டு அவருக்காக நீதிமன்றம் புதியதோர் உயிலை ஏற்படுத்தியதற்கு ஈடாகும்.

உயில்வழிக் கொடைத் தொகையினை எழுத்தால் எழுதும் போது எண்ணிற்கும் எழுத்திற்கும் வித்தியாசம் ஏற்பட்டால் எழுத்தில் கண்டதுதான் செல்லும். உதாரணமாக நான் ரூ. 500/- (எழுத்தால் ரூபா ஒரு நூறு) ஐ உயில்வழிக் கொடையாக A-க்குக் கொடுக்கிறேன். இவ் விதி உயிலின் எஞ்சிய பகுதிக்கும் ஒத்ததாக இருக்கவேண்டும். ஒரே அளவான தொகையினைப் பல உயில்வழி உரிமையாளர்க்குக் கொடுக்கும்போது ஒருவருக்கு மட்டும் எண்ணிற்கும் எழுத்திற்கும் மாறுபட்டிருக்குமானால் மற்றவர்கட்குக் கொடுத்த கொடையினைக்கொண்டு எழுத்தை விட எண்ணைத்தான் சரியென எடுத்துக்கொள்ள வேண்டும். உயிலின் பொருள் ஐயப்பாடின்றித் தெளிவாகத் தெரியும்போது விடுபட்ட சொற்களை நீதிமன்றமே நிரப்பலாம்.

5. விருப்பாவணமளித்தவர் உயில்வழிக் கொடையாகக் கொடுக்க எண்ணிய பொருளினை உயிலில் அவர் கொடுத்துள்ள விவரங்களைக் கொண்டு இயன்ற அளவிற்குக் கண்டுபிடிக்க முடிந்தபோது, அவர் கொடுத்த ஒவ்வாத விவரங்களைத் தள்ளி விட்டு உயில்வழிக் கொடையினைக் கொடுத்துவிட வேண்டும். விருப்பாவணமளித்தவர் கொடைப்பொருளினை மற்றவர்கள் கண்டுபிடிக்க வேண்டுமென்பதற்காக அதனைப் பலவிதங்களில் விவரிக்கலாம். அது எங்கே உள்ளது, யாரிடமிருந்து பெறப்

பட்டது, யார் வசமுள்ளது என்பன போன்ற தகவல்களைக் கொடுக்கும்போது, தவறான அல்லது ஒவ்வாத தகவலைத் தள்ளி விட்டுச் சரியான தகவல்களைக்கொண்டு கண்டுபிடித்துச் செயல் படுத்த வேண்டும்.

(உ-ம்) A என்பவர் உயிலில் 'தஞ்சாவூரில் தாமஸ் வசத்தி லிருக்கும் என்னுடைய நஞ்சை நிலங்களை B-க்கு உயில்வழிக் கொடையாகக் கொடுக்கிறேன்', என்று எழுதியிருந்தார். அவருக்குத் தஞ்சாவூரில் நஞ்சை நிலமிருந்தது. ஆனால், அவை தாமஸ் என்பவரின் வசத்திலிருக்கவில்லை. ஈண்டுத் தாமஸ் வசத்தில் என்னும் சொற்களைச் சரியல்ல என்று ஒதுக்கிவிட்டு தஞ்சாவூரிலிருக்கும் நஞ்சை நிலங்களை B என்பவர் உயில்வழிக் கொடையாகப் பெற்றுக்கொள்வார்.

6. விருப்பாவணமளித்தவர் உயில்வழிக் கொடையாகக் கொடுக்க எண்ணியிருக்கும் சொத்தினை உயிலில் பலவிதத்தில் விவரித்திருக்கலாம். எல்லா விவரங்களும் பொருந்துகின்ற சொத்தினையே அவர் கொடையாகக் கொடுக்க விரும்பினார் எனக் கொள்ளவேண்டும். சில சமயம் அவருக்கு வேறு சொத்துகள் இருந்து இவ் விவரங்கள் பொருந்தாவிட்டால் முன் கூறிய விதிப்படி பொருந்தாத விவரங்களைத் தள்ளிவிட்டு, உள்ள சொத்தினைக் கொடையாகப் பெறுவது என்ற விதிக்கு இது ஒரு வரையறை.

விருப்பாவணமளித்தவருக்குப் பல சொத்துகள் இருந்து அவர் உயில்வழிக் கொடையாகக் கொடுக்க எணின் விவரித்த பெரும் பான்மையான விவரங்கள் பொருந்துகின்ற சொத்தினை மட்டுமே உயில்வழிக் கொடையாகக் கொடுத்து, ஏனைய சொத்துகளை அதனின்று விலக்கிவிட வேண்டும்.

(உ-ம்) A என்பவர் உயிலில் 'தஞ்சாவூரில் தாமஸ் வசத்தி லிருக்கும் என்னுடைய நஞ்சை நிலங்களை B-க்கு உயில்வழிக் கொடையாகக் கொடுக்கிறேன்' என எழுதியிருந்தார். அவருக்குத் தஞ்சாவூரிலிருந்த நஞ்சை நிலங்களில் கொஞ்சம் தாமஸ் வசத்திலிருந்தன; கொஞ்சம் நஞ்சை நிலங்கள் தாமஸ் வசத்திலில்லை. ஈண்டு விருப்பாவணம் அளித்தவர் தஞ்சாவூரில் தாமஸ் வசத்திலிருந்த நஞ்சை நிலங்களை மட்டுமே உயில்வழிக் கொடையாகக் கொடுக்க எண்ணினார் என்று கொள்ளவேண்டும்.

7. உயிலினைப் பொருள்கொள விழையுங்கால் சில சமயம் பொருள்மயக்கம் அல்லது ஐயப்பாடுகள் (Ambiguities) தோன்ற லாம். பொருள் மயக்கம் சொத்துகளையோ, உயில்வழி உரிமை

யாளரையோ குறித்ததாக இருக்கலாம். உயிலினைப் படித்துப் பார்க்கும்போது எந்தவித ஐயமுமின்றித் தெளிவாகத் தோன்றும். ஆனால், அதனை நிறைவேற்றச் செல்லுங்கால் அதில் பொருள் மயக்கம் அல்லது ஐயப்பாடு தோன்றும். இதனையே உட்கிடைப் பொருள் மயக்கம் அல்லது மறைமுக ஐயப்பாடு (Latent Ambiguity) என்பர். உயிலில் வார்த்தைகள் விடுபட்டு வாசிக்கும் போதே இதுவா, அதுவா என்ற ஐயம் தோன்றலாம். இதனையே வெளிப்படைப் பொருள் மயக்கம் அல்லது புலப் படுகிற ஐயப்பாடு (Patent Ambiguity) என்பர்.

## உட்கிடைப் பொருள் மயக்கம் அல்லது மறைமுக ஐயப்பாடு

உயிலில் காணப்படும் சொற்கள் ஒரு நபரையோ, ஒரு பொருளையோ குறிப்பனவாகத் தெளிவாகத் தோன்றும். உண்மையில் அவை இரு பொருள்களையோ, இரு நபர்களையோ குறிப்பன. விருப்பாவணமளித்தவர் எந்த பொருளை அல்லது எந்த நபரை மனத்தில்கொண்டு உயில் எழுதினார் என்று இரு பொருள் மயக்கம் தோன்றும். அப்போது நீதிமன்றம் புறம்பான சாட்சியங்களை (Extrinsic Evidence) ஏற்றுக்கொண்டு உயிலினை நிறைவேற்ற விழைய வேண்டும். சமதர்மக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு இவ் வையப்பாட்டினைக் களையச் சமய சந்தர்ப்ப, குடும்பச் சூழ்நிலை, வழக்கங்களையறிய வாய் மொழிச் சாட்சியங்களையும் ஏற்கலாம்.

(உ-ம்) (1) A என்பவர் தம்முடைய உயிலில் ஒரு தொகையைக் குறிப்பிட்டு, 'இத் தொகையை என்னுடைய உடன் பிறந்தார் மகள் மேரிக்கு உயில்வழிக் கொடையாகக் கொடுக்கிறேன்' என எழுதி வைத்தார். ஆனால் உயிலில் குறிப்பிட்ட விவரங்களையும் மேரி என்ற பெயரையும் கொண்ட உடன்பிறந்தாரின் மகள்கள் இருவர் உண்மையிலேயே இருந்தனர். இப்போது ஒரே விவரங்களைக் கொண்ட இருவரில் ஒருவரை மட்டுமே கருத்தில்கொண்டு, விருப்பாவணமளித்தவர் உயில் எழுதியிருக்கக் கூடும். அவர் கருத்தில் கொண்ட நபர் யாரென அறியப் புறம் பான சாட்சியங்களை ஏற்கலாம்.

(2) A என்பவர், 'சென்னையில் உள்ள என்னுடைய வீட்டை B-க்குக் கொடுக்கிறேன்' என உயில் எழுதி வைத்தார். அவருக்குச் சென்னையில் இரு வீடுகள் இருந்தன. அவற்றில் எதைக் கொடுக்க விரும்பினார் என்பதையறியப் புறம்பான சாட்சியங்களை அனுமதிக்கலாம்.

**வெளிப்படை பொருள் மயக்கம் அல்லது புலப்படுகிற ஐயப்பாடு (Patent Ambiguity)**

உயிலினை ஒருமுறை படித்த உடனே அதில் உள்ள குறை அல்லது ஐயம் விளங்கிவிடும். சாதாரண ஒரு மனிதன் உயிலினைப் படித்துவிட்டு யாருக்கு உயிலில் கண்ட சொத்து களைக் கொடுக்கவேண்டும் அல்லது எந்தச் சொத்துகளைக் கொடுக்க வேண்டுமென்று சொல்லவியலாவிட்டால், அப் பொருள் மயக்கத்தினை — ஐயப்பாட்டினை, வெளிப்படைப் பொருள் மயக்கம் அல்லது நேர்முக ஐயப்பாடு என்பர். நேர்முக ஐயப் பாட்டினை விளக்கப் புறம்பான சாட்சியங்களை அனுமதிக்க வியலாது. சுருங்கக்கூறின் விருப்பாவணமளித்தவர் உயிலில் இடைவெளி விட்டிருந்தால் அதனைச் சாட்சிகளின் விளக்கத் தைக்கொண்டு நிரப்ப முடியாது. ஆனால், உயிலின் ஏனைய பகுதியில் கூறப்பட்டவைகளைக் கொண்டு இடைவெளியினை நிரப்பக்கூடுமானால் அதற்குமட்டும் வாய்மொழிச் சாட்சியங் களை (Parole Evidence) அனுமதிக்கலாம்.

(உ-ம்) (1) உயில்வழிக் கொடை திரு...........அல்லது, திருமதி...........க்குக் கொடுக்கப்பட்டது. ஈண்டுக் கொடை யாருக்குக் கொடுக்கப்பட்டது என விளக்கச் சாட்சியங்கள் அனுமதிக்கப்படமாட்டா. இது நேர்முக ஐயப்பாட்டிற்கு ஒரு சான்று.

(2) A என்பவர் 'டேவிட் மகன் டேவிட்' என்பவருக்கு உயில்வழிக் கொடையினைக் கொடுத்தார். ஈண்டு உயில்வழி உரிமையாளரின் பட்டப்பெயர் மட்டுமே குறிப்பிட்டுள்ளார். அவரது முழுப் பெயரும் குறிப்பிடவில்லை. ஆகையால், விருப் பாவணமளித்தவர் மனத்தில் கொண்ட டேவிட் மகன் டேவிட் யாரெனத் தெளியச் சாட்சியங்களை அனுமதிக்கலாம்.

8. உயிலுக்குப் பொருள் விளக்கம் காணும்போது உயில் முழுவதையும் படித்து, சூழ்நிலைக்கு ஏற்றவாறு பயன்படுத்தப் பட்டுள்ள சொற்களுக்குப் பொருள் கண்டு, விருப்பாவண மளித்தவரின் உள்நோக்கத்தினை உணர்ந்து சட்டம் அனுமதிக்கும் வரை இயன்றவரை நிறைவேற்ற வேண்டும். உயிலின் பொது வான நோக்கமென்னவென்று அறிய வேண்டும்.

உயிலில் பயன்படுத்தியுள்ள சொற்களைச் சூழ்நிலைக்கு ஏற்ற வாறு குறிப்பிட்ட பொருளிலோ, பரந்த நோக்கோடு கூடிய பொருளிலோ விளங்கிக் கொள்ளவேண்டும். உயில் முழுவதையும் ஒருமுறை படித்து அதில் கண்ட சொற்களுக்கு இயல்பான

பொருளைக்கொண்டு பொருள்விளக்கங் கண்டால் சில சமயங்களில் விருப்பாவணமளித்தவரின் நோக்கம் முன்னுக்குப்பின் முரணானதாகவும் தவறாகவும் தோன்றக் கூடும். அச் சமயங்களில் விருப்பாவணமளித்தவரின் உண்மையான உள்நோக்கத்தைத் தெரிந்துகொள்ள உயிலில் கண்ட சொற்களுக்கான இயல்பான பொருளை விட்டு மாறுபட்டு, குறிப்பான அல்லது பரந்த நோக்கோடு கூடிய அல்லது முற்றிலும் மாறுபட்ட பொருளில் கொள்ள வேண்டும். உயில்வழிக் கொடைப்பொருளை முதலில் குறிப்பாகச் சுட்டிக் காட்டிவிட்டுப் பின்னர் அதனைப் பொதுவான சொற்றொடர்களால் விவரித்திருந்தால், பின்னர் விவரித்த பொதுவான சொற்கள் முன்னர்ச் சுட்டிக்காட்டிய பொருளைத்தான் குறிக்கின்றன எனக் கொள்ளவேண்டும். இதனையே 'இணங் கொளல் விதி' (Rule of Ejusdem Genris) என்கிறோம்.

(உ-ம்) ஒரு விருப்பாவணமளித்தவர் தம்முடைய உயிலில் 'B வசத்திலிருக்கும் என்னுடைய நிலங்களை A-க்கும், தஞ்சாவூரில் உள்ள என்னுடைய எல்லா நஞ்சை நிலங்களை C-க்கும் கொடுக்கிறேன்' என எழுதியிருந்தார். தஞ்சாவூரில் உள்ள நஞ்சை நிலங்களில் கொஞ்சம் B வசத்தில் இருந்தன. வேறு நஞ்சை நிலங்களும் அங்கே இருந்தன. A-க்குக் கொடுத்த கொடையினைக் கொண்டு, 'தஞ்சாவூரிலுள்ள என்னுடைய எல்லா நஞ்சை நிலங்களை' என்ற பொதுவான சொற்றொடர்க்கு B வசத்திலுள்ள நஞ்சை நிலங்களைத் தவிர மீதியுள்ள என்ற குறுகிய அல்லது குறிப்பான பொருள் கொள்ளவேண்டும். B வசத்திலிருக்கும் நிலங்களை என்பதால் தஞ்சாவூரில் B வசத்திலிருக்கும் நஞ்சை நிலங்களையும் சேர்த்து A பெற்றுக்கொள்வார்.

9. உயிலினை முழுவதுமாக வாசிக்கும்போது இரண்டு பொருள் தருமானால், இரண்டில் மிக நியாயமானதெனக் கருதப்படும் பொருளையே மேற்கொள்ளவேண்டும். அப் பொருள் உயிலைச் செல்லுபடியாக்கச் (Validity) சாதகமாக உள்ள இயல்பான முடிவாகவிருத்தல் வேண்டும்.

10. உயிலில் கண்ட சொற்கள் ஒன்றையும் தள்ளிவிடாமல் அவற்றிற்கான இயல்பான பொருள்களைக் கொண்டு உயிலுக்குப் பொருள்விளக்கம் காணவேண்டும். பொருள் முன்னுக்குப்பின் முரணானது என்று கண்டாலொழிய உயிலின் ஒவ்வொரு பகுதியையும் செயல்படுத்தாமல் இருக்கக்கூடாது.

11. உயிலில் ஒரு பகுதியில் தெளிவான, குறிப்பான பொருளில் பயன்படுத்தப்பட்ட சொற்கள், வேறு பகுதியில்

வருமானால் அவை அதே பொருளில் பயன்படுத்தப்பட்டதாக இருக்கவேண்டும்.

12. உயில் முழுவதையும் படிப்பதன்மூலம் விருப்பாவண மளித்தவரின் நோக்கத்தினை அறியமுடியும்.

அப்படியறிந்த அவர் நோக்கத்தினைச் சட்டத்தின் நடைமுறையில் முழுவதும் நிறைவேற்ற இயலாவிட்டால், உயிலுக்குப் பொருள்விளக்கங் காணவியலும், நீதிமன்றம் அவரது நோக்கத்தினை இயன்றவரையில் நிறைவேற்ற முயலவேண்டும்.

(உ-ம்) இறக்கும் நிலையிலிருந்த விருப்பாவணமளித்தவர் தம்முடைய சொத்துகளை A என்பவருக்கு ஆயுட்கால அனுபவ பாத்தியமாகக் கொடுத்து, அவர் இறந்த பின்னர் ஒரு மருத்துவ மனைக்கு உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். இந்திய வாரிசுரிமைச் சட்டம், பிரிவு 118-ன்படி மருத்துவமனைக்குக் கொடுக்கப்பட்ட கொடை செல்லுபடியாகாது. அதனால் விருப்பாவணமளித்தவரின் முழு நோக்கமும் நிறைவேற முடியாது. ஆனால் A-ன் வாழ்நாள்வரை கொடுக்கப்பட்ட கொடையை நிறைவேற்றலாம்.

13. ஓர் உயிலில் ஒரே சொத்தினை இரு முறை வெவ்வேறு நபர்கட்குக் கொடுத்திருந்து, இருகொடைகளும் ஒன்றோடொன்று இணைந்து செல்லாமல் முரண்பட்டிருந்து முடிவெடுக்கவியலாதபோது, கடைசியாகக் கூறப்பட்ட சொற்களே விருப்பாவணமளித்தவரின் கடைசி விருப்பமாக மேலோங்கி நிற்கும்.

(உ-ம்) விருப்பாவணமளித்தவர் தமது உயிலின் முதல் பாகத்தில் தம்முடைய சொத்துகளை A-க்குக் கொடுத்தார். உயிலின் கடைசிப் பாகத்தில் A-க்கு அல்ல, அவை அனைத்தும் B-க்கு என எழுதியிருந்தார். 'B'. சொத்துகளனைத்தையும் எடுத்துக்கொள்வார்.

14. உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்படும் சொத்துகள் எவையென்றும் அதனைப் பெறுவர் எவரென்றும் தெளிவாக விருப்பாவணமளித்தவர் தெரிவிக்காவிட்டால் அவ் உயில் தெளிவின்மையால் செல்லாததாகிவிடும். உயில் செல்லுபடியாவதற்கு அதன் மூலம் கொடையாகக் கொடுக்கப்படும் கொடைப்பொருள் யாதென்று உறுதியாக அறிதல்வேண்டும். கொடைப்பொருள் யாதென்று கூறப்படாவிட்டால் தெளிவின்மையால் உயில் செல்லுபடியாகாது. உதாரணமாக, விருப்பாவணம் அளித்தவர்

ஒரு பொருளையோ, பணத்தையோ கொடையாகக் கொடுக்கிறேன் எனக் கூறி எவ்வளவு பொருளை அல்லது பணத்தை யென்று அளவினைக் குறிப்பிடாவிட்டால் தெளிவின்மையால் உயில் செல்லாது. உயில்வழிக் கொடைப்பொருள் யாதென்றோ எவ்வளவென்றோ நிச்சயமாகத் தெரிதல் வேண்டும். (Jarman on Will I Edn., P. 315).

15. உயிலில் சொல்லப்பட்ட கொடைச் சொத்துகள் என்பவை உயிலினை உருவாக்கியவர் இறந்தபோது அவருக்குச் சொந்தமாக இருந்த சொத்துகளையே குறிக்கும் எனக் கணிக்கப் படுகிறது. ஏனெனில், உயிலினை உருவாக்கியவரின் சில சொத்து களைப் பொறுத்தமட்டில் உயில் இல் வழியில் வாரிசுரிமை செய்ய வேண்டுமென உயிலில் குறிப்பிட்டிருந்தாலொழியப் பொதுவாகப் பொருள்கொள்ளக் கூடாது. மாறான எண்ணம் தெரிவிக்கப் பட்டிருந்தாலொழிய இறக்கும் தருணத்தில் அவருக்குச் சொந்த மாக இருந்த சொத்துக்களைப்பற்றிய உயில் அப்போதுதான் உருவாக்கப்பட்டதாகக் கொண்டு உயிலுக்குப் பொருள் காண வேண்டும். உதாரணமாக, உயிலினை உருவாக்கும்போது சொந்தமாக இருந்த சொத்துகள் மட்டுமே உயிலின் ஷெட்யூலில் சொல்லப்பட்டிருக்கும். பின்னர், இறக்குமுன் சில சொத்துகளை வாங்கிச் சேர்த்திருந்தால் ஷெட்யூலில் கூறப்பட்ட சொத்துகளை மட்டுமே கொடுக்க எண்ணினார் எனப் பொருள்கொள்ள வியலாது.

ஓர் உயில் முறைப்படி உருவாக்கப்பட்டுச் செல்லுபடி யாக்கக் கூடியதானால், அதில் இரண்டு தேதிகள் மிகவும் முக்கிய மானவை. ஒன்று அவ் உயில் உருவாக்கப்பட்ட நாள், இரண்டாவது அது அமலுக்குவரும் உயிலின் கர்த்தா இறந்த நாளாகும். உயிலில் கூறப்பட்டுள்ள சொத்துகளையும், உரிமை களையும், பயனடைவோரையும் கணிப்பதற்கு மேற்சொன்ன இரண்டு நாள்களும் தேவை. உயிலின் கர்த்தா எந்தத் தேதியினின்று உயில் செயல்பட வேண்டுமென்று விரும்பினாரோ அந்தத் தேதியினின்று இது செயல்படும். ஓர் இந்து தம்முடைய ஒன்றுவிட்ட சகோதரனின் மகன்களில் ஒருவரை ஏழு ஆண்டு கட்குள் தம்முடைய மனைவி தத்து எடுத்துக்கொள்ளலாம் என உயிலில் எழுதிவைத்திருந்தார். ஏழு ஆண்டுகளை எந்தத் தேதியினின்று கணிப்பது என்ற வினாவெழுந்தபோது உயில் உருவாக்கப்பட்ட நாளிலிருந்து ஏழு ஆண்டுகள், உயிலின் கர்த்தா இறந்த நாளிலிருந்தன்று எனப் பிரிவிக் கவுன்சில் ஜெகநாத்ராவ் எ. ரம்பாரோசா (38 பி. எல். ஆர். 770) என்ற வழக்கில் தீர்ப்பளித்தது.

அசராப் அலி எ. முகமது அலி (1947 பி. எல். ஆர் 122) ரஹமத்மகால் எனப்பட்ட சொத்துகளை ஒருவர் உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். உயில் உருவாக்கப்பட்ட பின்னர் அச் சொத்துகளில் பெரும் மாறுதல்கள் ஏற்படுத்தப்பட்டன. உயிலின் கர்த்தா இறந்த நாளன்று எந்த நிலையில் அச் சொத்துகள் இருந்தனவோ அந்த நிலையிலே கொடையாகப் போய்ச்சேரும் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

உயிலுக்குப் பொருள்காணும்போது உயிலில் குறிப்பாகச் சொல்லப்பட்டிருந்தாலொழிய விருப்பாவணமளித்தவரின் சொத்துகளில் சிலவற்றை உயில் இல் வழியில் கொடுக்க விழைவதாகப் பொருள்கொள்ளக் கூடாது என்பது பொதுவான விதி. சமயத்திற்குப் பொருந்துமாறு இரு தேதிகளில் ஒன்றில் உயில் அமலுக்கு வருவதாகப் பொருள்கொள்ள வேண்டும். சில சமயங்களில் உயில் உருவாக்கப்பட்ட தேதியிலும் அமலாக்கப்பட வேண்டியிருக்கும். 'என்னுடைய பணியாளுக்கு என் கணையாழியைக் கொடுக்கிறேன்' என்று ஒருவர் எழுதிவைக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். கொடுக்கப்பட்ட கணையாழியும், பணியாளும், எது, யார் எனக் கணிக்க விழையும்போது உயில் உருவாக்கப்பட்ட நாளிலிருந்தவைகளே எனப் பொருள் கொள்ளுதல் வேண்டும். அவர் தம்முடைய வாழ்நாளில் அக் கணையாழியை விற்றிருந்தாலோ, மாற்றியமைத்திருந்தாலோ அக் கொடை அழிந்துபட்டது அல்லது மாற்றப்பட்டதாகும். உயில் உருவாக்கப்பட்ட தேதிக்குப் பின்னர் வாங்கின கணையாழியின்பேரில் கொடை பெறுநர்க்கு எந்தவித உரிமையும் கிடையாது. சில கொடைகளைக் குறிப்பாகக் கொடுக்கும்போது உயில் உருவாக்கப்பட்ட தேதிதான் முக்கியமானது.

உயில்வழிப் பயனடைவோரைக் கணிக்கும்போது எந்தத் தேதியில் உள்ளவர்களைக் கணிக்கவேண்டும் என்பதற்காக விதிமுறைகளை ஜார்மன் என்பவரெழுதிய 'உயில்கள்' எனப்படும் புத்தகத்தில் 13 ஆம் அத்தியாயத்தில் காணலாம்.

உயில் உருவாக்கப்பட்ட நாளன்று குறிப்பிடப்பட்டு உயிரோடிருக்கிறவர்களையே உயில் குறிக்கும்; உயிலின் கர்த்தா இறந்த நாளன்று உயிரோடிருப்பவர்களை அன்று என்பது பொதுவான விதி.

'என்னுடைய சொத்துகளை என்னுடைய மகனுக்குக் கொடுக்கிறேன் எனப் பொதுவாக ஒருவர் எழுதிவைத்திருந்தார் எனக் கொள்வோம். உயில் உருவாக்கப்பட்ட தேதியில் உயிரோ

டிருக்கும் மகனை மட்டுமே குறிக்கும். அம் மகன் இறந்து வேறொரு மகன் பின்னர்ப் பிறந்திருந்தால் அவர் அக் கொடைச் சொத்துகளைப் பெறவியலாது.

குறிப்பிட்ட ஒருவருக்கு உயில்வழிக் கொடையொன்று கொடுக்கப்பட்டு அவர் விருப்பாவணமளித்தவருக்கு முன்னர் இறந்துவிட்டால் அவ் வுயில் செல்லாதுபோகும்.

உயிலின் கர்த்தாவின் எண்ணங்களை நிறைவேற்றுவதனால் பயனடைவோர் யார் யாரென்று நிச்சயித்துக்கொள்ளும் பொருட்டு அவர் இறந்த நாளைக் குறிப்பிட்டு அந் நாளினின்று உயில் செயல்படும் எனக் கூறப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட வகுப்பினருக்குக் கொடை கொடுக்கப்படுகிறது என்று வைத்துக் கொள்வோம். அவர் இறந்த நாளன்று உயிரோடிருக்கும் அவ் வகுப்பினரை மட்டுமே குறிக்கும்; இறந்தவர்களையும் இனிப் பிறப்பவரையும் குறிக்காது.

எடுத்துக்காட்டு :

'என்னுடைய எல்லாச் சகோதரிகளுக்கும் கொடையாகக் கொடுக்கிறேன்' என்று எழுதிவைத்திருப்பதாகக் கொள்வோம். விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்று உயிரோடிருக்கும் சகோதரிகளை மட்டுமே குறிக்கும். அவர் இறந்த நாளன்று சகோதரிகள் ஒருவருமில்லையானால், பின்னர்ப் பிறக்கப்போகும் சகோதரிகளைக் குறிக்கும். உயில் செயல்படும் நாளைக் குறிப்பிடுவது ஏனென்றால், சொத்துகளை எளிதாகப் பிரித்துக் கொடுப்பதற்குத்தான். அது விருப்பாவணமளித்தவரின் எண்ணம் என்று சொல்லவியலாது. ஒரு குறிப்பிட்ட நாளில் உயில் செயல்படா விட்டால், உயில்வழியில் பயனடைவோரின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டேபோகும். அப்போது சொத்துகளைப் பிரித்துக் கொடுப்பது எளிதன்று. உயில் செயல்படும் நாளை உயில்வழிப் பயனடைவோரில் ஒருவர் தம்முடைய பங்கினைக் கேட்கும் நாள்வரையில்தான் ஒத்திப்போடலாம்.

தனிமனிதருக்குக் கொடுக்கப்படும் கொடை செயல்படும் நாள் உயில் உருவாக்கப்பட்ட நாளாகவோ, விருப்பாவண மளித்தவர் இறந்த நாளாகவோ இருக்கலாம். அது, கொடுக்கப் படும் கொடையின் தன்மையினைப் பொறுத்தது.

**பதிலாள் நியமன அதிகாரம் பெற்ற கொடைபெறுநரின் உயில் (பிரிவு 91-92)**

ஒரு சொத்தின்பேரில் எந்தவித உரிமையுமல்லாத ஒருவருக்கு அச் சொத்தினை அவர் விரும்பிய யாருக்கு வேண்டுமானாலும்

பிரித்துக் கொடுக்கும் அதிகாரத்தினைக் கொடுத்தலே பதிலாள் நியமன அதிகாரம். பதிலாள் நியமன அதிகாரம் இருவகைப் படும். ஒன்று பொதுவானது; மற்றது தனிப்பட்ட அதிகாரம்.

ஒரு சொத்தினை 'ஏ' என்பவருக்குக் காப்பீடாக ஒப்படைத்து அவர் விரும்பின எவருக்கும், எப்போதும், எவ்வளவு வேண்டு மானாலும் ஓர் ஆவணத்தின்மூலம் கொடுக்கலாம் என்று நியமித்தலும் அப்படி அவர் ஏற்கத் தவறினால் 'பி' என்பவருக்கு அவ் வதிகாரம் செல்லும் என்பதும் பொதுவான பதிலாள் நியமன அதிகாரம் எனப்படும். ஈண்டு 'ஏ' சொத்தின் உரிமையாளராக இல்லாதிருந்தபோதிலும், அச் சொத்தினை யாருக்கு வேண்டு மானாலும் எப்போதும் கொடுக்க அதிகாரமுடையவர். அவர் அச் சொத்துகளைத் தமக்கேகூட எடுத்துக்கொள்ளலாம். இவ் வதிகாரம் சொத்தின் உரிமையைப்போலவே தனிச் சிறப்புப் பெற்றது. பொதுவான அதிகாரத்தோடுகூடச் சொத்துகளின் பேரில் வாழ்நாள் முழுவதும் அனுபவ பாத்தியதையையும் கொடுத்திருந்தால், அவர் ஓர் ஆவணத்தின்மூலம் முழு உரிமை யையும் தமக்கே கொடையாக மாற்றிக்கொள்ளலாம்.

(Bapugi R. Kerawalas *vs.* Haj Esmail 46 Bom. 694)

விருப்பாவணமளித்த ஒருவர் தம்முடைய வீட்டினைச் சகோதரனின் மகனுக்கு, வாழ்நாள் அனுபவப் பாத்தியத்தைக் கொடையாகக் கொடுத்தார். சகோதரனின் மகன், வீட்டின் நிகர வருவாயை எடுத்துக்கொள்ளலாம். ஆனால், அதை விற்கவோ அடைமானம் வைக்கவோ கூடாது. அவனுக்குப் பிறகு உயில்வழியாக அவன் நியமிக்கும் யார் வேண்டுமானாலும் அவ் வீட்டை எடுத்துக்கொள்ளலாம். அப்படி அவன் யாரையும் நியமிக்காமல் இறந்துபோனால், அவனது பிள்ளைகட்குச் சம மாகக் கொடுக்கவேண்டும் என்று உயிலில் இருந்தது. சகோதரன் மகன் அவ் வீட்டினை விற்க முனைந்தபோது, அதனை விற்க அவருக்கு உரிமையுண்டா என்ற வினா எழும்பியது. நிபந்தனை கள் இருந்தபோதிலும் அவர் அதன்பேரில் முழு உரிமையும் பெற்றார். அவ் வீட்டினை நேரடியாகவோ, தம்முடைய பெயரில் மாற்றியோ விற்கலாம் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

பதிலாள் நியமன அதிகாரத்தினைச் செயல்படுத்த மூன்று பேர்கள் தேவை : (1) அவ் வதிகாரத்தினை அளிப்பவர், (2) அவ் வதிகாரத்தைப் பெறுபவர், (3) உரிமையாளராக நியமிக்கப் படுபவர் அல்லது அதிகாரத்தின் மூலமாகப் பயனடைபவர்.

பொதுவான அதிகாரத்தினை உயில்வழியாக நிறைவேற்று வதைக் குறித்து, பிரிவு 91-ல் சொல்லப்பட்டுள்ளது. பொதுவான அதிகாரம் பெற்ற ஒருவர் தம்முடைய சொத்துகளைக் கொடையாகக் கொடுக்கும்போது அக் கொடையோடு பதிலாள் நியமிக்கப் பொதுவான அதிகாரம் பெற்ற சொத்துகளும் செல்லும். வேறெந்தவிதமான மாறுபட்ட எண்ணமும் தெரிவிக்கப்படா விட்டாலும், அவர் அந்த அதிகாரத்தினை நிறைவேற்றினார் என்று கொள்ளவேண்டும். இன்னும் விளக்கமாகக் கூறவேண்டு மானால் ஒரு குறிப்பிட்ட சொத்தின்மீது உரிமையாளரை நியமிக்க அதிகாரம் பெற்ற ஒருவர் ஓர் ஆவணத்தின்மூலம் அவ் வதிகாரத் தினை நிறைவேற்றத் தவறி, தம்முடைய சொத்துகள் எல்லா வற்றையும் ஒருவருக்கு உயில்வழிக் கொடையாகக் கொடுத்து இறந்துவிட்டால், அக் கொடையோடுகூட அதிகாரம் பெற்ற சொத்துகளும் போய்ச் சேரும்.

மேற்சொன்ன அதிகாரம் பெறுவதற்கு முன்னரே அவர் தம்முடைய சொத்துகட்கு உயில் எழுதியிருந்த அவ் வதிகாரத் தினை நிறைவேற்றாமல் இறந்துபோனால், அவருடைய உயிலினைச் செயல்படுத்தும்போது அவ் வதிகாரமும் நிறை வேற்றப்பட்டு உயில்வழிக் கொடையோடுகூட அதிகாரம் பெற்ற சொத்துகளும் கொடை பெறுநரை அடையும். அவர் தம்முடைய உயிலினை உருவாக்குவது அதிகாரம் பெறுவதற்கு முன்னரோ, பின்னரோ இருக்கலாம். அவ் வதிகாரத்தினை ஓர் ஆவணம் அல்லது உயிலின் மூலமாகத்தான் செயல்படுத்த வேண்டும் என்பது மிகவும் முக்கியமானது.

## தீன்சா எ. தீன்சா 31 Bom. 473

வாடியா என்ற பார்சி 1885ஆம் ஆண்டு ஓர் உயில் வழி யாகத் தம்முடைய மனைவியை நிறைவேற்றாளராக நியமித்து, தாம் குழந்தைகளின்றி இறந்துபோனால் தம்முடைய எஞ்சிய சொத்துகள் யாவும் அறக்கட்டளையாகப் பார்சி பஞ்சாயத்தைப் போய்ச் சேரவேண்டும் என்று குறிப்பிட்டிருந்தார். 18 ஆம் ஆண்டு வேறொரு பார்சி தம்முடைய சொத்துகளை யாருக்கு வேண்டுமானாலும், எந்தக் காரியங்களுக்கு வேண்டுமானாலும் உயில்மூலமாக அல்லது ஓர் ஆவணத்தின் மூலமாகக் கொடுக்கும் அதிகாரத்தை வாடியாவுக்குக் கொடுத்தார். வாடியா 18 ஆம் ஆண்டுக்கு முன்பு உருவாக்கின 1885ஆம் ஆண்டு உயிலினை மட்டும் விட்டு இறந்துவிட்டார். அதிகாரம் பெறுவதற்கு முன்னர் உருவாக்கின உயில்வழியாக அவ் வதிகாரத்தினை நிறை வேற்ற முடியுமா என வினாவெழுந்தது. உயில் உருவாக்கியவர்

இறந்த நாளினின்று செயல்படுகிறது என்பது பொதுவான கொள்கை. ஆதலால், முன்னர் உருவாக்கப்பட்ட உயில் அதிகாரம் பெற்ற பின்னர்ச் செயல்படும்போது அதனோடுகூட அவ் வதிகாரமும் நிறைவேற்றப்படும் என்று கூறுவதில் எந்த ஐயமுமில்லை.

**தனிப்பட்ட அல்லது வரையறுக்கப்பட்ட நியமன அதிகாரம்**

தனிப்பட்ட அதிகாரம் பொறுப்புரிமை அமைப்பினைப் (trust) போன்றதாகும். ஈண்டு ஒருவர் தம்முடைய சொத்தின் பேரில் பொறுப்புரிமையை ஏற்படுத்தி, அச் சொத்துகள் யாருக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்றுகூறாமல் தாம் குறிப்பிடும் சிலரில் யாரேனும் ஒருவருக்குக் கொடுக்கலாம் என்று தேர்ந்தெடுக்கும் அதிகாரத்தை வேறொருவருக்குக் கொடுக்கிறார். அவ் வதிகாரம் பெற்றவர் அதனை நிறைவேற்றாவிட்டால் பயனடைவோர் ஏமாற்றமுறுவர். அப்படி ஏமாற்றமடையாதபடி அதிகார மளித்தவர் குறிப்பிட்ட அனைவருக்கும் அச் சொத்துகள் சமமாகப் பங்கிடப்பட்டுக் கொடுக்கப்பட வேண்டும்.

**தனிப்பட்ட அதிகாரத்தினைப் பயன்படுத்தத் தேவையான நிபந்தனைகள்**

(1) இவ் வதிகாரத்தின் மூலம் பயனடைவோர் யாரெனக் குறிப்பிடப்பட்டு அக் குறிப்பிற்கிணங்க அவர்கள் உயிரோடிருக்க வேண்டும்.

(2) இவ் வதிகாரத்தினை உருவாக்கும் ஆவணத்தில் பதிலாள் நியமிக்கத் தவறினால் சொத்துகளைக் குறிப்பிட்ட வழியில் பிரித்துக்கொடுக்க வேண்டுமென்ற மாற்று உபாயங்கள் இருக்கலாகாது.

(3) இவ் வதிகாரத்தினை உயில்வழிதான் கொடுக்கவேண்டும்; வேறு ஆவணங்களின் மூலம் கொடுக்கலாகாது.

(4) இவ் வதிகாரத்தின்வழி பயனடைவோர் விருப்பாவண மளித்தவருக்குப் பிறகும் உயிரோடிருக்க வேண்டும்.

மேற்சொன்ன அதிகாரத்தினைப் பெற்றவர் அதனைப் பயன் படுத்தும் வரையில் அவ் வதிகாரத்தினைக் கொடுத்தவரின் சொத்துகளின்பேரில், அவர் குறிப்பிட்ட அனைவருக்கும் உரிமை யுண்டு. அவ் வதிகாரத்தினைச் செயல்படுத்தத் தவறினால் குறிப் பிட்ட அனைவரும் அச் சொத்துகளை எடுத்துக்கொள்வார்கள். (உ-ம்) சில சொத்துகளின் பேரில் ஏ, பி என்ற இருவருக்கும் வாழ்

நாள் அனுபவப் பாத்தியம் கொடுக்கப்பட்டது. இருவரும் இறந்த பின்னர் 'ஏ'-ன் மக்கள் எல்லோருக்கும் 'ஏ' உயில்வழியாகப் பிரித்துக்கொடுக்கும் அளவு பங்கு போய்ச் சேரவேண்டும் என்றும் கொடுக்கப்பட்டது. அப்படிக் கொடுக்கப்பட்ட அன்று ஏ-க்கு ஏழு மக்கள் இருந்தனர். அவர்களில் ஒருவர் 'ஏ' இறப்பதற்கு முன்னமே இறந்துவிட்டார். 'ஏ' தமக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரத்தினைப் பயன்படுத்தாமலே இறந்துவிட்டார். சொத்து களை ஏழு பங்காகப் போட்டு ஒரு பங்கினை இறந்துபோன பிள்ளையின் பிரதிநிதிகளுக்குக் கொடுக்கவேண்டுமெனத் தீர்ப் பளிக்கப்பட்டது.

### குறிப்பிட்ட ஒருவரின் வாரிசுகட்கு உயில்வழிக் கொடை

வாரிசு என்னும் சொல் ஒருவருக்குப்பின் அவரது சொத்து களை வாரிசுரிமைச் சட்டத்தின்படி பெறவிருக்கும் உரிமையினைப் பெற்றவரையே குறிக்கும். அதனால் அவரைச் சட்டப்படி வாரிசு எனவும் கூறலாம். ஒருவர் இறந்த பின்னர்தான் அவரது வாரிசு சென்று இன்னொருவர் வருகிறார். ஒருவர் உயிரோடிருக்கும் போது அவரது வாரிசு என்று எவரும் துணிந்து கூறவியலாது. காரணம் யாதெனில் ஒருவர் அவரது வாரிசு எனக் கூறுகின்ற வரை விட்டுவிட்டு, வேறு எவரை வேண்டுமானாலும் தம்முடைய வாழ்நாளுக்குள் தமது வாரிசாக நியமித்துத் தம் சொத்துகளைக் கொடுத்துவிடலாம். எனவே, மூதாதையர் இறந்த பின்னர்தான் அவரது வாரிசு தோன்றுகிறார் என்பது வெளிப்படை. ஒரு வருடைய வாரிசுகட்கு உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டால், உயில்வழியில் அவர் இறந்துபோனால், அவரது சொத்துகளைப் பெறத் தகுதி பெற்றவர்களே வாரிசாக உயில்வழிக் கொடை யினைப் பெறுவர்.

குறிப்பிட்ட ஒருவரின் வாரிசுகட்கோ, உறவினர்கட்கோ, குடும்ப உறுப்பினர்கட்கோ உயில்வழிக் கொடையொன்று கொடுக்கப்பட்டால், அக் கொடை பெறுநர் எந்தவித இடர்ப்பாடு மன்றி, நேரடியாகக் கொடையைப் பெறுவார். அக் கொடைச் சொத்துகளைக் குறிப்பிட்ட நபரின் சொந்தச் சொத்துகளாகக் கொண்டு தம் கடன்களையடைக்க வேறு சொத்துகளை விட்டு விட்டு உயில் இல்வழியில் இறந்துபோன நிலையில் கொடைச் சொத்துகளைப் பிரித்துக்கொடுக்க வேண்டும். ஈண்டு, கொடை பெறுநர் கொடைச் சொத்துகளை நேரடியாகவே பெறுகின்றனர். குறிப்பிட்ட ஒருவர் என்பவர் விருப்பாவணமளித்தவராகவேகூட இருக்கலாம். உதாரணமாக, 'ஏ' என்பவர் தம் சொத்துகளைத் 'தம் நெருங்கிய உறவினர்கட்கு' எனக் குறிப்பிட்டுக் கொடையாக

எழுதிவைத்தார். 'ஏ' கொடைச் சொத்துகளை தவிரத் தம் கடன் களை யடைக்கப் போதுமான சொத்துகளை விட்டு உயில்வழியில் இறந்துபோனால் அவரது சொத்துகள் எவரைச் சென்றடையுமோ, அவர்களே கொடையைப் பெறத் தகுதி பெற்ற நெருங்கிய உறவினர்கள்.

உயில்வழிக் கொடையொன்றனை ஒருவருக்கு கொடுத்து அவருடன் சிலரை நேரடிக் கொடை பெறுநராக அல்லாமல் குறிப்பிட்டிருந்தால், முன் குறிப்பிட்ட ஒருவர் மட்டுமே விருப் பாவணமளித்தவரின் சொத்துகளைப் பெறக்கூடியவர் (பிரிவு 97). முன்குறிப்பிட்டவர் மட்டுமே கொடையைப் பெறவேண்டு மென்பது விருப்பாவணமளித்தவரின் எண்ணம். பின்குறிப்பிடப் பட்ட சிலர், முன்குறிப்பிடப்பட்டவர் இல்லாதபோது கொடை யினைப் பெறுவர். குறிப்பிடப்பட்ட ஒருவரின் பிரதிநிதிகளுக்கோ, நிறைவேற்றாளர்கட்கோ, நிருவாகிகட்கோ உயில்வழிக் கொடை யொன்று கொடுக்கப்பட்டால், குறிப்பிடப்பட்ட கொடை பெறுநர் கொடையை நேரடியாகப் பெறக்கூடியவர். கொடைச் சொத்துகள் குறிப்பிடப்பட்டவருக்குச் சொந்தமானதாகக் கொண்டு உயில்வழியில் அவர் இறந்துபோனால் எப்படிப் பிரிக்கப் படுமோ அப்படிப் பிரித்துக் கொடுக்கப்படும் (பிரிவு 94;.

சொத்துகளைக் கொடையாக எவருக்குக் கொடுத்தாலும் வரையறுக்கப்பட்ட உரிமைகள் மட்டும் அவருக்குக் கொடுக்கப் பட வேண்டுமென்று உயிலில் கண்டிருந்தாலொழிய, கொடைச் சொத்துகளின்பேரில் விருப்பாவணமளித்தவருக்குள்ள உரிமை கள் அனைத்தும் கொடைபெறுநரைப் போய்ச் சேரும் (பிரிவு 95).

விருப்பாவணமளித்தவர் இறந்த நாளினின்று உயில் செயல் படுகிறது. உயில்வழிக் கொடைகளும் அந் நாளிலிருந்தே அமலுக்கு வருகின்றன. அந் நாளில் கொடைபெறுநர் உயிரோ டிருக்க வேண்டும். அவ்வாறு உயிரோடில்லாவிட்டால் கொடை செல்லாது. அதனைத் தடுக்கும்பொருட்டு உயில் அமலுக்கு வரும் நாளில் கொடைபெறுநர் இறந்திருந்தால் வேறொருவருக்குப் போய்ச் சேரும்படி எழுதிவைப்பதுண்டு. இதனை, இரண்டில் ஒன்றான கொடை' (Bequest in Alternative) எனலாம்.

ஒரு சொத்தினை ஒருவருக்குக் கொடையாகக் கொடுத்துக், கொடை அமலுக்கு வரும் நாளன்று அவர் உயிரோடில்லா விட்டால் வேறொருவருக்கோ, ஒரு வகுப்பினருக்கோ கொடுத் தால் அதுவே 'இரண்டில் ஒன்றான கொடை' ஆகும். இக்

கொடையில் மாறுபட்ட எண்ணங்கள் ஏதும் தெரிவிக்கப்படாம லிருந்தால் கொடை அமலுக்கு வரும் நாளன்று, முதலில் கூறப்பட்ட கொடைபெறுநர் உயிரோடிருந்தால் கொடையினை அவர் பெறுவார். அவர் இறந்திருந்தால் இரண்டாவது கூறப்பட்ட நபரோ, வகுப்பினரோ அக் கொடையினைப் பெறுவார் (பிரிவு 96).

# 8. வகுப்பினருக்குக் கொடைகள்

## (Class Gifts)

ஒரு பொதுவான பெயரால் அழைக்கப்படும் பல நபர்களைக் கொண்ட ஒரு கூட்டத்தினை, ஒரு வகுப்பு எனக் கூறுவது வழக்கம். (உ-ம்) பிள்ளைகள், பேரப் பிள்ளைகள் என்பன. ஆனால், சட்டத்தின் மொழியில் ஒரு வகுப்பு எனப்பட்டால் விருப்பாவண மளித்தவருக்கு உறவினரான பல நபர்களைக்கொண்டு பொது வான விவரங்களைக் கொண்ட ஒரு குழுவாகும். கொடையினை மொத்தமாகக் கொடுக்கும்போது, எண்ணிக்கை நிச்சய மில்லாமல் பின்னர் நிச்சயித்துக்கொண்டு சமமான பங்கினைப் பெறும் ஒரு வகுப்பினருக்குக் கொடுக்கப்படும் கொடையே 'வகுப்பினருக்குக் கொடை' என்பது.

வகுப்பினருக்குக் கொடை பிரிவு 98-ல் கூறப்பட்டுள்ளது. குறிப்பிட்ட வகுப்பினரை எப்படித் தெரிந்துகொள்வது என்பதனைப் பிரிவுகள் 111, 121 கூறுகின்றன. வகுப்பினருக்குக் கொடை கொடுக்கப்பட வேண்டிய கொடையின் அளவினையும் காலவரையறையையும் பிரிவு 115 கூறுகின்றது.

தனி ஒருவரைக் குறிப்பிடாமல் பொதுவாகக் குறிப்பிட்ட ஒரு வகுப்பினருக்குக் கொடை கொடுக்கப்பட்டால் அவர்கள் அதனைப் பெற்றுக் கொள்ளலாம்.

### மஞ்சம்மா எ. பத்மநாபய்யா 12 Mad. 393

ஓர் இந்து விருப்பாவணமளித்தவர், 'ஏ' என்பவருக்குத் தம் சொத்துகளைக் கொடையாகக் கொடுத்தார். அவர் வழித் தோன்றல்களின்றி இறந்துபோனால், தம்முடைய மகளின் வழித் தோன்றல்கள் அனுபவிக்கலாம் என எழுதிவைத்தார். வழித் தோன்றல்கள் என்பது ஒரு வகுப்பினரைக் குறிக்கும். ஆகவே, இது ஒரு வகுப்பினருக்கான கொடை எனத் தீர்ப்பளிக்கப் பட்டது.

உயில்வழிக் கொடையினைப் பெறத் தகுதியுடைய குறிப்பிட்ட வகுப்பின் உறுப்பினர்கள் யார் என்று கணித்திடும் சமயம், விருப்பாவணமளித்தவரின் சொத்துக்களைப் பிரித்துக் கொடுக்கும் சமயம் ஆகும்; சொத்துகளைப் பிரித்துக்கொடுத்தல், விருப்பாவணமளித்தவர் இறந்த உடன்தான். ஆதலால், விருப்பாவணமளித்தவர் இறந்த சமயத்தில் உயிரோடிருக்கும் குறிப்பிட்ட வகுப்பின் உறுப்பினர்கட்கு மட்டுமே கொடைச் சொத்துகள் போய்ச் சேரும். உயிலில் கண்ட இலட்சணங்களுடன் அதன் பிறகு வரும் நபர்கள் பங்குபெற அனுமதிக்கப்படமாட்டார்கள். விருப்பாவணமளித்தவர் இறக்கும்நாளில் குறிக்கப்பட்ட உறுப்பினர்கள் ஒருவரும் இல்லாவிட்டால் கொடை விழலாகி விடுகிறது.

உதாரணமாக 'ஏ' என்பவர் ரூ. 1,000/-ஐ, 'பி' என்பவர்க்கு ஆயுட்கால அனுபவப் பாத்தியத்திற்குக் கொடுத்து அவர் இறந்த பின்னர் 'சி' என்பவரின் பிள்ளைகட்குச் சமமாகக் கொடுக்கும்படி உயில்வழிக் கொடையினை எழுதிவைத்தார். 'பி' இறக்கும் நாள்வரை 'சி'-க்குப் பிள்ளைகளே கிடையாது. 'பி' இறந்த பிறகு இக் கொடை விழலாகிவிடும்.

சொத்துகளைப் பங்கிடும் சமயத்தினை விருப்பாவணமளித்தவர் தாம் இறந்த நாளுக்குப் பிறகு தள்ளிப் போடலாம். கொடையுடன் நிபந்தனைகளைச் சேர்ப்பதன் மூலமாகவும் அல்லது வரையிலா நிலைக்கு எதிர்விதியின் (Rule against perpetuity) மூலமாகவும் சொத்துகளைப் பங்கிடும் சமயத்தினைத் தள்ளிப் போடலாம்.

ஒரு வகுப்பினருக்குக் கொடுத்த கொடையினைப் பங்கிடும் சமயத்தினை, தாம் இறந்த பிறகு 20 ஆண்டுகள் கழித்துப் பங்கிட வேண்டும் என்று விருப்பாவணமளித்தவரே குறிப்பிட்டிருத்தல் நிபந்தனையுடன்கூடிய கொடையாகும். விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளில் உயிரோடு இருக்கும் குறிப்பிட்ட வகுப்பின் உறுப்பினர்களையும், இறந்துபோன உறுப்பினர்களின் பிரதிநிதிகளையும் பங்கிடும் சமயத்தினைத் தள்ளிப்போட்ட ஆண்டான 20 ஆண்டுகட்குள் பிறந்த உறுப்பினர் அனைவரையும் சேர்த்து, கொடைச் சொத்தினைக் குறிப்பிட்ட சமயம் முடிந்தவுடன் பங்கிடவேண்டும். அவர்கள் அனைவருக்கும் சொத்தின்பேரில் பூரண உரிமையுண்டு. அப்படிப் பங்கிடும் சமயத்தினைத் தள்ளிப் போடும்போது அக் கால அளவு, வரையிலா எதிர்நிலை விதிக்கு முரணாக இருக்கக்கூடாது என்பதனை நினைவில் இருத்தல் வேண்டும். அப்படி முரணாக இருந்தால் அது விழலாகிவிடும்.

குறிப்பிட்ட ஒருவருக்கு அல்லது உறவினர்களான ஒரு வகுப்பினருக்கு, உயில்வழிக் கொடையாகச் சொத்துகள் கொடுக்கப்பட்டது. குறிப்பிட்ட ஒருவருக்கு வாழ்நாள் அனுபவப் பாத்தியம் இருப்பதால் கொடைச் சொத்துகளை அவர்களிடையே பங்கிடும் நாள் விருப்பாவணமளித்தவரின் இறந்த நாளுக்குப் பிறகு தள்ளிப் போடப்பட்டிருக்கிறது. குறிப்பிட்ட நபர் இறக்கும் நாளன்று அவரது வாழ்நாள் அனுபவப் பாத்தியமும் முடிவடைகிறது. அன்றே கொடைச் சொத்துகளை அவரது உறவினரிடையே பங்கிட வேண்டும். விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்று உயிரோடிருந்து பிறகு இறந்துபோன குறிப்பிட்ட நபரின் உறவினர்கள் அவரது பிரதிநிதிகட்கும் குறிப்பிட்ட நபர் இறந்த நாளன்று உயிரோடிருக்கும் அவரது உறவினர்கட்கும் அக் கொடைச் சொத்துகள் பிரித்துக் கொடுக்கப்பட வேண்டும். இது பிரிவு 111-ல் கூறப்பட்ட விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்று உயிருடனிருக்கும், குறிப்பிட்ட வகுப்பினருக்குக் கொடை சென்றடையும் என்ற பிரிவுக்கு விதிவிலக்கு.

உதாரணம்: ஒருவன் ஒரு வீட்டின் குத்தகையை 'ஏ' என்பவரின் வாழ்நாளுக்குப், அவருக்குப் பின் 'பி'-ன் பிள்ளைகட்கும் என்று கொடையாகக் கொடுத்தார். விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளன்று 'பி'-க்கு 'சி', 'டி' என்ற இரு பிள்ளைகள் இருந்தனர். அதன் பிறகு 'ஏ'-என்பவரின் வாழ்நாளில் தம்முடைய நிறைவேற்றாளர் 'இ' என்பவரை விட்டு இறந்துவிடுகிறார். 'ஏ' இறக்கும் நாளன்று 'டி' உயிருடன் இருக்கிறார். எஞ்சியுள்ள குத்தகை நாள்களை 'டி'-யும், 'இ'-யும் இணைந்து அனுபவிப்பார்கள்.

ஒரு வகுப்பினருக்கு உயில்வழிக் கொடையொன்று கொடுக்கப்பட்டால், அவ் வகுப்பினரில் சிலருக்குப் பிரிவு 113 அல்லது பிரிவு 114-ல் கூறப்பட்ட நிபந்தனைகளால் கொடை செயல்பட இயலாவிட்டால், அச் சிலருக்குக் கொடுக்கப்பட்ட கொடை மட்டுமே இல்லாதொழியும் (பிரிவு 115).

பிரிவு 113, பிறக்கவிருக்கும் ஒருவருக்குக் கொடுக்கப்படும் கொடைச் சொத்துகளின் உரிமையின் அளவினைக் கூறுகிறது. விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்று பின்னால் பிறக்கவிருக்கும் (unborn) ஒருவருக்கு உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டால், விருப்பாவணமளித்தவருக்குக் கொடைச் சொத்துகளின் பேரிலிருந்த உரிமைகள் அனைத்தும் கொடுக்கப்படா

விட்டால், அவருக்குக் கொடுக்கப்பட்ட கொடை விழலாகிவிடும் என்பதே. அதேபோன்று பிரிவு 115-லும் கொடையொன்று ஒரு வகுப்பினருக்குக் கொடுக்கப்பட்டு அவ் வகுப்பினரில் சிலர் இன்னும் பிறக்க வேண்டியவர்களாயிருப்பின், விருப்பாவணமளித்தவருக்கு உண்டான உரிமைகள் அனைத்தும் அவர்கட்குக் கொடுக்கப்படாவிட்டால், அச் சிலரைப் பொறுத்து மட்டுமே கொடை விழலானதாகும்; ஏனையோருக்குக் கொடை செயல்படும்.

பிரிவு 114-ல் வரையிலா நிலைக்கு எதிரான விதிகள் கூறப்பட்டுள்ளன. உயில்வழிக் கொடை, கொடைபெறுநரைச் சென்றடையும் காலம் விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்று உயிரோடிருக்கும் குறிப்பிட்ட ஒருவர் அல்லது சிலரின் வாழ்நாளுக்குள் பிறந்திருக்கிறவர்கள் உரிமை வயதையடையும் காலத்திற்குப் பிறகும் காலம் தாழ்த்தப்படுமானால், அக் கொடை செல்லாது. பிரிவு 115-லும் கொடையினைப் பெறும் வகுப்பினரில் எவருக்குக் கொடைச் சொத்துகள் கொடைபெறுநரையடையும் காலம் பிரிவு 114-ல் கூறப்பட்டதுபோலக் காலந்தாழ்த்தப்படுகிறதோ அவர்களைப் பொறுத்தமட்டில் கொடை விழலாகிவிடும்.

உதாரணம்: ஒரு தொகை 'ஏ'-ன் வாழ்நாளுக்கும் அவருக்குப் பின் அவரது எல்லாப் பிள்ளைகளுக்கும் 25 வயதை யடைந்தவுடன் கொடுக்க வேண்டுமென்று, கொடையாகக் கொடுக்கப்பட்டது. விருப்பாவணமளித்தவர் இறந்தபோது சில பிள்ளைகளோடு 'ஏ' உயிரோடிருந்தார். விருப்பாவணமளித்தவர் இறந்த பின்னர் 'ஏ'-க்குப் பிள்ளைகள் இருக்கலாம். அவர்களில் சிலர் 'ஏ' இறந்து 18 ஆண்டுகள் கழிவதற்குள் 25 வயதையடைய மாட்டார்கள். விருப்பாவணமளித்தவர் இறந்தபோது உயிரோடிருந்த 'ஏ'-ன் ஒவ்வொரு பிள்ளையும் உயில்வழிக் கொடை பெற அனுமதிக்கப்பட்ட கால அளவுக்குள் 25 வயதையடைய வேண்டும். விருப்பாவணமளித்தவர் இறந்தபின் 'ஏ'-க்குப் பிறக்கும் பிள்ளைகளும் 'ஏ' இறந்த 18 ஆண்டுகட்குள் 25 வயதையடையாத பிள்ளைகட்கும் அக் கொடை செயல்படாது. அவர்களைத் தவிர்த்து 'ஏ'-ன் ஏனைய பிள்ளைகட்குக் கொடை செயல்படும்.

ஒரு வகுப்பினரில் குறிப்பிட்ட வயதையடைந்தவர்கட்கு மட்டுமே உயில்வழிக் கொடையென எழுதப்பட்டிருந்தால், அக் குறிப்பிட்ட அவ் வயதினை யடையாத ஒருவர் அவ் வயதினை

அடையும்வரை கொடைச் சொத்துகளின்மேல் பூரண உரிமையும் பாராட்டவியலாது. ஆனால், இடைப்பட்ட காலத்தில், வகுப்பினரின் பயனுக்காகவும், நலனுக்காகவும், வாழ்வதற்காகவும் கொடைச் சொத்துகளினின்று வரும் வருவாயைப் பயன்படுத்தலாம். இக் கருத்தினைச் சொத்துமாற்றுச் சட்டம், பிரிவு 22-ல் காணலாம்.

# 9. ஒன்றுசேர்ந்த கொடைகள்

உயிலில் ஒரே நபருக்கு இருமுறை கொடை கொடுக்கப் பட்டிருந்தால், கொடைபெறுநர் இரு கொடைகளையும் பெறுவாரா, ஒன்றினை மட்டும் பெறுவாரா என்ற ஐயமெழும். உயிலுக்குப் பொருள் கொள்ளும்போது இரண்டாம் முறை கூறப்பட்ட கொடை முதலில் கூறப்பட்ட கொடையின் மறு கூற்று எனக் கொள்வதா, இரண்டாவது கூடுதலான கொடை எனக் கொள்வதா என ஐயமெழுவது இயல்பு. இந் நிலையில் விருப்பாவணமளித்தவரின் நோக்கமே அவ் ஐயத்தினைத் தெளிவு படுத்தும் விதியாகும். விருப்பாவணமளித்தவரின் நோக்கம் எதுவென்று உயிலில் தெளிவுபடாவிட்டால் சட்டமே பொருள் மயக்கத்தினை அகற்ற விதிகளை அமைக்கின்றது.

ஒரு குறிப்பிட்ட பொருள் ஒருவருக்கே ஒரே உயிலிலோ அல்லது முதலில் உயிலிலும், பின்னர் உயிலிணைப்பிலுமாக இருமுறைக் கொடையாகக் கொடுக்கப்பட்டால் அக் கொடை பெறுநர் குறிப்பிட்ட அந்தப் பொருளை மட்டுமே பெறுவார்.

உதாரணம் :

(1) ஒரு மோதிரம் அல்லது ஒரு கைக்கடிகாரம்.

(2) ஒரே எண்ணிக்கையுள்ள தொகை ஒருவனுக்கு ஓர் உயிலில் இரு கொடைகளாகக் கொடுக்கப்பட்டால் இரண்டாவது கொடை மறுகூற்று எனக் கொண்டு கொடைபெறுநர் ஒரு கொடையினை மட்டுமே பெறுவார்.

(3) வெவ்வேறு எண்ணிக்கையுள்ள தொகைகளை இரு கொடைகளாக ஒரே உயிலில் ஒருவருக்குக் கொடுத்தால் கொடைபெறுநர் இரண்டையுமே பெறுவார்.

(4) ஒரே எண்ணிக்கையுள்ள அல்லது மாறுபட்ட எண்ணிக்கையுள்ள தொகைகளை இரு கொடைகளாக ஒருவருக்கே, ஒன்றை ஓர் உயில் மூலமாகவும்

> மற்றொன்றை ஓர் உயில் இணைப்பு மூலமாகவும் இரு ஆவணங்களில் கொடுத்தால், கொடைபெறுநர் இரண்டையும் பெறுவார்.

உயிலில் கூறப்பட்ட கொடை ஒன்றுசேர்ந்த கொடையா, ஒன்றுக்குப் பதில்கொடையா என்று நிருணயிப்பதற்கான விதிகளை உயிலைப் பொருள் கொளல் விதிகள் என்பதைவிட, எக் கொடையெனத் துணியும் விதிகள் எனலாம். உயிலினைப் படிக்கும்போது விருப்பாவணமளித்தவர் கொடைபெறுநருக்கு இரு கொடைகளைக் கொடுக்க எண்ணினார் எனத் தெரியும் எண்ணத்தினைக் காட்டும்படி ஐயமுள்ள கொடைகளுக்கு எதிராக நீதிமன்றம் யூகிக்கின்றது. இவ் யூகத்தினை மறுக்க வாய்மொழிச் சாட்சியங்களைக் கொண்டுவரலாம். நீதிமன்றம் யூகிக்காவிட்டால் வாய்மொழிச் சாட்சியங்களைக் கொண்டுவர இயலாது.

# 10. எஞ்சிய உயில்வழிக் கொடை

ஒருவர் சொத்துகளை விட்டு இறந்தவுடன் அவரது சொத்துகளிலிருந்து அவரது ஈமச்சடங்குகளுக்கான செலவுகள், இறப்பதற்கு முன்பு அவருக்கான மருத்துவம் மற்றுமுண்டான செலவுகள், அவரது கடன்களையடைத்தல், உயில் இருந்தால் உயில் மெய்ப்பிதழ் (Probate) வாங்குவதற்கான செலவுகள் அல்லது நிருவாக உரிமைப்பத்திரம் (Letters of Administration) வாங்குவதற்கான செலவுகள், சொத்து நிருவாகச் செலவுகள், உயில் வழிக் கொடைகள் ஆகிய செலவினங்கள் முதலில் கொடுக்கப்பட வேண்டும். மேற்கண்டவற்றைக் கொடுத்துத் தீர்த்த பின்பு ஏதும் எஞ்சியிருப்பின் அதனை எஞ்சிய சொத்துகள் என்பர். சுருங்கக் கூறின் உயில்வழியாக வகுத்தமைக்காத அல்லது ஒழுங்கு செய்யப்படாத சொத்துகளின் பகுதியே எஞ்சிய சொத்துகளாகும்.

விருப்பாவணமளித்தவர் தம் உயிலில், தனி நபர்களுக்குக் குறிப்பிட்ட சொத்து அல்லது தொகை எனக் குறிப்பாக எழுதி வைத்துவிட்டு, இறுதியாக எஞ்சிய சொத்துகளைக் குறிப்பிட்ட ஒருவருக்குக் கொடுப்பதாக எழுதி வைப்பதுண்டு. இதனை எஞ்சிய உயில்வழிக் கொடையெனச் சொல்லலாம். எஞ்சிய உயில்வழிக் கொடையென்பது விருப்பாவணமளித்தவரின் மொத்தச் சொத்துகளின் எஞ்சிய சொத்துகளைக் கொண்டது என்று கூறவியலாது. எஞ்சிய சொத்துகள் பலவாக இருக்கலாம்; குறிப்பிட்ட ஒவ்வொரு சொத்திலும் கொடுத்ததுபோக எஞ்சியிருக்கலாம். எஞ்சிய உயில்வழிக் கொடை கழிவுறும்போது (Lapse) விருப்பாவணமளித்தவர் அச் சொத்துகளை எப்படிச் செலவிட வேண்டும் என்று மாறுபட்ட எண்ணங்களைத் தெரிவித்திருந்தாலொழிய அவரது எஞ்சிய சொத்துகளோடு போய்ச் சேரும். கொடுக்கப்பட்ட கொடை கழிவுறும்போது அஃது எஞ்சிய சொத்தாகக் கருதப்படும். எஞ்சிய சொத்துகளைக் கொடையாகக் கொடுப்பதுபற்றி உயிலில் ஏதும் சொல்லப்படாவிட்டால், அவ் வெஞ்சிய சொத்துகள்வரை அவர் உயில் இறந்த

தாகக் கொண்டு அதனை வாரிசுகட்கு உயில்வழியில் வாரிசுரிமை செய்யவேண்டும். எஞ்சிய கொடையிருப்பின் கழிவுறும் கொடை ஏதுவாயினும் எஞ்சிய சொத்துகளுடன் சேர்ந்து எஞ்சிய கொடை பெறுநரைச் சென்றடையும்.

(உ-ம்) 'ஏ' என்பவர் கொடுத்த உயில்வழிக் கொடையில் ஒன்று பிரிவு 118-ன்படி செல்லாததானது. மற்றொன்று கொடை பெறுநர் இறந்துவிட்டதால் கழிவுற்றது. எஞ்சியவற்றை 'பி' என்பவருக்குக் கொடையாகக் கொடுத்தார். உயில் உருவாக்கின நாளுக்குப்பின் பண்ணை ஒன்றனை 'ஏ' வாங்கி, இறக்கும்வரை அஃது அவருக்குச் சொந்தமாக இருந்தது. இரு கொடைகளையும் பண்ணையையும் எஞ்சிய சொத்துகளாக 'பி' பெறுவார்.

எஞ்சிய கொடையென்பது கழிவுறும் கொடைகளையும் செயல்படா எல்லாக் கொடைகளையும், எஞ்சியதாகக் கொடுக்கப்பட்ட சொத்துகளையும் கொண்டதாகும். அதனைப் பெறுநர் எஞ்சிய கொடைபெறுநர் அல்லது எஞ்சிய உயில்வழி உரிமையர் எனப்படுவார். மேற்சொன்ன மூவகைச் சொத்துகளையும் பெறக்கூடியவர் உயில்வழிக் கொடைகள் கொடுத்த பின்னர், எஞ்சியதைக் கொடையாகப் பெறுபவரே எஞ்சிய கொடைபெறுநர் (Residuary legatee). விருப்பாவணமளித்தவர் இறக்கும்போது விட்டுச் செல்லும் சொத்துகள் அனைத்தையும் பெறுபவர் முழுதளாவிய உயில்வழி உரிமையர் (Universal legatee) எனப்படுவார்.

எஞ்சிய கொடைபெறுநரைக் குறிப்பிட அல்லது உருவாக்கத் தனிப்பட்ட சொற்களைப் பயன்படுத்த வேண்டுமென்றில்லை. சொத்தினின்று கடன்கள், கொடைகள், இதரச் செலவுகள் கொடுத்தபின் எஞ்சியவற்றை எவருக்குக் கொடுக்கவேண்டுமென்ற எண்ணத்தை விருப்பாவணமளித்தவர் தெளிவாகத் தெரிவித்திருந்தால், அதுவே போதும். குறிப்பிட்ட எஞ்சிய கொடைபெறுநர் எஞ்சியவற்றைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

## In Re Rustomji Lentin 22 Bom. L.R. 355

விருப்பாவணமளித்த ஒருவர் தம் மனைவியை நிறைவேற்றாளராக நியமித்து, சொத்துகளை அவரிடம் ஒப்படைத்து அவள் இறந்து 12 மாதங்களுக்குப் பின் அவள் விட்டுச்செல்லும் சொத்துகள் தம் மகன்களுக்கும் மகள்களுக்கும் இடையே சமமாகப் பிரித்துக்கொடுக்கப்பட வேண்டுமென்று அறிவுறுத்தினார்.

பின்னர் உயிலில் 12ஆவது பத்தியில், கொடுக்கப்பட வேண்டிய பணத்தையும் கொடைகளையும் கொடுத்துத் தீர்த்தபின் எஞ்சியுள்ளதைத் தம் மனைவிக்குக் கொடுப்பதாக எழுதியிருந்தார். மனைவி உயில் ஒன்றைவிட்டு இறந்துபோனார். மனைவி எஞ்சிய கொடைபெறுநராகச் சொத்துகளைப் பெற்றுக்கொண்டாரா என்ற வினாவெழுந்தது. எஞ்சிய கொடைபெறுநரென்று தெளிவாகக் கூறப்படாததால் அவள் எஞ்சிய கொடைபெறுநரல்லள் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

# 11. உயில்வழிக் கொடை சேர்ந்தடையும் காலம்

ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்படவேண்டிய சமயம் உயிலில் குறிக்கப்படாமலிருந்தால், விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்றே கொடைபெறுநரைச் சேர்ந்தடையும். அந் நாளில் கொடைபெறுநர் இறந்திருந்தால் பிரிவு 105-ன்படி கொடை கழிவுறும். அந் நாளில் உயிருடன் இருந்து பின்னர்க் கொடையினைப் பெறுமுன் இறந்துவிட்டால் அவரது பிரதிநிதிகள் அக் கொடையினைப் பெற்றுக்கொள்வார் (பிரிவு 104). விருப்பாவணமளித்தவர் இறந்த அன்று கொடைச் சொத்துகள் கொடைபெறுநரைச் சேர்ந்தடைந்தாலும் அந் நாளினின்று ஓராண்டு கழிவதற்குள் கொடைச் சொத்துகளின் உடைமையைத் தரும்படி கேட்கவியலாது. பிரிவு 332-ல் கண்டபடி உயில் நிறைவேற்றாளர் கொடையினைக் கொடுத்த தம் ஒப்புதலைத் தெரிவிக்கும்வரை கொடைபெறுநரின் உரிமைகள் தாற்காலிகமானதே. சேர்ந்தடைவு இருவகைக் காலவரைக்குள் நிகழவேண்டும். ஒன்று அதமக் கால அளவு, மற்றொன்று உச்சக் கால அளவு. விருப்பாவணமளித்தவர் இறந்தவுடன் கொடைச் சொத்துகள் கொடைபெறுநரைச் சேர்ந்தடையும். அதுவரை கொடை செயல்படாது. இதுதான் கொடைச் சொத்துகளின் பேரில் கொடைபெறுநர் உரிமை பெறும் காலத்தின் குறுகிய அளவு. எனவே, இதனை அதமக் கால அளவு எனலாம். கொடைபெறுநரை உரிமை சேர்ந்தடையும் காலத்தைச் சட்டம் அனுமதிக்கும் வரையிலா நிலைக்கு எதிர்விதியின் கால அளவுக்கு அப்பால் தள்ளிப்போட இயலாது. இதனையே உச்சக் கால அளவு எனலாம்.

கொடைபெறுநரைக் கொடைச் சொத்துகள் இரு விதங்களில் சேர்ந்தடையும். ஒன்று உடைமை சேர்ந்தடைதல். இரண்டாவது உரிமை சேர்ந்தடைதல். பிரிவு 104, உடைமை சேர்ந்தடைதலைக் கூறுகின்றது. சேர்ந்தடையும் காலம் குறிக்கப்படாவிட்டால், விருப்பாவணமளித்தவர் இறந்த நாளினின்றே

கொடைச் சொத்துகளின் உடைமை கொடைபெறுநரைச் சேர்ந்தடையும். உடைமையைப் பெறுதல் காலந்தாழ்த்தப்பட்டு, உரிமை சேர்ந்தடைதலைப் பிரிவு 119 கூறுகின்றது. இதனையே சொத்து மாற்றுச் சட்டம் பிரிவு 19-ல் காணலாம்.

கொடைபெறுநர் கொடைச் சொத்துகளின் உடைமையினை உடனடியாகப் பெறாமல் பின்னர்ப் பெறுவார் என உயிலின் வாசகத்தில் கண்டிருந்தால், மாறுபட்ட எண்ணங்கள் ஏதும் தெரிவிக்காமலிருந்தால் அக் கொடையினைக் குறித்த சமயத்தில் பெறும் உரிமை விருப்பாவணமளித்தவர் இறந்தவுடன் கொடைபெறுநரைச் சேர்ந்தடையும். அக் கொடையினைப் பெறாமல் அதற்கு முன்னரே இறந்துவிட்டால், கொடைபெறுநரின் பிரதிநிதிகளைச் சென்றடையும். இதுவே சேர்ந்தடையுரிமை எனப்படும்.

உடைமை பெறுதல் காலந்தாழ்த்துவதாலும், வேறொருவருக்கு முன் உரிமையினைக் கொடுத்திருப்பதாலும், கொடுக்கப்படும் நாள்வரை வருவாய் சேமித்து வைக்கப்பட வேண்டுமென்பதாலும், குறிப்பிட்ட சம்பவம் நடைபெற்றவுடன் வேறொருவருக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்பதனால், கொடைச் சொத்துகளின் உரிமை சேர்ந்தடையாது என எண்ண முடியாது.

ஒரு கொடையின் உடைமையினை உடனடியாகக் கொடுக்காமல் உரிமை சேர்ந்தடைந்தது என்பது பின்வந்தடையும் உடைமையினைப் பெறத் தற்சமயம் பெற்ற நீக்கவியலாத உரிமையினைக் குறிக்கின்றது.

உதாரணம்: ஒரு கொடை 'ஏ'-ன் வாழ்நாளுக்கும் அவருக்குப்பின் 'பி'-க்கும் என்று கொடுக்கப்பட்டால், 'ஏ' உயிரோடிருக்கும்வரை சொத்தின் உடைமையை 'பி' பெற முடியாது. ஆனால், அக் கொடைச் சொத்தின்பேரில் அவருக்கு உரிமையுண்டு. அவ் உரிமை அவரைச் சேர்ந்தடைந்தது ஆதலால், 'ஏ' க்கு முன்னரே 'பி' இறந்துபோனால், அவரது பிரதிநிதிகள் அச் சொத்துகளைப் பெறுவார்கள். அதுபோலவே 'ஏ' விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளிலேயே இறந்துபோனால், 'பி' கொடையினைப் பெற்றுக்கொள்வார். உயிலில் மாறுபட்ட எண்ணங்கள் கண்டிருந்தாலன்றி உடைமையினைப் பெறுவது காலந்தாழ்த்தப்படுவதால், உரிமை சேர்ந்தடைதல் த[illegible]ட படாது. விருப்பாவணமளித்தவர் இறந்தநாள் முதல் கொ[illegible]ட பெறுநரை உயில்வழிக் கொடையின் உரிமைகள் சேர்ந்த[illegible]ம்.

எடுத்துக்காட்டு :

(1) 'ஏ' என்பவர் 'பி'-க்கு ரூ. 100-ஐச் 'சி' என்பவர் இறந்தவுடன் கொடுக்கும்படியாகக் கொடையாகக் கொடுத்தார். 'ஏ' இறந்தவுடன் கொடையைப் பெறும் உரிமை 'பி'-ஐச் சேர்ந்தடையும். 'ஏ'-க்குப் பின்னரும் 'சி'-க்கு முன்னரும் 'பி' இறந்துபோனால், அவரது பிரதிநிதிகள் அக் கொடையினைப் பெற்றுக்கொள்ளத் தகுதியுடையவர்கள்.

(2) 'ஏ' என்பவர் 'பி' 18 வயதையடையும்போது கொடுக்கும்படி ரூ. 100/-ஐக் கொடையாகக் கொடுத்தார். 'ஏ' இறந்தவுடன் கொடையின் உரிமை 'பி'-ஐச் சேர்ந்தடையும்.

(3) 'ஏ'-வுக்கு வாழ்நாளுக்கும் அவருக்குப் பின் 'பி'-க்குமென ஒரு தொகை கொடையாகக் கொடுக்கப்படுகிறது. விருப்பாவணமளித்தவர் இறந்தவுடன் 'பி'-க்குக் கொடுக்கப்பட்ட கொடையின் உரிமை 'பி'-ஐச் சேர்ந்தடையும்.

(4) 'ஏ' என்பவர் தம் சொத்துகள் அனைத்தையும் உயில் வழியாக 'பி'-ன் பொறுப்பில் ஒப்படைத்துச் சொத்தின் வருவாயினின்று சில கடன்களையடைக்கவும், அதன் பிறகு ஒரு தொகையினைச் 'சி'-க்குக் கொடையாகவும் கொடுத்துவிடும்படி எழுதிவைத்தார். 'ஏ' இறந்தவுடன் 'சி'-க்குக் கொடுக்கப்பட்ட கொடையின் உரிமைகள் அவரைச் சேர்ந்தடையும்.

(5) 'ஏ', 'பி', 'சி' என்ற மூவரும் 18 வயதையடைந்தவுடன் கொடுக்கும்படியாகத் தொகையொன்று ஒரு நிபந்தனையின்பேரில் கொடையாகக் கொடுக்கப்பட்டது. நிபந்தனை யாதெனில் 18 வயதுக்குள் அவர்களெல்லோரும் இறந்துபோனால் கொடையினை 'டி'-க்குக் கொடுக்க வேண்டுமென்பது. விருப்பாவணமளித்தவர் இறந்தவுடன் பங்குகளின் பேரில் உரிமை 'ஏ', 'பி', 'சி' மூவரின் பேரில் 18 வயதுக்குள் மூவரும் இறந்துவிட்டால் நீக்கப்படும் என்ற நிபந்தனையோடு சேர்ந்தடையும். கடைசியாக வாழ்பவரைத்தவிர அவர்களில் எவரேனும் இறந்துவிட்டால் சேர்ந்தடைந்த உரிமை அவர்களது பிரதிநிதிகளுக்குப் போய்ச்சேரும்.

பின்வரும் காரணங்களைக்கொண்டு சேர்ந்தடையும் உரிமையினைப் பாதிக்கும்படியான யூகத்தைக் கொள்ளக்கூடாது.

(1) உயில்வழிக் கொடையின் உடைமைகளைப் பெறுவது காலந்தாழ்த்தப்படுவதாலோ (எ-டு: 1) அல்லது வேறொருவருக்கு வாழ்நாள் பாத்தியம் கொடுப்பதாலோ (எ-டு: 3) அல்லது,

(2) கொடையினைக் கொடுக்கும் காலம் வரும்வரை வருவாயினைச் சேர்த்துவைக்கும்படி கூறப்பட்ட அறிவுரைகள். உதாரணமாக: விருப்பாவணம் அளித்தவரின் கடன்களைக் கொடுக்கும்பொருட்டு (எ-டு: 4) அல்லது,

(3) குறிப்பிட்ட சம்பவம் நடைபெற்றால் உயில்வழிக் கொடை வேறொருவருக்குச் செல்லும் என்ற நிபந்தனையுடன் கொடுக்கப்பட்ட கொடை (எ-டு: 5).

மேற்கூறிய காரணங்களைக்கொண்டு கொடைபெறுநரைச் சேர்ந்தடையும் உரிமை கிடையாது என யூகிக்கக்கூடாது.

**சேர்ந்தடை உரிமைக்கும் நிகழ்வடை உரிமைக்குமுள்ள வேறுபாடுகள்**

உயிலில் கண்ட சொற்கள் சேர்ந்தடை உரிமையினைக் கொடுக்கின்றதா நிகழ்வடை உரிமையினைக் கொடுக்கின்றதா என்ற வினா உயிலுக்குப் பொருள்கொள விழையும்போது எழுவது இயல்பு. சொற்களுக்கு இயற்கையான பொருள்கொண்டு விருப்பாவணமளித்தவரின் எண்ணத்தை அறிந்துகொள்வதே நீதிமன்றத்தின் இயல்பு. உரிமைகள் சேர்ந்தடைதலைச் சார்ந்தே நீதிமன்றத்தின் துணிபும் இருக்கும்.

நடைபெறவிருக்கும் சம்பவம் நடைபெற்றவுடன் கொடுக்கப்பட வேண்டுமென்று ஒருவருக்கு உரிமையொன்று கொடுக்கப்பட்டால் அஃது ஒரு சேர்ந்தடை உரிமையாகும்.

நடைபெறலாம் அல்லது நடைபெறாமலும் இருக்கலாம் என்ற நிச்சயமற்ற குறிப்பிட்ட சம்பவம் நிகழ்ந்தவுடன் கொடுக்கப்பட வேண்டுமென்று உரிமை கொடுக்கப்பட்டால் அது நிகழ்வடை யுரிமையாகும்.

சேர்ந்தடையுரிமையினை அனுபவித்தல் உடனடியாகவோ, காலந்தாழ்த்தியோ கொடுக்கப்படலாம். அவ் வுரிமையினை அனுபவித்தல் என்பது நிச்சயமாக நடைபெறக்கூடிய நிகழ்ச்சியாகும். சுருங்கக்கூறின் ஒரு சொத்தினை அனுபவிக்கும் உரிமையினை உடனடியாகக் கொடுப்பது அல்லது பிறிதொரு காலத்தில் அதனை அனுபவிக்கும் உரிமையினை உடனே கொடுப்பது சேர்ந்தடை உரிமையாகும்.

கொடைபெறுநர் 18 வயதினையடைந்தவுடன் கொடுக்க வேண்டுமென்று, கொடுக்கவேண்டிய காலத்தினைத் தாழ்த்திக்

கொடுக்கப்பட்ட கொடை அல்லது நடைபெறவிருக்கும் சம்பவத்தினைச் சார்ந்த கொடை ஆகியவற்றில் கொடைபெறுநரின் உரிமை சேர்ந்தடை உரிமையாகும்.

*உதாரணம் :* விருப்பாவணமளித்த ஒருவர் தம் மகனுக்கு அவனின் தாயார் இறந்தவுடன் கொடுக்கும்படியாக 100ஐக் கொடையாகக் கொடுத்தார். தாய்க்குமுன் மகன் இறந்துவிட்டான். கொடையின்மேல் மகனுக்குச் சேர்ந்தடையுரிமை உண்டு. ஆதலால், அவனது பிரதிநிதிகள் அக் கொடையினை எடுத்துக்கொள்வர்.

கொடை கொடுக்கப்படுதல் நிச்சயமற்ற சம்பவம் நடைபெறுதலைச் சார்ந்திருந்தால், எடுத்துக்காட்டாக :

'ஏ-க்குத் திருமணமாகும்போது கொடுக்க வேண்டும்' என்று வைத்துக்கொள்வோம். திருமணமாகுமுன் 'ஏ' இறந்துவிட்டார். குறிப்பிட்ட சம்பவம் இங்கு நடைபெறவில்லை. ஆதலால், கொடை நிகழ்வடை யுரிமையாகும்.

சேர்ந்தடை யுரிமையின் பயன் யாதெனில் கொடைபெறுநர் கொடைச் சொத்துகளின் சேர்ந்தடை யுரிமையைப் பெற்றபின் கொடை சொத்துகளைப் பெற்றுக்கொள்ளாமல் இறந்துபோனாலும், அச் சொத்துகள் அவரது நிறைவேற்றாளருக்கோ, அவரது பிரதிநிதிகட்கோ அல்லது அவர் குறிக்கின்ற ஒருவருக்கோ கொடுக்கலாம்.

# 12. கொடைகள் கழிவுறுதல்

## (Lapsing of Legacies)

கொடுக்கப்பட்ட கொடைகள் அனைத்தும் செயல்படும் என்று சொல்ல முடியாது. செயல்படுமுன் ஏற்படும் இயற்கையின் விளைவுகளால் கொடை செயல்படாமல் போகக்கூடும். இதனையே கழிவுறுதல் என்கிறோம். கழிவுறுதல் எவ்வாறு ஏற்படுகிறது எனக் காண்போம்.

**கழிவுறுதல் என்றால் என்ன ?**

உயிலினை உருவாக்கு முன்னரோ, உருவாக்கிய பின்னரோ, விருப்பாவணமளித்தவருக்கு முன் கொடைபெறுநர் இறந்து போவதால், உயில்வழிக் கொடை செயல்படாதுபோவதே கழிவுறுதல் எனப்படும். கொடை கழிவுறுதலைப் பிரிவு 105 கூறுகின்றது. கொடை பெறுநர் விருப்பாவணமளித்தவரை எஞ்சிப் (survive) பிழைக்காமலிருந்து வேறொருவருக்குக் கொடுக்க வேண்டுமென்ற மாறுபட்ட எண்ணம் உயிலில் தெரிவித்திருந்தாலன்றி, உயில்வழிக் கொடை செயல்படாமல் கழிவுற்று விருப்பாவணமளித்தவரின் எஞ்சிய சொத்துகளோடு சேர்ந்து விடும். கொடைபெறுநரின் பிரதிநிதி கொடையினைப் பெற, கொடைபெறுநர் விருப்பாவணமளித்தவரை எஞ்சி வாழ்ந்தார் என்பது நிரூபிக்கப்படல் வேண்டும்.

விருப்பாவணமளித்தவர் இறந்த நாளில் கொடைபெறுநர் உயிரோடிருத்தலைத்தான் எஞ்சி வாழ்தல் என்கிறோம். அப்படி எஞ்சி வாழ்ந்தால்தான் கொடைபெறுநர் கொடையினைப் பெற்றுக்கொள்ளவியலும். இல்லாவிட்டால் கொடை செயல்படாது. உயிலினை உருவாக்கிய நாளன்று உயிரோடிருப்பவர்கட்குத்தான் கொடை கொடுக்க வேண்டுமென்றில்லை. உயிலெழுதப்பட்ட நாளன்று கொடைபெறுநர் பிறக்காமலுமிருக்கலாம். ஆனால் விருப்பாவணமளித்தவர் இறக்கும்போது கொடைபெறுநர் உயிரோடிருக்க வேண்டும்.

கொடைபெறுநருக்கும் அவரது பிரதிநிதிகட்கும் எனக் கொடை கொடுக்கப்பட்டிருந்து கொடைபெறுநர் விருப்பாவண மளித்தவருக்கு முன் இறந்துபோய் அவரது பிரதிநிதிகள் உயிரோடிருந்தாலும் கொடை கழிவுறும். விருப்பாவணமளித்த வரும், கொடைபெறுநரும் ஒரே சமயத்தில் இறந்திருந்து யார் முன் இறந்தார், யார் பின் இறந்தாரென நிரூபிக்கப்படா விட்டால் கொடை கழிவுறும்.

எடுத்துக்காட்டு :

1. விருப்பாவணமளித்த ஒருவர் 'பி' என்பவர் தமக்குத் தரவேண்டிய ரூ. 500-ஐயும் அவருக்கே கொடையாகக் கொடுத்தார். விருப்பாவணமளித்தவருக்கு முன் 'பி' இறந்துவிட்டார். கொடை கழிவுற்றது.

2. 'ஏ' என்பவருக்கும் அவரது பிள்ளைகளுக்குமென ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டது. உயிலினை எழுது முன்போ, விருப்பாவணமளித்தவருக்கு முன்னரோ 'ஏ' இறந்து போனார். 'ஏ'-க்கும் அவரது பிள்ளைகட்கும் கொடுத்த கொடை கழிவுறும்.

3. 'ஏ' என்பவருக்கு ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப் பட்டது. ஒருவேளை விருப்பாவணமளித்தவருக்கு முன் அவர் இறக்க நேரிட்டால் அக் கொடையினை 'பி'-க்குக் கொடுக்கும்படி யாகவும் எழுதப்பட்டிருந்தது. விருப்பாவணமளித்தவருக்கு முன் 'ஏ' இறந்துவிட்டார். 'பி' அக் கொடையினைப் பெறுவார்.

4. 'ஏ'-ன் வாழ்நாளுக்கும் அவருக்குப் பின் 'பி'-க்கு மென்று கொஞ்சம் பணம் கொடையாகக் கொடுக்கப்பட்டது. விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளிலேயே 'ஏ' இறந்து விட்டார். 'பி' விருப்பாவணமளித்தவரை எஞ்சி வாழ்ந்தார். 'பி'-க்குக் கொடுக்கப்பட்ட கொடை செயல்படும்.

5. 'ஏ' என்பவர் 18 வயதையடைந்தவுடன் கொடுக்க வேண்டும். அப்படி 18 வயதையடையுமுன் இறந்துபோனால், 'பி'-க்குக் கொடுக்கவேண்டுமென்று கொஞ்சம் பணம் கொடை யாகக் கொடுக்கப்பட்டது. 'ஏ' என்பவர் 18 வயதையடைந்து, விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளில் இறந்துபோகிறார். ஏ-க்குக் கொடுக்கப்பட்ட கொடை கழிவுற்று 'பி'-க்குக் கொடுக் கப்பட்ட கொடை செயல்படாது.

6. விருப்பாவணமளித்தவரும் கொடைபெறுநரும் கப்பல் விபத்து ஒன்றில் இறந்துவிடுகின்றனர். யார் முதலில்

இறந்தனரென்று காட்ட எவ்விதச் சாட்சியங்களுமில்லை. கொடை கழிவுறும்.

கொடை கழிவுறும் தத்துவம் இரு நிகழ்வினைச் சார்ந்த கொடைகட்கும் பொருந்தும். மேற்கண்ட எடுத்துக்காட்டு 5-னைக் காண்க. குறிப்பிட்ட சம்பவம் நடைபெற்றாலும், நடைபெறாவிட்டாலும் விருப்பாவணமளித்தவருக்கு முன், கொடைபெறுநர் இறந்துவிட்டால் வருநிகழ்வினைச் சார்ந்த கொடையும் கழிவுறும். நிபந்தனைக் கொடைகட்கும் இத் தத்துவம் பொருந்தும்.

விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளில் கொடைபெறுநர் இறந்தார் என்ற ஒரே ஒரு காரணத்தை மட்டுமே கொடை கழிவுற இச் சட்டம் கூறுகின்றது. வேறு காரணமும் உண்டு. குறிப்பிட்ட அறநிலையத்திற்குக் கொடையொன்று கொடுக்கப் பட்டு, விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளில் அவ்வறநிலையம் உருவாக்கப்படாமலிருந்தால் கொடை கழிவுறும். அறநிலையத் திற்குக் கொடையென்பதால், 'சிப்ரே தத்துவம்' (Cypres Doctrine) எனப்படும். இயன்றவரை நிறைவேற்றல் எனும் கொள்கையினைப் பயன்படுத்த முடியாது.

கொடைபெறுநரில்லாதபோது கொடை கழிவுறும். கழி வுறாமலிருக்கக் கொடையினை வேறொருவருக்குக் கொடுக்க வேண்டும். இதனையே மாறுபட்ட எண்ணமென்று விதி கூறுகிறது. கொடைபெறுநர் விருப்பாவணமளித்தவரை எஞ்சி வாழாவிட் டால் கொடையினை வேறொருவருக்குக் கொடுக்கவேண்டும் என்று எழுதி வைப்பதன்மூலம்கொடையினைக் கழிவுறாமல்தடுக் கலாம். மேற்கண்ட எ-டு: 2-ல் கண்ட 'ஏ' என்பவருக்கும் அவரது பிள்ளைகட்கும் என்ற வாசகத்தினைக் கொண்டு, 'ஏ' இல்லா விட்டால் கொடை கழிவுறாமல் அவரது பிள்ளைகட்குச் செல்லும் எனத் துணியவியலாது. ஏனெனில், உயில்வழிக் கொடையினை ஒருவருக்குக் கொடுத்து அவருடன் சிலரை நேரடிக் கொடை பெறுநராக அல்லாமல் குறிப்பிட்டிருந்தால், முன் குறிப்பிடப் பட்ட ஒருவர் மட்டுமே கொடையினைப் பெறுவார் எனப் பிரிவு 97-ல் கண்டோம். எனவே, கொடை கழிவுறாமலிருக்க 'ஏ' அல்லது அவரது பிள்ளைகள் என்ற வாசகமிருக்க வேண்டும். அப்போதுதான் இரண்டாவது கூறப்பட்டவர்கள், பதில் கொடைபெறுநர் எனப் பொருள்கொள்ள இயலும். கொடை கழிவுறுவதைத் தடுக்க விருப்பாவணமளித்தவர் செய்ய வேண்டியது யாதெனில், ஒன்று, கழிவுறுவதைத் தவிர்ப்பதற்குத்

தெளிவான வார்த்தைகளில் தெரிவிக்க வேண்டும். தெரிவித்தல் மட்டும் போதாது; தவிர்த்தலை தெரிவித்தலோடு இரண்டாவதாகத் தம் வாழ்நாளில் கொடைபெறுநர் இறந்துவிட்டால், அக் கொடையினை யார் பெற்றுக்கொள்ள வேண்டுமென்பதனையும் தெளிவாகச் சுட்டிக்காட்ட வேண்டும்.

பின்காணும் சூழ்நிலைகளில் கொடை கழிவுறாது. கழிவுறும் தத்துவத்திற்கு விதிவிலக்குகள்:

1. தெளிவான மாறுபட்ட எண்ணம் உயிலில் தெரிவிக்கப் பட்டிருந்தால் கொடை கழிவுறாது. பிரிவு 96-ல் கூறப்பட்ட ஒருவருக்கல்லது மற்றொருவருக்கான கொடையில், கொடை பெறுநர் விருப்பாவணமளித்தவருக்கு முன் இறந்துபோனால், வேறொருவருக்குக் கொடுக்கப்பட வேண்டுமெனக் கண்டோம். அங்கு மாறுபட்ட எண்ணம் தெரிவிக்கப்பட்டிருப்பதால் கொடை கழிவுறாது.

2. ஒருவருக்கு வாழ்நாள் அனுபவப் பாத்தியமும் அவருக்குப் பின் அச் சொத்தின் எஞ்சுரிமை (remainder) வேறொருவருக்கும் கொடையாகக் கொடுக்கப்பட்டிருந்து, வாழ்நாள் அனுபவப் பாத்தியக்காரர், விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளில் இறந்துபோனால், விருப்பாவணமளித்தவர் இறந்தவுடன் எஞ்சுரிமைக்காரர் கொடையைப் பெற்றுக்கொள்வார் (எடுத்துக்காட்டு 4-ல் காண்க). அதுபோலவே 'ஏ' என்பவருக்கு அவர் 18 வயதையடைந்தவுடன் கொடுக்கவேண்டும். அப்படி 18 வயதையடைந்தவுடன் இறந்துவிட்டால், பி-க்குக் கொடுக்க வேண்டுமென்று ஒரு கொடை கொடுக்கப்பட்டிருப்பதாக வைத்துக்கொள்வோம். இங்கு 'ஏ' 18 வயதை அடைந்தவுடன் கொடையைப் பெற்றுக்கொள்வார். அப்போது 'பி'-க்கு உரிமை கிடைக்காது. 18 வயதையடைந்து விருப்பாவணமளித்தவருக்குப் பின் இறந்துபோனால், 'பி-க்கு உரிமை கிடையாது. 'ஏ' 18 வயதையடையாமல் விருப்பாவணமளித்தவருக்கு முன்னரோ பின்னரோ இறந்துபோனால்தான் 'பி'-க்கு உரிமையுண்டு. கொடை கழிவுறாமல் 'பி'-யைச் சென்றடையும். ஆனால், 'ஏ' 18 வயதையடைந்து விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளிலேயே அதாவது, அவருக்குமுன் இறந்துபோனால், கொடை முற்றிலும் கழிவுறும். கொடை செயல்படுவதே விருப்பாவணமளித்தவர் இறந்த நாளினின்றுதான். அந் நாளில் கொடைபெறுநர் உயிரோடிருக்க வேண்டும். கொடை பெறுநர் 'ஏ' உயிரோடில்லாததால் கொடை கழிவுற்றது. 'பி'-ன் உரிமை யாதெனில், 'ஏ' 18 வயதையடைந்தவுடன்

'பி'-க்குக் கொடையின்மேல் உரிமை கிடையாது. ஆக, கொடை செயல்படாமல் முற்றிலும் கழிவுறும் (எடுத்துக்காட்டு 5-ல் காண்க).

3. இருவருக்குக் கூட்டாக ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டிருந்து, இருவரில் ஒருவர் விருப்பாவணமளித்தவருக்கு முன்னர் இறந்துபோனால், எஞ்சியிருக்கும் மற்றவர் கொடை முழுவதையும் எடுத்துக்கொள்வார் (பிரிவு 106). இதனை எஞ்சுநர் உரிமைத் தத்துவம் (Doctrine of Survivorship) என்பர். எஞ்சுநர் உரிமைத் தத்துவம் கழிவுறுதலைத் தடுக்கும். எஞ்சுநர் உரிமைத் தத்துவம் கூட்டுச் சொத்துகட்கு (Jointtenancy) மட்டுமே பயன்படுவது; பொதுச் சொத்துரிமைகட்குப் பயன்படாது. ஒரு கொடை கூட்டுரிமையாக இருவருக்குக் கொடுப்பதையே பிரிவு 106 கூறுகிறது. 'Commissioner of Income Tax *vs.* Pulin Behary Datt 201'T rep 214 என்ற வழக்கில்' தலைமை நீதிபதி ஹாரில், 'வாரிசுரிமைச் சட்டம் கூட்டுரிமையினை உருவாக்கினாலும் அவ் வுரிமையினை இந்து உயில் உருவாக்க முடியாது. இருவரைச் சேர்த்துக் கொடைபெறுநராகச் சொல்லப்பட்டிருந்து இருவரிலொருவர் விருப்பாவணமளித்தவருக்கு முன் இறந்துபோனால், என்ன செய்யவேண்டுமென்று மட்டுமே விதி 106 கூறுகிறது. கூட்டுச் சொத்துரிமையினை இவ் விதி ஒருகாலும் உருவாக்காது' எனக் கூறியுள்ளார்.

**கூட்டுச் சொத்துரிமையின் முக்கியமான குணலட்சணங்கள்**

(1) உடைமையில் ஒருமைப்பாடு (Unity of Possession)
(2) உரிமையில் ஒருமைப்பாடு (Unity of Interest)
(3) உரிமை மூலத்தில் ஒருமைப்பாடு (Unity of Title)
(4) காலத்தில் ஒருமைப்பாடு (Unity of Time)

உயில்வழிக் கொடையொன்று பலருக்கு ஒரே சமயத்தில் கொடுக்கப்பட்டால், அவர்கள் அச் சொத்தைக் கூட்டுச் சொத்தாக எடுத்துக்கொள்வார்களா, பொதுச் சொத்தாக எடுத்துக்கொள்வார்களா என்ற ஐயமெழும். உயிலில் கண்ட வாசகத்தினைக் கொண்டுதான் இவ்வையத்தினைப் போக்கவியலும்.

## Navroji *vs.* Perozbai 23 Bom. 80

ஒரு பார்சி, தம் மகளான மோட்டிபாயின் இறப்பிற்குப் பிறகு மோட்டிபாயின் இரு மகன்களான நவ்ரோஜியும், நசர்வான்ஜியுமே தமக்குச் சொந்தமான எல்லா சொத்துகட்கும்

உரிமையாளர்கள் என உயில் எழுதி வைத்திருந்தார். நவ்ரோஜியும் நசர்வான்ஜியும் கூட்டுச் சொத்தாக எடுத்துக்கொள்வர் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

கிறித்தவர்கட்கு இச் சட்டம் பொருந்துவதால், அவர்களில் இருவருக்கும் ஒன்றாகக் கொடை கொடுக்கப்பட்டால், கூட்டுச் சொத்தாக எடுத்துக்கொள்வர். இந்துக்களாயின் நிலைமை வேறு. தனி நபரின் உரிமையைக் குறிப்பிடாமல் இந்துக் கூட்டுக் குடும்ப உறுப்பினர்கட்கு ஒரு சொத்துக் கொடுக்கப்பட்டால் கூட்டுச் சொத்தாக அவர்கள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற விருப்பாவணமளித்தவரின் எண்ணத்தினைக் காட்டினாலன்றி அதனைக் கூட்டுச் சொத்தாக எடுத்துக்கொள்ளக் கூடாது.

கொடைபெறுநர் ஒவ்வொருவருக்கும் குறிப்பிட்ட அளவு பங்கினைக் கொடுக்க வேண்டுமென்ற எண்ணத்தை எழுத்தின் மூலமாக விருப்பாவணமளித்தவர் தெரிவித்திருந்தால், விருப்பாவணமளித்தவருக்கு முன், கொடைபெறுநர் இறந்துவிட்டால், அவருடைய பங்குக் கொடைச் சொத்து மட்டும், விருப்பாவண மளித்தவரின் எஞ்சிய சொத்துகளோடு சேர்ந்துவிடும் (பிரிவு 107). இதனைப் பொதுச் சொத்துரிமை (Tenancy in Common) என்பர். இவ்வகையில் கொடைபெறுநரிடையே உடைமை ஒருமைப்பாடு மட்டுமே உண்டு; எஞ்சுநர் உரிமை கிடையாது.

கழிவுற்ற கொடைகள் விருப்பாவணமளித்தவரின் எஞ்சிய சொத்துகளோடு சேர்க்கப்பட்டு, எஞ்சிய கொடைபெறுநரைச் சேரும் எனப் பிரிவு 103-ல் கண்டோம். எஞ்சிய கொடை பெறுநரும் விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளில் இறந்து விட்டால் வீழ்வுற்ற எஞ்சிய கொடையை என்ன செய்வது? அதற்குப் பதில் பிரிவு 108 கூறுகிறது. எஞ்சிய கொடை கழிவுற்றால், அப் பங்கு வகைசெய்யப்படாத சொத்துகளாகக் கருதப்படும். வகை செய்யப்படாத எஞ்சிய சொத்துகளும் கழிவுற்ற எஞ்சிய கொடைகளும் ஒன்றுசேர்ந்து உயில்வழியில் (intestacy) அவரது வாரிசுகளிடையே வாரிசுரிமை நிருணயிக்கப்படும்.

4. மாறுபட்ட எண்ணம் எதுவும் உயிலில் தெரிவிக்கப்படாமல் இருக்கும்போது, ஒரு பிள்ளை அல்லது விருப்பாவண மளித்தவரின் வழித்தோன்றலுக்குக் கொடுக்கப்பட்ட கொடை, விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளில் அவருக்குப்பின் வாழும் தம் வழித்தோன்றலைவிட்டு, அப் பிள்ளை அல்லதுவழித்தோன்றல் இறந்துபோனால், கழிவுறாமல், கொடைபெறுநரின் இறப்பு

விருப்பாவணமளித்தவரின் இறப்பிற்குப்பின் நிகழ்ந்ததாகக் கொண்டு செயல்படும் (பிரிவு 109). இவ் விதியின்படி, கொடை கழிவுறாமலிருக்க மூன்று நிபந்தனைகள் நிறைவேற்றப்பட வேண்டும்.

(1) ஒரு பிள்ளைக்கோ விருப்பாவணமளித்தவரின் வேறு வழித்தோன்றல்களுக்கோ கொடை கொடுக்கப்பட வேண்டும்.

(2) விருப்பாவணமளித்தவரை எஞ்சி வாழும் தம்முடைய வழித்தோன்றலைவிட்டு அப் பிள்ளை அல்லது அவ் வழித் தோன்றல் விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளிலேயே இறந்து விட வேண்டும். கொடையைப் பெறத் தகுதியுடையவர் யாரென் பதைத் தெரிந்துகொள்வது, அப் பிள்ளை இறக்கும் நாளிலேயே; விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளிலன்று.

(3) மாறுபட்ட எண்ணங்கள் ஏதும் உயிலில் தெரிவிக்கப் பட்டிருக்கக் கூடாது.

## Jity Lal *vs*. Binda Bibi 16 Cal. 549

'ஏ' என்பவர் தம் உயில் மூலமாகத் தம் மகனின் மகளான 'ஜே' என்பவருக்கு ரூ. 5,000/-யைக் கொடையாகக் கொடுத்தார். 'பி' என்ற பிள்ளையைவிட்டு 'ஜே' 1879-ல் இறந்துவிட்டார். விருப்பாவணமளித்தவர் 1881-ல் இறந்துவிட்டார். கொடை யினைப் பெறும்பொருட்டு 'பி' வழக்குத் தொடர்ந்தார். விதி 109-ன்படி விருப்பாவணமளித்தவர் இறக்கும்போது 'ஜே' என்பவர் சட்டப்படி வாழ்ந்திருந்தார் எனக் கொள்ளவேண்டும். ஏனெனில், அவரது வழித்தோன்றல் விருப்பாவணமளித்தவரை எஞ்சி வாழ்ந்தார். ஆதலால், அக் கொடையினைப் பெற 'பி'-க்குத் தகுதியுண்டு எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

## In Re Hensler 19 CD 612 followed in Re Basiole (1953) I All E. R. 301

ஒரு தந்தை தம் மகனுக்குத் தம்முடைய வீட்டை உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். தம்முடைய சொத்துகளைத் தம் தந்தைக்கு உயில்வழிக் கொடையாகக் கொடுக்கும் உயிலினையும் தம் பிள்ளையையும் விட்டுத் தந்தையின் வாழ்நாளிலேயே அம் மகன் இறந்துவிட்டார். ஆங்கில உயில் சட்டம் விதி 33-ன்படி (இந்தியச் சட்டம் விதி 109) தந்தையின் உயில்மூலமாக வீட்டின் உரிமை மகனுக்கு முழுவதுமாகச் சேர்ந்துவிட்டது. சட்டப்படி மகன் தந்தைக்குப் பிறகு எஞ்சியிருந்தாரெனக் கொள்வதால், மகன் எழுதிய உயிலை அமல்படுத்தவியலாது. மகன் உயில் இல்வழியில் இறந்ததாகக் கொள்ளவேண்டும்.

5. வேறொருவருக்காகக் கொடையொன்றினை ஒருவரது பொறுப்பில் வைத்தால், பொறுப்பிலிருப்பவர் விருப்பாவண மளித்தவருக்கு முன் இறந்துபோனால் கொடை கழிவுறாது (விதி 110).

6. ஒரு வகுப்பினருக்குக் கொடுக்கப்பட்ட கொடை கழிவுறாது (விதி 111).

7. அறச்செயல்களுக்கெனப் பொதுவான நோக்கோடு கொடுக்கப்பட்ட அறக்கொடைகள் அறநோக்குத் தவறுவதால் கழிவுறாமல் இயன்றவரை முயல்வோம் என்னும் 'சிப்ரே' கொள்கையினைக்கொண்டு செயல்படுத்தப்படும்.

# 13. விழலாகும் உயில் வழிக் கொடைகள்

## (Void Bequests)

முறைப்படி உருவாக்கப்பட்ட உயில்வழிக் கொடைகள் சில காரணங்களால் விழலாகிவிடும்:

1. விருப்பாவணமளித்தவரின் கையொப்பத்திற்குச் சான்றளிக்கும் சாட்சிக்குக் கொடுக்கப்பட்ட உயில்வழிக் கொடை விழலாகும். உயிலுக்கு யார் வேண்டுமானாலும் சான்றொப்பமிடலாம். ஆனால், அவர் அவ் வுயில்வழிக் கொடைபெறுநராகவோ, பயனடைபவராகவோ இருக்கவியலாது. உயிலுக்குச் சான்றொப்பமிடுபவரின் மனைவிக்கோ, கணவனுக்கோ அல்லது அவர்கள் இருவர் வழியாக உரிமைபெறும் எவருக்கும் கொடுக்கப்பட்ட கொடை விழலாகும் (பிரிவு 67).

2. விருப்பாவணமளித்தவரின் தெளிவான எண்ணத்தைத் தெரிவிக்காத எந்தக் கொடையும் விழலாகும் (பிரிவு 89).

3. விருப்பாவணமளித்தவர் இறந்த நாளில் உயிரோடில்லாத ஒருவருக்குக் கொடுத்த கொடை விழலாகும் (பிரிவு 112).

எடுத்துக்காட்டு :

(1) 'ஏ' என்பவர் 'பி'-ன் மூத்த மகனுக்கு ரூ. 1000/-ஐ உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். 'ஏ' இறக்கும்போது 'பி'-க்கு மகன்களே கிடையாது. உயில்வழிக் கொடை விழலாகும்.

(2) 'ஏ' என்பவர் ரூ. 1,000/-ஐ 'பி'-க்கு வாழ்நாள் அனுபவத்திற்கும் 'பி' இறந்தவுடன் சி-ன் மூத்த மகனுக்குக் கொடுக்க வேண்டுமென்றும் உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். ஏ' இறக்கும்போது 'சி'-க்கு மகன்களே கிடையாது. பின்னர் 'பி'-ன் வாழ்நாளில் 'சி'-க்கு 'டி' என்னும் மகன் பிறந்தான்.

'பி' இறக்கு முன்னரே 'டி' இறந்துவிட்டான். 'டி'-ன் பிரதிநிதி கட்கு இக் கொடை செல்லும்.

(3) 'ஏ' என்பவர் தம்முடைய நஞ்சை நிலங்களை 'பி'-க்கு வாழ்நாள் அனுபவப் பாத்தியமாகவும் 'பி' இறந்தவுடன் 'சி'-ன் மூத்த மகனுக்குக் கொடுத்துவிட வேண்டுமென்றும் உயில்வழிக் கொடையாக எழுதிவைத்தார். 'பி' இறக்கும் நாள்வரை 'சி'-க்கு மகன்களே கிடையாது. 'சி'-ன் மூத்த மகனுக்கு என்று கொடுக்கப்பட்ட கொடை விழலாகும்.

(4) 'ஏ' என்பவர் ரூ. 1,000/-ஐ 'பி' இறந்தவுடன் 'சி'-ன் மூத்த மகனுக்குக் கொடுக்கும்படி உயில்வழிக் கொடை எழுதி வைத்தார். 'ஏ' இறக்கும்போது 'சி'-க்கு மகன் கிடையாது. ஆனால், பின்னர் 'பி'-ன் வாழ்நாளில் 'சி'-க்கு ஒரு மகன் பிறந்து' 'பி' இறக்கும்வரையில் உயிருடன் இருந்தான்; 'சி'-ன் மகன் ரூ. 1000/-ஐக் கொடையாகப் பெறுவான்.

மேற்கண்ட உதாரணங்களினின்று பிரிவு 112-க்கு விதிவிலக்கு உண்டென்று புலனாகின்றது. பிரிவு 112-ல் காணும் விதிவிலக்கு விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளுக்குப்பின் பிறக்கவிருக்கும் ஒருவருக்குக் கொடை கொடுத்தலைப்பற்றிக் கூறுகிறது. விருப்பாவணமளித்தவர் தம் வாழ்நாளுக்குப்பின் பிறக்கவிருக்கும் ஒருவருக்கு உயில்வழிக் கொடை கொடுக்க விரும்பினால், தம் வாழ்நாளில் உயிரோடிருக்கும், பிறக்கவிருக்கும் அக் கொடை பெறுநரின் உறவினரொருவரைக் குறிப்பிட்டுத் தம் வாழ் நாளிலோ, குறிப்பிட்ட அவ் வுறவினரின் வாழ்நாளிலோ அக் கொடைபெறுநர் பிறக்கும்வரை காலந்தாழ்த்திக் கொடையின் உடைமை கொடுக்கப்படும். அக் கொடைபெறுநர் இறந்து விட்டால் அவரது பிரதிநிதிக்குக் கொடுக்கப்படும்.

இவ் விதிவிலக்கின்படி பிறக்கவிருக்கும் ஒருவருக்குக் கொடை கொடுத்தலை இருவிதங்களில் காலந்தாழ்த்திக் கொடுக்கலாம். மேற்கூறிய எடுத்துக்காட்டு 2, 3, 4-ல் கண்டதுபோல் கொடைபெறுநருக்குக் கொடுக்குமுன், ஒருவருக்கு வாழ்நாள் அனுபவப் பாத்தியம் கொடுப்பதன் மூலம் விருப்பாவண மளித்தவர் இறந்து, வாழ்நாள் அனுபவப் பாத்தியக்காரர் இறக்கும்நாள்வரை கொடை செயல்படுவதைக் காலந்தாழ்த்த லாம். இரண்டாவதாக, எடுத்துக்காட்டு 5-ல் கண்டதுபோல் வேறு விதத்திலும் காலந்தாழ்த்தலாம். பிறக்கவிருக்கும் ஒருவர் உயில்வழிக் கொடையினைப் பெற்றுக்கொள்ள வேண்டுமானால், கொடை செயல்படும் நாளில் அவர் உயிரோடிருக்கவேண்டும்.

வாழ்நாள் அனுபவ பாத்தியக்காரரின் உரிமை முடிவடையுமுன், கொடைபெறுநர் பிறந்துவிட்டாலே போதும்; உயிரோடிருக்க வேண்டுமென்றில்லை. இறந்துபோனால், அவரது பிரதிநிதிகள் பெற்றுக்கொள்வார்கள்.

ஓர் இந்து தாம் இறக்கும்போது உயிரோடில்லாத நபருக்கு உயில்வழிக் கொடையினைக் கொடுக்கவியலாது. ஓர் இந்துவின் உயிலுக்குப் பிரிவு 112-ல் கண்ட விதிவிலக்கினை இந்தச் சட்டத்தின் அடிப்படை விதிகட்குட்பட்டுத்தான் பயன்படுத்த வேண்டும். இந்து உயில் சட்டம் 21 (1870) உருவாக்குமுன் விருப்பாவணமளித்தவர் இறக்கும்போது, பிறவாதிருக்கும் ஒருவருக்கு உயில்வழியாகக் கொடுக்கப்பட்ட கொடை செல்லாது என்ற கொள்கை நிலவிவந்தது. 1872-ல் பிரிவி கவுன்சில் தாவுர் வழக்கில் அளித்த தீர்ப்பும் இக் கொள்கையினை உறுதிசெய்தது. பின்னர் உருவாக்கப்பட்ட சட்டங்கள் மேற்கண்ட கொள்கையினை முற்றிலுமாக மாற்றிவிட்டன. இந்திய வாரிசுரிமைச் சட்டம் பிரிவுகள் 113, 114, 115, 116 அதற்கிணையான சொத்து மாற்றுச் சட்டம் பிரிவுகள் 13, 14, 15, 16 சில வரையறைக்குட்பட்டு, பிறக்கவிருக்கும் நபருக்குக் கொடுக்கப்பட்ட கொடையினைச் செல்லுபடியாக்கிவிட்டன. 1914-ல் உருவாக்கப்பட்ட விசேடச் சட்டம் பிரிவு 112-ஐ இந்துக்களுக்கும் பயன்படுத்தும்படி செய்தது.

4. விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளில் உயிரோடில்லாத ஒருவருக்கு, வாழ்நாள் அனுபவ பாத்தியக்காரரின் மூலமாகக் கொடுக்கப்பட்ட கொடை, விருப்பாவணமளித்தவரின் உரிமைகள் அனைத்தையும் கொண்டிராவிட்டால், அக் கொடை செல்லாது. சுருங்கக்கூறின் பிறக்கவிருக்கும் ஒருவருக்குக் கொடுக்கப்பட்ட வாழ்நாள் அனுபவ பாத்தியம் செல்லாது (பிரிவு 113).

**எடுத்துக்காட்டு :**

(1) ஒரு சொத்து 'ஏ' என்பவருக்கும் அவருக்குப் பின் அவரது மூத்த மகனுக்கும் வாழ்நாள் அனுபவ பாத்தியமாகவும், மகனும் இறந்தபின் மகனின் மகனுக்குக் கொடுக்க வேண்டுமென்றும் உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டது. விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்று 'ஏ'-க்கு மகன் கிடையாது. ஈண்டு 'ஏ'-யின் மூத்த மகனுக்குக் கொடுக்கப்பட்ட கொடை விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்று உயிரோடில்லாதவருக்குக் கொடுக்கப்பட்ட கொடையாகும். அது விருப்பாவணமளித்தவரின் உரிமைகளனைத்தையும் கொண்ட கொடையன்று.

(2) 'ஏ'-யின் வாழ்நாளுக்கும் அவருக்குப்பின் அவரது மகன்களுக்குமென ஒரு தொகை உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டது. 'ஏ' விருப்பாவணமளித்தவரை எஞ்சி வாழ்ந்தார். 'ஏ'-யின் மகன்களில் சிலர் விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்று பிறவாமலிருந்தனர். கொடைச் சொத்துகளின் மேல் விருப்பாவணமளித்தவருக்கு இருந்த உரிமைகள் அனைத்தும் 'ஏ'-யின் மகன்களுக்குக் கொடையாகக் கொடுக்கப்பட்டது. 'ஏ'-யின் மகன்களுக்குக் கொடுக்கப்பட்ட கொடை செல்லும்.

(3) ஒரு தொகையினை 'ஏ'-யின் வாழ்நாளுக்கும் அவருக்குப் பின் அவரது மகள்களுக்கும், அம் மகள்களில் எவரேனும் 18 வயதுக்குள் திருமணம் செய்துகொண்டால் அவருடைய பங்கினை அவருடைய வாழ்நாள் அனுபவ பாத்தியமாகவும் கொடுத்து, அவருக்குப்பின், அப் பங்கு அவளது பிள்ளைகளுக்குப் பிரித்துக் கொடுக்கப்பட வேண்டுமென்ற குறிப்புடன், உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டது. விருப்பாவணமளித்தவர் இறந்தபோது 'ஏ'-க்கு மகள்கள் கிடையாது. அதற்குப் பிறகு பிறந்த மகள்கள் அவரை எஞ்சி (Survived) வாழ்ந்தனர். பதினெட்டு வயதுக்குள் திருமணம் செய்துகொள்ளும் ஒவ்வொரு மகளின் பங்கைப் பிரித்துக்கொடுக்கவேண்டுமென்ற குறிப்பு, சாதாரண நிலையில் கொடையினைப் பூரணமாகப் பெற்றுக் கொள்ளும் உரிமையினை மாற்றி வாழ்நாள் அனுபவ பாத்தியமாக ஆக்கிவிடுகிறது. அதாவது, விருப்பாவணமளித்தவர் இறந்தபோது உயிரோடில்லாத ஒருவருக்குக் கொடைச் சொத்தின்மேல் விருப்பாவணமளித்தவருக்கிருந்த எல்லா உரிமைகளையும் கொடுக்காமல் சற்றுக் குறைத்துக் கொடுக்கிறது. ஆதலால், கொடையினைப் பிரித்துக் கொடுக்கும் படியாகக் கொடுக்கப்பட்ட குறிப்புச் செல்லாது.

(4) 'ஏ' என்பவர் ஒரு தொகையினை 'பி'-யின் வாழ்நாளுக்கும் 'பி'-க்குப்பின், 'பி'-யின் ஒவ்வொரு மகளுக்கும் வாழ்நாள் அனுபவ பாத்தியமாகக் கொடுத்து, அவர்களுக்குப்பின் ஒவ்வொரு மகளது பங்கினையும் அவளது மக்கட்குப் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்ற குறிப்புடன் உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். விருப்பாவணமளித்தவர் இறந்தபோது 'பி'-க்கு மகளே கிடையாது. இவ் வுயிலில் கண்ட குறிப்பு 'பி'-யின் மகள்களுக்குக் கொடுக்கப்பட்ட உரிமை, பிறக்கவிருக்கும் ஒருவருக்கு வாழ்நாள் அனுபவ பாத்தியம் கொடுத்தலுக்கு ஈடானதாகும். அதாவது, விருப்பாவணமளித்தவர் இறந்த நாளில் உயிரோடில்லாத ஒருவருக்கு, கொடைச்

சொத்தின்மேல் விருப்பாவணமளித்தவருக்கிருந்த எல்லா உரிமைகளையும் கொடுக்காமல் சற்றுக் குறைத்துக் கொடுக்கின்றது. 'பி'-யின் மகள்களுக்குப் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்ற குறிப்புச் செல்லாது.

இவ் விதியில் கண்ட கருத்தாவது : விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளில், பிறக்கவிருக்கும் ஒருவருக்கு ஒரு முந்திய உயில் வழிக் கொடைக்கு உட்பட்டு, கொடைச் சொத்துகளின்மேல் விருப்பாவணமளித்தவருக்கிருந்த எல்லா உரிமைகளும் சேர்த்துக் கொடுக்கப்பட்ட கொடை செல்லுபடியாகும். இவ் விதியைப் பிரிவு 112உடன் சேர்த்துப் பொருள் காணவேண்டும். விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளில் பிறக்கவிருக்கும் ஒருவருக்குக் கொடுக்கப்பட்ட கொடை செல்லாது எனப் பிரிவு 112 கூறுகிறது. அந்நாளில் பிறக்கவிருக்கும் ஒருவருக்குக் கொடை கொடுக்கப் படப் பிரிவு 113 வழிவகுக்கின்றது. பிறக்கவிருக்கும் ஒருவருக்குக் கொடுக்கப்பட்டகொடை செயல்படுவதை அதற்கு இடைப்பட்ட வாழ்நாள் பாத்தியம் காலந்தாழ்த்துகிறது. இந் நிலையில் பிரிவு 113 செயல்படுகிறது. அக் கொடை செல்லுபடியாக விருப்பாவணமளித்தவருக்குக் கொடைச் சொத்துகளின் மேலிருந்த எல்லா உரிமைகளையும் கொடுக்கவேண்டும். இதுபோன்ற விதியினைச் சொத்துமாற்றுச் சட்டம் விதி 13-ல் காணலாம்.

பிறக்கவிருக்கும் ஒருவருக்குக் கொடுக்கப்படும் உயில்வழிக் கொடையின் உரிமையின் அளவினை இவ் விதி காட்டுகிறது. பிறக்கவிருக்கும் ஒருவருக்கு வாழ்நாள் பாத்திய அல்லது பூரண உரிமையின்றிக் கட்டுப்படுத்தப்பட்ட உரிமையுடைய சொத்துகளைக் கொடையாகக் கொடுக்க முடியாது. அப்படிக் கொடுத்தால் அது செல்லாது. பூரண உரிமையையும் கொடுத்தால்தான் கொடை செல்லுபடியாகும்.

இவ் விதியை அடிப்படையாகக் கொண்டு சில முக்கிய வழக்குகளில் தீர்ப்பளிக்கப்பட்டது.

## 24 Bom. L. R. 1099. Putlibai *vs.* Sorabaji

விருப்பாவணமளித்த ஒருவர், தம் மகள்களுக்கு வாழ்நாள் அனுபவ பாத்தியமும், அவர்களின் பதிலாள் நியமன அதிகாரத்திற்கு உட்பட்டு, அவர்கட்குபின் விருப்பாவணமளித்தவர் இறந்த நாளில் பிறக்கவிருக்கும் அவர்களது பிள்ளைக்கும் அவர்களில் எவரேனும் பார்சி மதத்தைவிட்டு வேறு மதத்தைத் தழுவினாலும் அல்லது பார்சியரல்லாத ஒருவரைத் திருமணம் செய்து

கொண்டாலும், அவரது பங்கு பறிமுதல் செய்யப்படும் என்ற நிபந்தனையுடன் கொடையாகக் கொடுக்கப்பட்டது. பறிமுதல் செய்யப்படும் என்ற நிபந்தனை விருப்பாவணமளித்தவரின் பூரண உரிமைகளையும் கொடை பெறுநருக்குக் கொடுக்காததால் இக் கொடை செல்லாது எனப் பிரிவி கவுன்சில் தீர்ப்பளித்தது.

இதனை அடிப்படையாகக் கொண்டு தீர்ப்பளிக்கப்பட்ட மற்றொரு வழக்கு.

## Sopher *vs*. Administrator - General of Bengal 1944 P. C. 67

விருப்பாவணமளித்த ஒருவர் தம்முடைய சொத்துகளைத் தம் மனைவிக்கு வாழ்நாள் அனுபவ பாத்தியமாகவும், அவருக்குப் பின், அச் சொத்தினை தாம் இறக்கும் நாளில், வழித்தோன்றல் களை விட்டு இறந்துபோன மகன்களையும் சேர்த்து உயிரோ டிருக்கும் மகன்களிடையே எத்தனை மகன்களோ, அத்தனை பங் குகளாகப் போட்டு அதனின்றுவரும் வருமானத்தை மகன்களின் வாழ்நாளுக்கெனக் கொடுத்து, அதன்பின் அவர்களது பிள்ளை களான தம் பேரப்பிள்ளைகள் 18 வயதினையடைந்தவுடன், அப் பேரப்பிள்ளைகள் தங்களது தகப்பனையோ, விருப்பாவண மளித்தவரின் மனைவியையோ எஞ்சி வாழவேண்டுமென்ற நிபந் தனைக்குட்பட்டுப் பூரணமாகக் கொடுக்கப்பட வேண்டுமென்ற குறிப்புடன் கொடையாகக் கொடுத்தார். பேரப் பிள்ளைகட்குக் கொடுக்கப்பட்ட கொடை, அவர்கள் தங்கள் தகப்பனையோ விருப்பாவணமளித்தவரின் விதவையையோ எஞ்சி வாழவில்லை (Non-Survivorship) என்கிற வருநிகழ்வு சார்ந்த நிகழ்ச்சியினால் முறியடிக்கப்படக்கூடிய சாத்தியக்கூறுக்குட்பட்டிருப்பதால், அக் கொடையினை அவர்கள் விருப்பாவணமளித்தவர் பெற்றிருந் ததுபோல் தடைகளற்ற நிலையிலும், பூரண உரிமையையும் பெற்றுக்கொண்டார்கள் எனக் கருதவியலாது. ஆதலால், மேற் கண்ட சூழ்நிலையில் பிரிவு 113-ன்படி கொடை செல்லாது எனப் பிரிவி கவுன்சில் தீர்ப்பளித்தது.

" இந்துச் சட்டம் பிரிவு 113 இந்துக்களுக்கும் செல்லு படியாகும். இந்துச் சட்டத்தின்படி ஒரு சொத்தின் முழு உரிமைகளையோ, வரையறுக்கப்பட்ட உரிமைகளையோ பிறக்க விருக்கும் ஒருவருக்குக் கொடையாகக் கொடுத்தால் அது முற்றிலும் செல்லாது. உயில்வழியாகப் பயனடையுந் தகுதி யுடையவர், அவ் வுயிலினை உருவாக்கியவர் இருக்கும் நாளில்,

உண்மையாகவோ சட்டப் பூர்வமாகவோ உயிரோடிருக்க வேண்டும்.

இவ் விதியினைப் பின்வரும் சட்டங்கள் மாற்றியமைத்திருக்கின்றன.

(1) இந்து வாரிசுரிமை மற்றும் உயில்வழிக் கொடை சென்னை சட்டம் எண் 1-1914ஆம் ஆண்டு.

(2) இந்து சொத்து வகுத்தமைத்தல் சட்டம் 15-1916ஆம் ஆண்டு.

(3) இந்து வாரிசுரிமை மற்றும் உயில்வழிக் கொடைச் சட்டம் (சென்னை நகரம்) 8-1921ஆம் ஆண்டு.

இச் சட்டங்களின் விளைவுகள் யாதெனில் பிறக்கவிருக்கும் ஒருவருக்குப் பின்வரும் நிபந்தனைகட்குட்பட்டுக் கொடையினைக் கொடுக்கலாம் என்பதே.

(1) கொடைச் சொத்துகளின்மேல் விருப்பாவணமளித்தவருக்கிருந்த பூரண உரிமைகளனைத்தையும் கொடையாகக் கொடுக்கவேண்டும். அவ் வுரிமைகளை வரையறுத்துக் கொடுக்கவியலாது.

(2) அவ் வுரிமைகள் கொடை பெறுநரைச் சேர்ந்தடைதல், 'உயிருடனிருப்பவரின் வாழ்நாளுடன் 18 ஆண்டுகள், அதன் பின்னரும் காலந்தாழ்த்தக் கூடாது'. இதுவே பிரிவு 114-ல் வரையிலா நிலைக்கு எதிர்விதி எனக் கூறப்படும்.

5. வரையிலா நிலைக்கு எதிரான விதியின் காலவரம்பைக் கடந்த உயில்வழிக் கொடை செல்லாது.

விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளில் உயிருடனிருக்கும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட நபர்களின் வாழ்நாள், மற்றும் அவர்களது வாழ்நாள் முடிவுறுமுன் பிறந்து வாழ்பவர், முழு வயதினையடைந்தவுடன் கொடை அவரைச் சேரும் என்று குறிக்கப்பட்டவர் உரிமை வயதையடையும் காலவரம்பிற்குப் பிறகு கொடையின் சேர்ந்தடையுரிமை காலந்தாழ்த்தப்பட்டால் அக் கொடை செல்லாது (பிரிவு 114).

ஒருவரிடமிருந்து பெயர்ந்து மற்றொருவரையடையும் தன்மையையுடையது சொத்து. சொத்தின்மேல் அதனையுடையவருக்குள்ள உரிமையினை அவர் எவ்விதத்திலும் உரிமை மாற்றம்

செய்யலாம். அவ்வாறு உரிமைகள் மாறாமலும் அழியாமலும் இருக்கச் செய்வதே வரையிலா நிலை எனப்படும். வேறுவிதமாகக் கூறினால், சொத்தின் உரிமைகள் நெடுங்காலத்திற்குப் பின்னும் சேர்ந்தடையாமலிருத்தலைக் குறிக்கும்.

பிரிவு 114 வரையிலா நிலைக்கு எதிர் விதியைக் கூறுகின்றது. உரிமைகள் சேர்ந்தடைதலைக் காலவரையறையின்றிக் காலந் தாழ்த்துதலை வரையறுத்து, எவ்வளவு காலம் காலந்தாழ்த்தலாம் எனக் கூறுவதே வரையிலா நிலைக்கு எதிர் விதி. சொத்துக்குரியவர் அதன் உரிமை மாற்றங்களைக் கட்டுப்படுத்தவோ, சொத்தின் வருவாயை அப்படியே சேர்த்துவைக்கவோ உரிமையுள்ளவர். அப்படிச் செய்வதனால், நாட்டின் பொருளாதார வளர்ச்சி குன்றும். அதனால்தான் பொருளாதாரம் என்னும் வாய்க்காலில் எவ்விதத் தங்குதடையுமின்றிச் சொத்துகள் செல்ல அனுமதிக்க வேண்டுமென்று கூறப்படுகிறது. எனவே, வரையிலா நிலைக்கு எதிர் விதி, சேர்ந்தடையுரிமையினைத் தொலைவான காலம்வரை காலந்தாழ்த்துதலையும், உரிமையினை மாற்றவியலாமல் செய்தலையும், வருவாயினை சேர்த்து வைத்தலையும் கட்டுப்படுத்துகிறது.

ஆங்கிலச் சட்டத்தில் கொடைச் சொத்துகள் கொடைபெறுநரைச் சேர்ந்தடையும் காலம், விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளில் உயிருடன் வாழ்பவரின் வாழ்நாள்வரையில் காலந் தாழ்த்தி அனுமதிக்கப்பட்டது. பின்னர், அவர்களுக்குப் பிறகு சில காலத்திற்குள் சேர்ந்தடைய வேண்டுமென்று அனுமதிக்கப் பட்டது. இறுதியாக உயிருடனிருப்பவர்களின் வாழ்நாளுடன் சிலகாலம் என்பது 21 ஆண்டுகள் என்று உறுதியாகத் தீர்மானிக்கப்பட்டது. ஆங்கிலச் சட்டப்படி தற்போது ஒரு சொத்து கொடைபெறுநரைச் சேர்ந்தடைதலையோ, அதன் வருவாயைச் சேர்த்துவைத்தலையோ, விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளில் உயிருடனிருப்பவர்களின் வாழ்நாள், அதன்பிறகு 21 ஆண்டு வரையில்தான் காலந் தாழ்த்தலாம். அதற்குப் பிறகும் சென்றால், சட்டப்படி அது செல்லாது.

இந்தியச் சட்டத்தில் உரிமை வயதையடைதல் 18 வயதென 1875ஆம் ஆண்டு இந்திய உரிமை வயது சட்டம் கூறுகிறது. ஆதலால், இந்தியாவில் கொடைச் சொத்துகள், கொடைபெறுநரைச் சேர்ந்தடைதல் விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளில் வாழ்பவர்களின் வாழ்நாளோடு 18 ஆண்டுகள் வரைதான் காலந் தாழ்த்தலாம்.

வரையிலா நிலைக்கு எதிர் விதியினைச் சொத்து மாற்றுச் சட்டம் விதி 14-லும் காணலாம். இவ் விதி அச் சட்டத்தில் மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

## Soundarajan *vs.* Natarajan (44 Mad. 446 in appeal 48 Mad. 906 P.C.)

விருப்பாவணமளித்தவர் தம் சொத்துகளைத் தமது மகன்களின் வாழ்நாள்களுக்கும் பின்னர் எஞ்சுரிமை அவர்களது பிள்ளைகட்கு 21 வயதில் கொடுக்கவேண்டுமென உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். பிரிவுகள் 114, 115-ன்படி பிள்ளைகட்குக் கொடுக்கப்பட்ட உயில்வழிக் கொடை செல்லாதெனப் பிரிவி கவுன்சில் தீர்ப்பளித்தது. இறுதியாகப் பயனடைபவரின் உரிமை வயதிற்குப் பிறகு கொடைச் சொத்துகள் கொடை பெறுநரைச் சேர்ந்தடைய முடியாது. உரிமை வயது இந்தியாவில் 18 ஆகும் என்னும் 1875ஆம் ஆண்டு இந்திய உரிமை வயது சட்டப்படி ஒருவருக்கு நீதிமன்றமே காப்பாளரை நியமித்தால் அவர் 21 ஆவது வயதில்தான் உரிமை வயதையடைகிறார். ஆதலால், இக் கொடை செல்லும் என வாதிடப்பட்டது. வரையிலா நிலையின் காலவரையினைக் கணிப்பது, விருப்பாவணமளித்தவர் இறந்த நாளிலிருந்துதான். அந்நாளில் காப்பாளர் நியமிக்கப் பட்டாரென் உறுதியாகக் கூறமுடியாது. எனவே, இவ் வாதம் ஏற்கப்படவில்லை. கொடை செல்லாது எனத் தீர்ப்பளிக்கப் பட்டது.

உதாரணமாக :

(1) 'ஏ' என்பவரின் வாழ்நாளுக்கும் அவருக்குப்பின் பி-யின் வாழ்நாளுக்கும், அவருக்குப்பின் பி-யின் மகன்களி ளொருவர் 25 வயதையடைந்தவுடன் பி-யின் மகன்களுக்குமென ஒரு தொகை, உயில்வழிக் கொடையாக அளிக்கப்பட்டது. விருப்பாவணமளித்தவரை ஏ-யும் பி-யும் எஞ்சி வாழ்ந்தனர். 25 வயதையடையும் பி-யின் மகன் விருப்பாவணமளித்தவர் இறந்த பிறகு பிறக்கலாம்; அவர் 'ஏ', 'பி' இருவரில் இறுதியாக இறந்தவரிலிருந்து 18 ஆண்டுகட்குள் பி-யின் மகன் 25 வயதை யடையமுடியாது. எனவே, கொடைத்தொகை, கொடை பெறுநரைச் சேர்ந்தடையும் காலம் 'ஏ', 'பி'-யின் வாழ்நாள் மற்றும் 'பி'-யின் மகனின் உரிமையடையும் வயதையும் கடந்து செல்வதால் 'பி'-க்குப் பிறகு கொடுக்கப்பட்ட கொடை செல்லாது.

(2) 'ஏ' என்பவரின் வாழ்நாளுக்கும், அவருக்குப்பின் பி-யின் வாழ்நாளுக்கும், அவருக்குப்பின் அவரது மகன்களுக்கு அவர்களில் எவரொருவர் முதலில் 25 வயதையடைகிறாரோ அவருக்குக் கொடுக்கப்படவேண்டுமென ஒரு தொகை உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டது. விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளிலேயே சில மகன்களைவிட்டு 'பி' இறந்துவிட்டார். ஈண்டு 'பி'-யின் மகன்கள் விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளில் வாழ்பவர்களே, அவர்கள் 25 வயதையடைதல் என்பது அவர்களது வாழ்நாளிலேயே நடைபெறக்கூடியது. எனவே இக் கொடை செல்லும்.

6. முந்திய உயில்வழிக் கொடை செல்லாமல், செயலிழந்தால், செயல்படும்படியாகக் கொடுக்கப்பட்ட பிந்திய உயில்வழிக் கொடையும் செல்லாது (பிரிவு 116).

இதுபோன்ற விதியைச் சொத்து மாற்றுச் சட்டம் பிரிவு 16-ல் காணலாம். பிரிவு 113, 114-ல் கூறப்பட்டதுபோல் ஒருவரின் வாழ்நாளுக்கென்று ஒரு கொடையினைக் கொடுத்து அவருக்குப்பின் அக் கொடையின் சேர்ந்தடையுரிமை, வேறொருவருக்குக் கொடையாகக் கொடுக்கப்பட்டிருந்தது. முன்கூறிய வாழ்நாள் கொடை செல்லாதொழியும்போது பின் குறிப்பிட்ட கொடையும் செல்லாது போகும். பிரிவு 116 செயல்படத் தேவையானவை :

(1) முன் குறிப்பிட்ட கொடை முழுவதும் செல்லாது போகவேண்டும்.

(2) பின் குறிப்பிட்ட கொடையும் அதே உயிலில் கூறப்பட்டிருத்தல் வேண்டும்.

(3) முன் குறிப்பிட்ட கொடை செல்லாது போகும்போது பின் குறிப்பிட்ட கொடை செயல்பட வேண்டுமென்று எண்ணம் தெரிவிக்கப்பட்டிருக்க வேண்டும்.

உதாரணமாக :

ஒரு தொகை 'ஏ'-யின் வாழ்நாளுக்கும், அவருக்குப்பின் 25 வயதை முதலில் அடையும் அவரது மகனின் வாழ்நாளுக்கும், அவனுக்குப்பின் 'பி'-க்கும் கொடுக்கவேண்டுமென்று உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டது. 'ஏ'-யும் 'பி'-யும் விருப்பாவணமளித்தவரை எஞ்சி வாழ்ந்தனர். 'பி'-க்குக் கொடுக்கப்பட்ட கொடை செயல்படுவது, 'ஏ'-யின் மகன்களில் முதலில் 25 வயதையடைபவருக்குக் கொடுக்கப்பட்ட கொடைக்குப் பின்னர் தான். 'ஏ'-யின் மகனுக்குக் கொடுக்கப்பட்ட கொடை பிரிவு

கொடையும் செல்லாது. எனவே, 'பி'-க்குக் கொடுக்கப்பட்ட 114-ன்படி செல்லாது.

முன்னளிக்கப்பட்ட கொடை செல்லாதுபோகும்போது அதனைத் தொடர்ந்து பின்னளிக்கப்பட்ட கொடையும் செல்லாதுபோகும்.

7. நெருங்கிய உறவினர்களையுடைய ஒருவர், இவர் இறந்த நாளுக்கு முன் பன்னிரண்டு மாதங்களுக்கும் (Within 12 months before his death) உயில்வழியாகச் சமய அல்லது அறப் பயன்களுக்கென உயில்வழிக் கொடையினைக் கொடுத்திருந்தால் அக் கொடை செல்லாதுபோகும்.

இக் கருத்தினை அடிப்படையாகக் கொண்டது பிரிவு 118. அதற்கீடான விதியைச் சொத்து மாற்றுச் சட்டம் விதி 13-ல் காணலாம். மேற்சொன்ன விதியின்படி நெருங்கிய உறவினரை யுடைய ஒருவர் அவர் இறப்பதற்குப் பன்னிரண்டு மாதங்களுக்கு முன் ஓர் உயிலினை உருவாக்கி, உருவாக்கப்பட்ட நாளிலிருந்து ஆறு மாதங்களுக்குள் அவ் வுயிலினைப் பதிவாளரின் அலுவலகத்தில் ஒப்படைத்து அவர் இறக்கும் நாள்வரையில் இருந்தாலன்றிச் சமய அல்லது அறப் பயன்களுக்கு உயில்வழியாக ஏதும் ஒதுக்கீடு செய்ய முடியாது. நெருங்கிய உறவினர்களையுடையவர் மரணப் படுக்கையிலிருக்கும்போது சமய அல்லது அறப்பயன்களுக்கு உயில்வழிக் கொடைகளைக் கொடுத்தலைத் தவிர்ப்பதே இவ் விதியின் முக்கிய நோக்கம். இவ் விதி இந்துக்களுக்குப் பயன் படாது.

## Cursetbai *vs.* Hamabai (45 Bom. L. R. 598)

ஒரு பெண் உயில்வழியாக ரூ. 25,000/-ஐப் பொதுப்படையாகக் கொடுத்து, அதனின்று வரும் வருவாயை அவரது மகன் 'ஏ'-யின் ஆயுட் காலத்திற்கும், மூலத் தொகையினை உயில்வழியாக நியமிக்கும் எவருக்கும் கொடுக்கவேண்டுமென்றும் அப்படி 'ஏ'-நியமிக்கத் தவறினால் ரூ. 5000/-ஐப் பார்சிகளின் நலனுக்காக அறப் பணிக்குச் செலவிட வேண்டும். மீதியை 'ஏ'-யின் விதவைக்கும், பிள்ளைகட்கும் கொடுக்கவேண்டுமென்றுக் குறிப்பிட்டிருந்தார். விருப்பாவணமளித்தவர் இறந்தபோது 'ஏ'-யும் விருப்பாவணமளித்தவரின் உடன்பிறப்பின் வழித்தோன்றலும் உயிருடன் வாழ்ந்தனர். மேற்கண்ட உயில் உருவாக்கப்பட்ட நாளினின்று ஆறு மாதங்களுக்குள் உதவிப்பதிவாளரின் அலுவலகத்தில் ஒப்படைக்கப்பட்டிருந்தது. ஆனால், விருப்பாவணமளித்தவர் இறந்த நாளுக்குமுன், பன்னிரண்டு மாதங்களுக்குமுன்

உருவாக்கப்படவில்லை (It was not executed 12 months before the death of the testodrix). விதவை, பிள்ளைகள் ஒருவருமின்றியும் விருப்பாவணமளித்தவரால் கொடுக்கப்பட்ட பதிலாள் நியமன அதிகாரத்தையும் பயன்படுத்தாமலும் 'ஏ' இறந்து போனார். இவ் வழக்கில் அறப்பயனுக்கான கொடை நேரடியாகக் கூறப்படவில்லையானாலும் மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளது என்னும் பிரிவு 118 செயல்படும். பன்னிரண்டு மாதங்களுக்குமுன் உருவாக்கப்பட்டிருக்கவேண்டுமென்ற நிபந்தனை நிறைவேற்றப்படாததால், இக் கொடை செல்லாது எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

8. சாத்தியக்கூறற்ற நிபந்தனையின்பேரில் கொடுக்கப்பட்ட கொடை செல்லாது (பிரிவு 126).

(1) 'ஏ' மணிக்கு 100 மைல்கள் நடக்கவேண்டும் என்ற நிபந்தனையின்மேல் கொடுக்கப்பட்ட உயில்வழிக் கொடை செல்லாதொழியும். ஒரு மனிதனால் மணிக்கு 100 மைல்கள் நடப்பதென்பது நடைபெறவியலாது.

(2) 'ஏ' என்பவர் தம் மகளை 'பி' மணந்துகொண்டால் ரூ. 500/-ஐ உயில்வழிக் கொடையாகக் கொடுக்கும்படி எழுதி வைத்தார். உயில் உருவாக்கப்பட்ட அன்று 'ஏ'-யின் மகள் உயிரோடில்லை. உயில்வழிக் கொடை செல்லாதுபோகும். 'ஏ'-யின் மகள் உயிரோடில்லாததால் அவளை 'பி' திருமணம் செய்துகொள்வது சாத்தியக்கூறற்றது.

9. சட்டத்திற்கு மாறான அல்லது நெறிகெட்ட நிபந்தனைகளின்பேரில் கொடுக்கப்பட்ட கொடை செல்லாதுபோகும் (பிரிவு 127).

உதாரணமாக :

(1) 'பி' என்பவர் 'சி' என்பவரைக் கொலை செய்தால் ரூ. 500/-ஐ உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்ட கொடை செல்லாதொழியும். கொலை செய்தல் இந்தியக் குற்றவியல் சட்டத்தின்படி குற்றமாகும். சட்டத்திற்கு முரணான செயல்.

(2) 'ஏ' என்பவர் தம் உடன்பிறந்தாரின் மகள் அவளது கணவனை விட்டுப் பிரிந்துவாழ்ந்தால் ரூ. 5,000/-ஐ உயில்வழிக் கொடையாகக் கொடுக்க வேண்டுமென்ற கொடை செல்லாதொழியும். மனைவி கணவனைவிட்டுத் தகுந்த காரணமின்றிப் பிரிந்து வாழ்தல் நெறிகெட்ட செயலாகும்.

# 14. வருநிகழ்வடை கொடை
# (பிரிவு 120)

## (Contingent Bequest)

ஓர் உயில்வழிக் கொடை குறிப்பிட்ட நிச்சயமற்ற சம்பவம் நடைபெற வேண்டுமென்ற நிபந்தனையுடன் கொடுக்கப்பட்டிருந்தால், அச் சம்பவம் நடைபெறும்வரை கொடைச் சொத்து கொடைபெறுநரைச் சேர்ந்தடையாது.

ஓர் உயில்வழிக் கொடை குறிப்பிட்ட நிச்சயமற்ற சம்பவம் நடைபெறக்கூடாது என்ற நிபந்தனையுடன் கொடுக்கப்பட்டிருந்தால், அச் சம்பவம் நடைபெறவியலாமல் போகும்வரை கொடைபெறுநரைச் சேர்ந்தடையாது.

இவ் விரு கொடைகளிலும் நிபந்தனைகள் நிறைவேறும்வரை கொடைபெறுநரின் உரிமை நிகழ்வடையுரிமை (Contingent) எனப்படும். ஆனால், குறிப்பிட்ட வயதையடைந்தவுடன் கொடுக்கப்படவேண்டுமென்று ஒரு தொகை உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டதோடு, அவ் வயதையடையும்வரை அத்தொகையினின்று வரும் வருவாயை அவருக்கே கொடுத்துவிடவேண்டுமென்றோ, அவ் வருவாயோ அல்லது அவ் வருவாயின் கொடைபெறுநரின் நலனுக்காகச் செலவிடப் போதுமான பணத்தையோ பூரணமாகக் கொடுத்துவிட வேண்டுமென்றோ உயிலில் கண்டிருந்தால் இக் கொடை வருநிகழ்வடையைச் சார்ந்ததன்று. இது மேற்கண்ட விதிகட்கு விதிவிலக்காகும். இதே விதிகளைச் சொத்து மாற்றுச் சட்டம் விதி 21-லும் காணலாம்.

ஒரு கொடை, கொடைபெறுநரைச் சேர்ந்தடைதல் குறிப்பிட்ட நிச்சயமற்ற ஒரு 'வரு' நிகழ்ச்சி நடைபெறுதலையோ, நடைபெறாதிருத்தலையோ சார்ந்திருந்தால் அது வருநிகழ்வடைக் கொடையெனப்படும்.

உதாரணமாக :

(1) பதினெட்டு வயதையடைந்தவுடன் கொடுத்துவிட வேண்டும் என்ற நிபந்தனையுடன் ஒரு தொகை உயில்வழிக் கொடையாக 'ஏ' என்பவருக்குக் கொடுக்கப்பட்டது. குறிப்பிட்ட வயதை அடைய வேண்டுமென்ற நிபந்தனை நிறைவேறும் வரையில் கொடையின்பேரில் 'ஏ'-யின் உரிமை வருநிகழ்வடையுரிமையாகும்.

(2) 'ஏ' என்பவர் ரூ. 500/-ஐ 'பி' என்பவர் பதினெட்டு வயதையடைந்தவுடன் கொடுக்கவேண்டுமென்றும் அப் பணத்தினின்று வரும் வட்டியினை 'பி' 18 வயதினையடையும்வரை அவரின் நலனுக்காகக் கொடுக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டு உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். இக் கொடை கொடைபெறுநரைச் சேர்ந்தடைந்தது.

(3) 'ஏ' என்பவர் ரூ. 500/-ஐ 'பி' என்பவர் பதினெட்டு வயதையடைந்தவுடன் கொடுக்க வேண்டுமென்றும், அவ் வயதையடையும்வரை அவரது பராமரிப்பிற்காக வேறு தொகையினின்று குறிப்பிட்டு உயில்வழிக் கொடையினைக் கொடுத்தார். இக் கொடை நிகழ்வடை கொடையாகும்.

மேற்சொன்ன உதாரணம் இரண்டும் பிரிவு 120-ன் விதிவிலக்கிற்கு எடுத்துக்காட்டு. விதிவிலக்கின்படி குறிப்பிட்ட வயதை ஒருவர் அடைந்தவுடன் ஒரு தொகை கொடையாக, பின்னொரு நாளில் (future date) கொடுக்கப்படுவதோடு அத் தொகையினின்று வரும் வருவாயை, அவ் வயதினையடையும் வரை அவருக்கே கொடுத்துவிடுகிறது. வருவாய், உயில்வழிக் கொடைத் தொகையினின்றே கொடுக்கப்பட வேண்டும். வேறு தொகையினின்றன்று (உதாரணம் 3-ல் காண்க).

## Dadachanji *vs.* Ratnabai (49 Bom. 167)

விருப்பாவணமளித்த ஒருவர் கருவுற்றிருக்கும் அவரது மனைவிக்குப் பிறக்கவிருக்கும் மகன் உரிமை வயதையடைந்தவுடன் அவரது எஞ்சிய சொத்துகளனைத்தையும் கொடுத்துவிட வேண்டுமென்றும் அதுவரை அச் சொத்துகளினின்று வரும் வருவாய் அவரது குடும்பத்தினரான மனைவி, பிறக்கவிருக்கும் மகன், உயில் நிறைவேற்றாளரான சகோதரன் ஆகியோரது பராமரிப்பிற்குச் செலவிடப்படவேண்டுமென்றும், வருவாயில் பராமரிப்புச் செலவு போக எஞ்சியுள்ளதைக் கல்விக்கு ஊக்கம் கொடுத்தல் போன்ற இதரச் செயல்களுக்குப் பயன்படுத்துவதற்

குத் தேர்ந்தெடுக்கும் அதிகாரத்தினை நிறைவேற்றாளர்க்குக் கொடுத்துக் கட்டளையிட்டிருந்தார். விருப்பாவணமளித்தவரின் மனைவிக்கு ஒரு மகன் பிறந்து சில நாள்களுக்குள் இறந்துவிட்டான். மகனுக்குக் கொடுக்கப்பட்ட கொடை விதிவிலக்கில் வருகின்றது. சொத்துகள் மகனையும் விதவையையும் சேர வேண்டும். மகன் இறந்துவிட்டதால் விருப்பாவணமளித்தவரின் விதவைக்குச் சொத்துகள் போய்ச் சேர வேண்டுமென்று பொருள் கொள்ளும்படி வாதிடப்பட்டது. இவ் வழக்கு விதிவிலக்கின் கீழ் வராதென்றும், மகனுக்குக் கொடுக்கப்பட்ட கொடை, உரிமை வயதினையடைய வேண்டுமென்ற வருநிகழ்வினைச் சார்ந்தது; ஆனால், அவன் அவ் வயதிற்குள் இறந்துவிட்டதால் எஞ்சிய சொத்துகள் மகனின் பிரதிநிதிகட்குப் போய்ச் சேராது என்றும் எதிர்த்துத் தீர்ப்பளிக்கப்பட்டது.

சில சமயங்களில் வருநிகழ்வு ஒன்றாகவில்லாமல் பலவாகவும் இருக்கலாம். அத்தனை வருநிகழ்வுகளும் நடைபெற்றாலன்றி வருநிகழ்வடைக் கொடை சேர்ந்தடையாது.

## Jamshedji *vs.* Meherbanoo (Times of India 20. 8. 41)

விருப்பாவணமளித்த ஒருவர் தமது உயிலில் குறிப்பிட்டிருந்ததாவது : அவரது மகன் ஜகாங்கீர், மகள் ரத்தன்பாய் இருவரும் இறந்தபின்னர் அவரது சொத்துகள் விற்கப்பட்டு, வரும் தொகையில் மூன்றில் இரண்டு பங்கினை ஜகாங்கீரின் விதவைக்கும் பிள்ளைகட்கும், மூன்றில் ஒரு பங்கினை ரத்தன்பாயின் பிள்ளைகட்கும் கொடுக்கவேண்டும். ஜகாங்கீருக்கு விதவையும் பிள்ளைகளும், ரத்தன்பாயிக்குப் பிள்ளைகளும் இல்லாதிருக்கும் பட்சத்தில், அத் தொகையினை 'ஜே. என். வேடிட் ஆர்பனேஜ் பண்டு'-க்குக் கொடுத்துவிட வேண்டுமென்று கட்டளையிட்டிருந்தார். ரத்தன்பாய் பிள்ளைகளின்றி முதலில் இறந்துவிட்டார். பின்னர் ஜகாங்கீர் விதவையையும் பிள்ளைகளையும் விட்டு இறந்துவிட்டார். அறச் செயலுக்குக் கொடை போய்ச் சேருமா என்ற வினாவெழுந்தது. இறுதியாக அறச் செயலைச் சென்றடைதல் இரு வருநிகழ்வுகளான ஜகாங்கீர் மனைவி மக்களின்றியும் ரத்தன்பாய் மக்களின்றியும் இறத்தலைச் சார்ந்தது. ரத்தன்பாய் மட்டும் மக்களின்றி இறந்தால், அவளது மூன்றிலொரு பங்கினை அறச்செயலுக்குக் கொடுக்கவேண்டுமென்று உயிலில் எங்கும் கூறப்படவில்லை. இறுதிக் கொடை ஒன்றையொன்று சாராத இரு நிகழ்ச்சிகளைச் சார்ந்திருந்தால், இரு

நிகழ்ச்சிகளும் நடைபெற்றாலோ நடைபெறாமல் போனாலோ தான் இறுதிக் கொடை செயல்படும். தனிப்பட்ட இரு நிகழ்ச்சி களைக் குறிப்பிட்டிருந்தால் ஏதாவதொன்று எனக் கொள்ள வியலாது. ஆதலால், இவ் வழக்கில் அறச் செயலுக்கு எவ்வித உரிமையும் கொடுக்கவியலாது.

## Bhimabai *vs.* Kondaji

விருப்பாவணமளித்த ஒருவர் 'கொலாபாலேண்டு மில்ஸ் லிமிடெட்டால்' முதலீடு செய்யப்பட்டுள்ள ரூ. 4,500/-ஐ அவரது மகனின் மகளான பீமாபாய்க்கு அவள் ஒரு குழந்தையைப் பெற்றவுடன் அல்லது அவளுக்குத் திருமணமான 5 ஆண்டுகட்குப் பிறகு அவரது உயில் நிறைவேற்றாளர் கொடுக்க வேண்டுமென உயில்வழிக் கொடையினைக் கொடுத்தார். இந்த உயில் உருவாக் கப்பட்ட நாளான 7-4-1932 அன்று பீமாபாய் உரிமை வயதை அடையவில்லை. விருப்பாவணமளித்தவர் 2-5-1932-ல் இறந்து போனார். பீமாபாயுக்கு 1937ஆம் ஆண்டு மார்ச் திங்கள் திருமணம் நடைபெற்றது. ஓராண்டு கழித்து 1938 ஆம் ஆண்டு மார்ச்சில் அவளுக்கு ஒரு குழந்தை பிறந்தது. உயில்வழிக் கொடையினைக் கோரி 1941ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 5ஆம் நாள் வழக்குத் தொடரப்பட்டது. இக் கொடை (1) குழந்தை பிறத்தல், (2) திருமணமாகி 5 ஆண்டுகள் நிறைவுற வேண்டு மென்ற இரு எதிர்கால நிகழ்வுகளைச் சார்ந்தது. குழந்தை பிறந்தவுடனே இக் கொடை பீமாபாயைச் சேர்ந்தடைந்தது. எனவே, பீமாபாய் குழந்தை பிறந்த நாளன்று வட்டியுடன் கொடைத் தொகையைப் பெறத் தகுதியுடையவர் என நீதிபதி கனையா தீர்ப்பளித்தார்.

பிரிவு 120 இந்துக்களையும் கட்டுப்படுத்தும். விருப்பாவண மளித்தவரின் மொத்தச் சொத்துகளின் மேலுள்ள வருநிகழ்வடை யுரிமை செல்லத்தக்கது. வருநிகழ்வடையுரிமை செல்லுபடியாக இந்துச் சட்டம் இரு கொள்கைகளை விதிக்கின்றது.

1. விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளன்று உயிரோ டிருப்பவரின் வாழ்நாளுக்குள் கொடை செயல்பட நிபந்தனை யான வருநிகழ்வு நடைபெற வேண்டும்.

2. கொடையினை ரத்துச்செய்து பிறிதொருவருக்குக் கொடுத்தால் அக் கொடைபெறுநர், விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்று உயிரோடிருக்க வேண்டும்.

ஒரு வகுப்பினருக்குக் குறிப்பிட்ட வயதையடைந்தவுடன் கொடுக்கப்பட வேண்டுமென்றும், அவ் வயதினையடையும்வரை அக் கொடையினின்று வரும் வருவாயை அவர்களது நலனுக்குப் பயன்படுத்தலாமென்றும் உயில்வழிக் கொடை கொடுக்கப் பட்டால், அக் கொடை நிகழ்வடை கொடையாகும். இதனையே சொத்து மாற்றுச் சட்டம் பிரிவு22-ம், இந்திய வாரிசுரிமைச் சட்டம் பிரிவு 121-ம் கூறுகின்றன. பிரிவு 121 கூறுவதாவது: ஒரு வகுப்பினரில் குறிப்பிட்ட வயதையடைந்தவர்களுக்கு மட்டும் உயில்வழிக் கொடையென எழுதப்பட்டிருந்தால், குறிப்பிட்ட அவ் வயதினை அடையாத ஒருவர் அதனையடையும் வரை கொடைச் சொத்துகளின்மேல் பூரண உரிமையும் பாராட்டவியலாது. ஆனால், இடைப்பட்ட காலத்தில் அவ் வகுப்பினரின் பயனுக்காகவும், நலனுக்காகவும், பராமரிப்பிற் காகவும் அக் கொடைச் சொத்துகளினின்று வரும் வருவாயைப் பயன்படுத்தலாம்.

இதேபோன்று தனிநபருக்குக் கொடுக்கப்பட்ட கொடையாயின் பிரிவு 120-ன் கீழுள்ள விதிவிலக்குச் செயல்படும். ஒரு தனிநபர் குறிப்பிட்ட வயதினையடைந்தவுடன் கொடுக்கப்பட வேண்டும். அதுவரை கொடையினின்று வரும் வருவாயை அவர் பெற்றுக்கொள்ளலாமென்று உயில் கூறுமானால், அது வருநிகழ் வடையாகாது.

# 15. சுமை சேர்ந்த உயில்வழிக் கொடைகள்

## (Onerous Bequests)

கொடை என்பது சொத்துக்குரியவர் கிரயமின்றி வேறொரு வருக்குத் தம் சொத்துகளைக் கொடுத்துவிடுவதே. அதனை உயில் வழியாகக் கொடுக்கும்போது உயில்வழிக் கொடையெனக் கண்டோம். கிரயம் என்ற சொல் அதற்குரிய விலையை அல்லது அதற்கீடான வேறு சொத்தையோ, பொருளையோ குறிக்கும். கிரயமின்றிக் கொடுக்கும் வேளையில் கொடையாளி கொடை பெறுநருக்குச் சில கடமைகளைச் சுமத்தலாம். கொடை பெறுநர், கொடைச் சொத்துகளைப் பெறவிரும்பின் அக் கடமைகளை நிறைவேற்றக் கட்டுப்பட்டவர். இவ்வகைக் கொடைகள் சுமை சேர்ந்த உயில்வழிக் கொடைகள் எனப்படும். இவ்வகைக் கொடைகளுக்கான விதிகளை இச் சட்டத்தில் பிரிவுகள் 122, 123-ல் காணலாம். இதற்கீடான விதியைச் சொத்து மாற்றுச் சட்டம் விதி 127ஆம் பிரிவில் காணலாம்.

உயில்வழிக் கொடையோடு ஒரு கடமையும் சுமத்தப் பட்டால், கொடைபெறுநர் கொடையோடு கடமையையும் ஏற்றுக்கொண்டாலன்றி அக் கொடையினை அவர் பெறவியலாது (பிரிவு 122).

ஓர் உயில்வழிக் கொடையில் சுமையையும் பயனையும் தரக் கூடிய சொத்துகள் கொடுக்கப்பட்டால் உயிலில் மாறுபட்ட எண்ணங்கள் தெரிவிக்கப்பட்டிருந்தாலன்றிக் கொடை பெறுநர் சுமையினை ஒதுக்கிவிட்டுப் பயனை மட்டும் ஏற்றுக்கொள்ள வியலாது. இரண்டிலொன்றைத் தெரிந்து எடுத்துக் கொள்ளும் உரிமை கொடை பெறுநருக்குக் கிடையாது; முழுமையாக ஏற்றுக்கொள்ள வேண்டும். இல்லாவிடில் எல்லாவற்றையும் தள்ளிவிட வேண்டும். ஏற்றுக்கொண்டு பயனடையும்போது கடமைகளையும் நிறைவேற்ற வேண்டும். நிறைவேற்றப்பட வேண்டிய கடமைகள் பணச் செலவினையுண்டாக்கினாலும் கொடையினை ஏற்றுக்கொள்ளும்போது அதனை நிறைவேற்றி

யாக வேண்டும். கொடைபெறுநர் கொடையினை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பது கட்டாயம் அன்று. அவர் அதனைத் தள்ளிவிடலாம். அப்படித் தள்ளிவிடும்போது அதனின்று வரும் பயனை இழப்பார். கொடையினைத் தள்ளிவிடுதலை வெளிப் படையாகவோ, மறைமுகமாகவோ குறிப்பிட்டுத் தெரிவிக்கலாம். ஒருமுறை தள்ளிவிட்டுப் பின்னர் அதனை வேண்டுமென்று கோர இயலாது. அதேபோன்று ஒருமுறை ஏற்றுக்கொண்டு பின்னர் அதனை மறுக்கவியலாது. பயனும் சுமையும் ஒரே கொடையாகக் கொடுக்கப்பட்டிருக்கவேண்டும். வெவ்வேறு கொடைகளாக இருப்பின் இவ் விதி செல்லாது.'

விருப்பாவணமளித்தவர் வெவ்வேறான இரு கொடைகளை ஒரே உயிலில் ஒரே நபருக்குக் கொடுத்திருந்து அவைகளிலொன்று பயனற்றுச் சுமையாகவும், மற்றொன்று பயனுள்ளதாகவும் இருந்தால் பயனற்றதைத் தவிர்த்துப் பயனுள்ளதை ஏற்றுக் கொள்ளலாம். கொடைபெறுநர் எல்லாக் கொடைகளையும் தெரிந்தெடுத்துக்கொள்ள வேண்டுமா, எல்லாவற்றையும் ஒன்றாகத் தவிர்க்க வேண்டுமா அல்லது பயனுள்ளதை ஏற்றுக்கொண்டு பயனற்றதைத் தள்ளிவிடலாமா என்பன உயிலில் கண்டுள்ள விருப்பாவணமளித்தவரின் எண்ணத்தைப் பொறுத்தது.

**வருநிகழ்வு சார்ந்த கொடைகள்**

ஒரு கொடை, கொடைபெறுநரைச் சேர்ந்தடைதல் குறிப் பிட்ட நிச்சயமற்ற வருநிகழ்ச்சி நடைபெறுதலையோ, நடை பெறாமலிருத்தலையோ சார்ந்திருந்தால் அதனை வருநிகழ்வுக் கொடையெனக் கண்டோம். ஒரு நிகழ்வுக் கொடை சேர்ந் தடையுங் காலத்தைப் பிரிவு 120 குறிப்பிடுகின்றது.

குறிப்பிட்ட நிச்சயமற்ற வருநிகழ்ச்சி நடைபெற்றவுடன் கொடுக்கப்பட வேண்டுமென்று கொடுக்கப்பட்டு அந் நிகழ்ச்சி நடைபெறுவதற்கான சமயத்தையும் உயிலில் குறிப்பிடா மலிருந்தால், உயில்வழிக் கொடைகள் பிரித்துக் கொடுக்கப்படும் காலத்திற்குமுன் அந் நிகழ்ச்சி நடைபெற்றாலன்றி அக் கொடை செயல்படாது (பிரிவு 124). இதற்கீடான விதியைச் சொத்து மாற்றுச் சட்டம் விதி 23-ல் காணலாம். தெளிவாகக் கூறின்: குறிப்பிட்ட நிச்சயமற்ற வருநிகழ்ச்சியினைச் சார்ந்து ஒரு கொடை கொடுக்கப்பட்டு, அந் நிகழ்ச்சி நிகழ்வதற்கான காலம் குறிக்கப்படாமலிருந்தால், சொத்துகளைப் பிரிக்கும் நாளான விருப்பாவணமளித்தவர் இறந்த நாளுக்குள் அந் நிகழ்ச்சி நடை

பெறாவிட்டால், அக் கொடை செயல்படாது. இவ் விதி பிரிவு 120-ஐ ஒத்ததுபோன்று தோன்றும். ஆனால், இரண்டிற்கும் வேறுபாடுகள் உண்டு. பிரிவு 120-ல் நிச்சயமற்ற வருநிகழ்ச்சி நடைபெற வேண்டிய காலம் வரையறுக்கப்பட்டுள்ளது; அல்லது குறிக்கப்பட்டுள்ளது. பிரிவு 124-ல் வருநிகழ்ச்சி நடைபெற வேண்டிய காலம் குறிப்பிடப்படவில்லை. அல்லது காலவரை குறிப்பிடப்படாமல் இருக்கும்போது பிரிவு 124 செல்லுபடியாகும். இவ்விரண்டு விதிகளில் எதனைப் பயன்படுத்தவேண்டுமென்ற ஐயமெழும்போது சொத்துகளைப் பிரித்துக் கொடுக்க வேண்டிய காலமெதுவென்று முதலில் நிருணயிக்க வேண்டும். அக் காலம் (1) விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளோ (2) அவருக்குப்பின் வாழ்நாள் அனுபவப் பாத்தியக்காரர் அல்லது பாத்தியக்காரர்களில் இறுதியாக இருப்பவர் இறக்கும் நாளோ ஆகும்.

எடுத்துக்காட்டு :

1. 'ஏ' என்பவருக்கு ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டது. ஒருவேளை அவர் இறந்துபோனால் 'பி'-க்குக் கொடுக்க வேண்டுமென்று எழுதிவைக்கப்பட்டது. 'ஏ' விருப்பாவணமளித்தவரை எஞ்சி வாழ்ந்தார். 'பி'-க்குக் கொடுக்கப்பட்ட கொடை செயல்படாது.

2. 'ஏ' என்பவருக்கு ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டது. ஒருவேளை அவர் பிள்ளையின்றி இறந்துபோனால் 'பி'-க்குக் கொடுக்கவேண்டுமென்று எழுதிவைக்கப்பட்டது. 'ஏ' விருப்பாவணமளித்தவரை எஞ்சி வாழ்ந்தாலும் அல்லது அவரது வாழ்நாளில் ஒரு பிள்ளையைவிட்டு இறந்துபோனாலும் 'பி'-க்குக் கொடுக்கப்பட்ட கொடை செயல்படாது.

3. 'ஏ' என்பவர் 18 வயதினையடைந்த பின்னர் கொடுக்கப்பட வேண்டும். அப்படியடையாமல் இறந்துவிட்டால் 'பி'-க்குக் கொடுக்கவேண்டுமென ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டது. 'ஏ' 18 வயதினை அடைந்தார். 'பி'-க்குக் கொடுக்கப்பட்ட கொடை செயல்படாது.

4. ஓர் உயில்வழிக் கொடையினை 'ஏ' என்பவரின் வாழ்நாளுக்கும், அவருக்குப்பின் 'பி' என்பவருக்கும், ஒருவேளை 'பி' இறந்துபோனால் 'சி' என்பவருக்குக் கொடுக்கப்படவேண்டுமெனவும் எழுதப்பட்டிருந்தது. ஒருவேளை 'பி' இறந்துபோனால் என்னும் சொற்களுக்கு ஒருவேளை 'ஏ'-யின் வாழ்நாளிலேயே 'பி' இறந்துபோனால் என்று பொருள்கொள்ள வேண்டும்.

மேற்கூறிய முதல் மூன்று எடுத்துக்காட்டுகளில் சொத்துகளைப் பிரித்துக் கொடுக்கும் காலம் விருப்பாவணமளித்தவர் இறந்த சமயமாகும். நான்காவது எடுத்துக்காட்டில் அது வாழ்நாள் அனுபவப் பாத்தியக்காரர் இறக்கும் சமயமாகும். குறிப்பிட்ட நிச்சயமற்ற வருநிகழ்ச்சி சொத்துகளைப் பிரித்துக் கொடுக்கும் சமயத்திலோ, அதற்கு முன்னரோ நடைபெறாவிட்டால் அந் நிகழ்ச்சியினைச் சார்ந்து கொடுக்கப்பட்ட கொடை கழிவுறும்.

சொத்துகளைப் பிரித்துக் கொடுக்கும் நாளில் கொடை பெறுநர் உயிரோடில்லாவிடில் வேறொருவருக்குக் கொடுக்க வேண்டுமென்ற கொடையினை மாற்றிவிடுவதைக் கண்டோம். அதனை மாற்றுக்கொடை (Gift Ovest) எனக் கூறலாம். இவ்வகைக் கொடையில் கொடைச் சொத்துகளின் உரிமைகள் சேர்ந்தடைதல் குறிப்பிட்ட நிகழ்ச்சியினைச் சார்ந்தது. அந் நிகழ்ச்சி நடைபெறுவதால் சொத்துகள் கொடைபெறுநரைச் சேர்ந்தடையாமல் விலகி வேறொருவரைச் சென்றடையும்.

வருநிகழ்வடைக் கொடை செயல்படுதலைக் கண்டோம். வருநிகழ்வடைக் கொடையில் பயன்பெறுவோரைப்பற்றிப் பிரிவு 125 கூறுகின்றது. இதற்கீடான விதியைச் சொத்து மாற்றுச் சட்டம் விதி 24-ல் காணலாம். சில காலத்திற்குப் பின் எஞ்சி வாழும் குறிப்பிட்ட ஒரு சாராருக்கென ஒரு கொடை கொடுக்கப்பட்டிருந்து. எவ்வளவு காலத்திற்குப்பின் கொடுக்கப்பட வேண்டுமெனக் குறிக்கப்படாமலிருந்தால், உயிலில் மாறுபட்ட எண்ணங்கள் ஏதும் தெரிவிக்கப்படாமலிருந்தால், அச் சொத்துகளைப் பிரித்துக் கொடுக்கும் காலத்தில் அச் சாராரில் உயிரோடிருப்பவர்களை மட்டுமே அக் கொடை சென்றடையும்.

எடுத்துக்காட்டு :

1. ஒரு சொத்து 'ஏ' என்பவருக்கும் 'பி' என்பவருக்கும் சமமாகப் பிரித்துக் கொடுக்கப்பட வேண்டும் அல்லது இருவரில் எஞ்சி வாழ்பவருக்குக் கொடுக்கப்பட வேண்டுமென உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டது. 'ஏ'-யும் 'பி'-யும் விருப்பாவணமளித்தவரை எஞ்சி வாழ்ந்தால் கொடை இருவருக்கும் சமமாகப் பிரித்துக் கொடுக்கப்படும். 'ஏ' விருப்பாவணமளித்தவருக்கு முன்னர் இறந்து 'பி' அவருக்குப் பின்னர் இறந்தால் அக் கொடை 'பி'-யைச் சென்றடையும்.

2. ஒரு சொத்து 'ஏ'-யின் வாழ்நாளுக்கென்றும், அவருக்குப் பின்னர் 'பி'-க்கும், 'சி'-க்கும் சமமாகப் பிரித்துக் கொடுக்கப்பட

வேண்டும் அல்லது இருவரில் எஞ்சி வாழ்பவருக்குக் கொடுக்கப் பட வேண்டுமென்றும் கொடுக்கப்பட்டது. 'ஏ'-யின் வாழ்நாளில் 'பி' இறந்துவிட்டார். 'ஏ'-யைச் 'சி' எஞ்சி வாழ்ந்தார். 'ஏ' இறந்ததும் கொடை 'சி'-யைச் சென்றடையும்.

3. ஒரு சொத்து 'ஏ'-யின் வாழ்நாளுக்கென்றும், அவரது மறைவிற்குப் பின்னர் 'பி'-க்கும், 'சி'க்கும் கொடுக்கப்பட வேண்டும் அல்லது இருவரில் எஞ்சி வாழ்பவருக்குக் கொடுக் கப்பட வேண்டுமென்றும், விருப்பாவணமளித்தவரை 'பி'-எஞ்சி வாழாவிட்டால், 'பி'-யின் பிள்ளைகள் 'பி'-க்குப் பதிலாகப் பெற்றுக்கொள்ளலாம் என்றும் உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டது. விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளில் 'சி' இறந்துவிட்டார்.. விருப்பாவணமளித்தவரை 'பி' எஞ்சி வாழ்ந்து, 'ஏ'-யின் வாழ்நாளிலேயே இறந்துவிடுகிறார். அக் கொடை 'பி'-யின் பிரதிநிதிகளைச் சென்றடையும்.

4. ஒரு சொத்தினை 'ஏ'-யின் வாழ்நாளுக்கென்றும் அவருக் குப்பின் 'பி', 'சி' இருவருக்கும் கொடுக்கவேண்டும். இருவரும் 'ஏ'-யின்வாழ்நாளில் இறந்துவிட்டால் முழுச் சொத்தும் இருவரில் கடைசியாக இறந்தவரைச் சென்றடைய வேண்டுமென்ற குறிப்புடன் கொடையாகக் கொடுக்கப்பட்டது. 'பி' முன்னரும், 'சி' பின்னருமாக இருவரும் 'ஏ'-யின் வாழ்நாளில் இறந்துவிட்ட னர். இக் கொடை 'சி'-யின் பிரதிநிதிகளைச் சென்றடையும்.

கிரிப்ஸ் எ. வால்காட் என்னும் வழக்கில் கொடுக்கப்பட்ட தீர்ப்பினைக்கொண்டு உருவாக்கப்பட்டதுதான், பிரிவு 125. உயில்வழிக் கொடை கொடுக்கப்படவேண்டிய காலம் குறிக்கப் படாமலிருந்தால், கொடையினை இறுதியாகப் பெறுபவருக்கு முன்னர் அக் கொடையின்பேரில் எந்த உரிமையும் கொடுக்கப் படாமலிருந்தால், (அதாவது வாழ்நாள் பாத்தியம்) அதனைக் கொடுக்கவேண்டிய காலம் விருப்பாவணமளித்தவர் இறந்த நாளாகும். அந் நாளில் அவரை எஞ்சி வாழும் கொடைபெறுநர் முழுக் கொடையையும் பெறுவார். அதற்குமுன் ஒரு வாழ்நாள் பாத்தியக் கொடை கொடுக்கப்பட்டிருந்தால் அக் கொடை யினைக் கொடுக்கவேண்டிய காலம் வாழ்நாள் அனுபவப் பாத்தி யக்காரர் இறக்கும் நாளாகும். அந் நாளில் அவரை எஞ்சிவாழும் கொடைபெறுநர் முழுக் கொடையையும் பெறுவார். எஞ்சி வாழும் காலமே கொடையினைப் பெற்றுக்கொள்ளும் காலம். எஞ்சிவாழ்தல் என்பது உயிரோடிருத்தலைக் குறிக்கும். ஒருவரை எஞ்சி வாழும் ஒரு வகுப்பினருக்குக் கொடை என்றால் அவர்

இறக்கும்போது உயிரோடிருக்கும் அவ் வகுப்பின் உறுப்பினர் களை மட்டுமே குறிக்கும்; அதன் பின்னர்ப் பிறந்தவர்களைக் குறிக்காது. வேறுவிதமாகக் கூறவேண்டுமானால், குறிப்பிட்ட சம்பவம் நடைபெறும்போது உயிரோடிருக்கும் அவ் வகுப்பின் உறுப்பினர்களை மட்டுமே குறிக்கும். அச் சம்பவம் நடைபெற்ற பின் வரும் உறுப்பினர்களைச் சேர்க்காது.

எஞ்சி வாழ்தல் என்பது ஒரே சமயத்தில் வாழும் இருவரில் ஒருவர் நீண்ட நாள்கள் வாழ்தலைக் குறிக்கும். குறிப்பாக ஒரு சம்பவம் நடைபெறும்போது வாழ்தலையோ, குறிப்பிட்ட ஒருவர் இறக்கும்போது வாழ்தலையோ குறிக்கும். எனவே, மேற் சொன்ன விதியில் கண்ட 'காலம்' என்னும் சொல் விருப்பாவண மளித்தவர் இறந்த பின்னர் வரையறையற்ற காலத்தைக் குறிக் காமல் சட்ட வரம்பிற்குட்பட்ட காலத்தினையே குறிக்கும்.

எடுத்துக்காட்டு 1: ஒரே சமயத்தில் வாழும் 'ஏ', 'பி' என்பவர்களுக்கு ஒரு கொடை கொடுக்கப்படுகிறது. கொடை கொடுக்கப்படவேண்டிய காலம் குறிப்பிடப்படவில்லை. ஈண்டுக் கொடை கொடுக்கப்படவேண்டிய காலம் விருப்பாவணமளித்த வர் இறந்த சமயமாகும். எனவே, இருவரில் எவர் விருப்பாவண மளித்தவரை எஞ்சி வாழ்கிறாரோ அவரே கொடையினைப் பெறு வார். ஆனால் 'ஏ'-யும், 'பி'-யும் ஒருவர்பின் ஒருவராக விருப்பா வணமளித்தவரின் வாழ்நாளிலேயே இறந்துபோனால், இருவரில் நீண்ட நாள் வாழ்ந்தவர் கொடையினைப் பெறவியலாது. காரணம் யாதெனில் ஈண்டுக்கொடை கொடுக்கும் காலம் விருப் பாவணம் அளித்தவர் இறக்கும் நாள். அந் நாளுக்கு முன்னரே, இருவரும் இறந்துபோவதால், கொடை செயல்பெறாமல் பிரிவு 105-ல் கண்டுள்ளபடி கழிவுறும்.

எடுத்துக்காட்டு 2-ல் கொடையினைக் கொடுக்கும் காலம் வாழ்நாள் அனுபவப் பாத்தியக்காரர் இறக்கும் நாளாகும். வாழ் நாள் அனுபவப் பாத்தியக்காரர் இறக்கும் நாளில் கொடை பெறுநர் இருவரும் உயிரோடிருந்தால், கொடையினைச் சமமாகப் பெறுவர். இருவரில் ஒருவர் இறந்திருந்தால், அந் நாளில் உயிரோடு எஞ்சியிருப்பவர் முழுவதையும் பெறுவார். 'பி' இறந்து 'சி' மட்டுமே எஞ்சி வாழ்வதால், முழுக் கொடையும் 'சி'-யைச் சேரும். ஆனால், அந் நாளில் இருவருமே இறந்துபோயிருந்தால், வாழ்நாள் அனுபவப் பாத்தியக்காரருக்குப்பின் கொடையினைப் பெற, வேறு கொடைபெறுநர் இல்லாததால் பிரிவு 131 செயல் பட்டு 'பி', 'சி'-க்குக் கொடுத்த கொடையினை நிலைநிறுத்திட அவர்களது பிரதிநிதிகட்கு முறையே சமமாகக் கொடுக்கப்படும்.

மூன்றாம் எடுத்துக்காட்டு, முன் இரண்டு எடுத்துக்காட்டு களினின்றும் சற்று வேறுபட்டது. வாழ்நாள் அனுபவப் பாத்தியக் காரர் ஒருவர் இடைப்பட்டாலும் எஞ்சி வாழும் காலம் விருப்பா வணமளித்தவர் இறக்கும் சமயத்தையும் சார்ந்தது. எனவே, இடத்திற்கேற்றாற்போல் எடுத்துக்கொள்ள வேண்டும். முதலில் விருப்பாவணமளித்தவர் இறந்த நாளில் எஞ்சி வாழ்தலைக் கண்டோம். இரண்டாவது, வாழ்நாள் அனுபவப் பாத்தியக் காரரை எஞ்சி வாழ்தலைக் கண்டோம். மூன்றாம் எடுத்துக் காட்டில் விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளில் இறந்துவிட்ட தால் அவருக்கு அளிக்கப்பட்ட உரிமைகள் அனைத்தும் பிரிவு 105-ன்படி கழிவுறும். 'பி' விருப்பாவணமளித்தவரை எஞ்சி வாழ்ந்தால், அவருக்களிக்கப்பட்ட உரிமைகள் அவரைச் சேர்ந் தடையும். அதன் பின்னர் வாழ்நாள் அனுபவப் பாத்தியக் காரருக்கு முன்னதாகவே 'பி' இறந்துபோனாலும் அவருக்களிக் கப்பட்ட கொடை அவரது பிரதிநிதிகட்கும் போய்ச் சேரும்.

நான்காம் எடுத்துக்காட்டில், கொடைபெறுதல் வாழ்நாள் அனுபவப் பாத்தியக்காரரை எஞ்சி வாழ்தலைச் சார்ந்தது. 'பி'-யும் 'சி'-யும் வாழ்நாள் அனுபவப் பாத்தியக்காரரின் வாழ் நாளில் இறந்துவிடுகின்றனர். இருவரில் 'சி' கடைசியாக இறப்ப தால் அவரே நீண்ட நாள்கள் வாழ்ந்தவர். இருவரில் கடைசியாக இறப்பவர் என்ற மாறுபட்ட எண்ணத்தை விருப்பாவண மளித்தவர் தெரிவித்திருப்பதால் 'சி'-யின் பிரதிநிதிகட்குப் போய்ச் சேரும். இரு கொடைபெறுநரும் ஒன்றாக இறந்தால் பிரிவு 131 செயல்படும். இரு கொடைபெறுநரின் பிரதிநிதிகள் பெறுவார்களென முன்னர்க் கண்டோம். நான்காம் எடுத்துக் காட்டில் விருப்பாவணமளித்தவரின் மாறுபட்ட எண்ணம் தெரிவிக்கப்பட்டிருப்பதால், பிரிவு 131 இங்கே செயல்படாது. பிரிவு 131ஐப் பிரிவு 125 கட்டுப்படுத்தும்.

# 16. நிபந்தனைக் கொடைகள்

## (Conditional Bequests)

ஒரு சொத்தின் சொந்தக்காரர் அதனை அவரது விருப்பப்படி அனுபவிக்கலாம்; எவருக்கு வேண்டுமானாலும் விற்கலாம்; கொடையாகவும் கொடுக்கலாம். அப்படிக் கொடையாகக் கொடுக்கும்போது சில நிபந்தனைகளையும் விதிக்கலாம். உயில் வழிக் கொடையானால் உயில்களின் சட்டத்திற்குட்பட்டுச் சில நிபந்தனைகளை விதிக்கலாம். அந் நிபந்தனைகள் சட்டவிரோத மானதாகவும் சமுதாயத்தில் நிலவிவரும் பொதுக் கொள்கைகட்கு மாறானதாகவும் இருக்கக்கூடாது. அவை நிச்சயமற்றதாகவும் இருக்கக்கூடாது. எனவே, சட்டத்திற்கும் சமுதாயக் கோட்பாடு களுக்கும் உட்பட்டு ஒருவர் நிபந்தனையுடன் தம் சொத்துகளைக் கொடையாகக் கொடுக்கலாம். நிபந்தனைகளை இப்படித்தான் விதிக்க வேண்டுமென்று குறிப்பிட்ட படிவம் ஏதும் கிடையாது. மதம் மாறக்கூடாது அல்லது குறிப்பிட்ட பதவியினை வகிக்கக் கூடாது என்பன போன்ற நிபந்தனைகளையும் விதிக்கலாம். நிபந்தனைகள் நிறைவேற்றப்பட்டாலன்றிக் கொடை, கொடை பெறுநரைச் சேர்ந்தடையாது. நிபந்தனைகள் நிறைவேற்றப்படக் கூடாதனவாக இருக்கக்கூடாது.

நிபந்தனைக் கொடையில் கொடைபெறுநர் சில காரியங் களைச் செய்யவேண்டும் அல்லது செய்யாமலிருக்க வேண்டும். அப்போதுதான் அவர் அக் கொடையினைப் பெறவியலும். இவ் வகைக் கொடை செயல்படுவது நிச்சயமற்ற ஒரு சம்பவம் நடை பெறுவதையோ, நடைபெறாமலிருத்தலையோ சார்ந்தது. எனவே நிபந்தனைகளோடுகூடிய கொடை சுமை சார்த்தப்பட்ட கொடை போன்று தோன்றும். மேலும், நிபந்தனைக் கொடைகள் வருநிகழ்வடை கொடைகளாகா. வருநிகழ்வடை கொடையில் குறிப்பிட்ட சம்பவம் நடைபெறுதலைக் கொடை சார்ந்துள்ளது. நிபந்தனைக்கொடை, கொடை பெறுநரின் செயலைச் சார்ந்தது. ஒன்று குறிப்பிட்ட செயலை நிறைவேற்ற வேண்டும். அல்லது ஒரு செயலினைச் செய்யாமலிருக்க வேண்டும்.

விருப்பாவணமளித்தவர் நிபந்தனைகளை, கொடைகளைப் பெறு முன்னர் நிறைவேற்ற வேண்டுமென்றோ, கொடையினைப் பெற்றபின் நிறைவேற்ற வேண்டுமென்றோ விதிக்கலாம். எனவே நிபந்தனைகளை இருவகையில் விதிக்கலாம். (1) நிபந்தனைகளை முன்னர் விதித்தல். (2) நிபந்தனைகளைப் பின்னர் விதித்தல். முன்னர் விதிக்கப்படும் நிபந்தனைகள் முன் நிபந்தனைகள் (Condition Precedent) என்றும், பின்னர் விதிக்கப் படும் நிபந்தனைகள் பின் நிபந்தனைகள் (Condition Subsequent) என்றும் கூறப்படும். முன் நிபந்தனைகள் கொடை, கொடை பெறுநரைச் சேர்ந்தடையுமுன் நிறைவேற்றப்பட வேண்டியது. பின் நிபந்தனைகள் கொடை, கொடைபெறுநரைச் சேர்ந் தடைந்தபின் நிறைவேற்றப்படவேண்டியது. அப்படி நிறை வேற்றப்படாவிட்டால், சேர்ந்தடைந்த கொடை அவரை விட்டு நீங்கிச், செல்லாதொழியும். முன் நிபந்தனைகள் நிறைவேற்றப் பட்டாலன்றிக் கொடைச் சொத்துகள் கொடைபெறுநரைச் சேர்ந்தடையா. பின் நிபந்தனைகளில் கொடைச் சொத்துகள் கொடைபெறுநரை உடனே சேர்ந்தடைந்து அவர் அந் நிபந்தனைகளை மீறும்வரை அவரோடிருக்கும். நிபந்தனைகள் முன் நிறைவேற்றப்படவேண்டுமா பின் நிறைவேற்றப்பட வேண்டுமா என்பது உயிலின் மொழியையும் விருப்பாவண மளித்தவரின் எண்ணத்தையும் சார்ந்தது. சொத்துகள் உரியவரை சீக்கிரம் சேர்ந்தடைதலைச் சட்டம் ஆதரிக்கின்றது. அதனால் நீதிமன்றங்களும் உயில்களுக்குப் பொருள் கொள்ளும்போது, முன் நிபந்தனைகளைவிடப் பின் நிபந்தனைகட்குச் சாதகமாக உள்ளன. நிபந்தனைகளைப்பற்றி ஐயமெழுமானால், அவற்றைப் பின் நிபந்தனைகளாக யூகித்துக்கொள்ள வேண்டும்.

விருப்பாவணமளித்தவர் உயில்வழிக் கொடைமீது நிபந் தனைகளை விதிக்கலாம். ஆனால், அந் நிபந்தனைகள் நிறை வேற்றப்படக்கூடாததாகவும், சட்ட விரோதமானதாகவும், சமுதாயக் கோட்பாடுகட்கு முரணானதாகவும், திருமணம் செய் வதைப் பொதுவாகக் கட்டுப்படுத்தக்கூடியதாகவும் இருக்கக் கூடாது. நிபந்தனை நிறைவேற்றப்படக்கூடாததானால், கொடை செல்லாது போகுமெனப் பிரிவு 126 கூறுகின்றது.

எடுத்துக்காட்டு :

1. 'ஏ' என்பவர் மணிக்கு 100 மைல்கள் நடக்கவேண்டு மென்ற நிபந்தனையுடன் ஒரு சொத்து உயில்வழிக் கொடை யாகக் கொடுக்கப்பட்டது. இக் கொடை செல்லாது போகும்.

2. 'ஏ' என்பவர் தமது மகளை 'பி' மணந்துகொள்ள வேண்டு மென்ற நிபந்தனையுடன் ரூ. 500/- உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். உயில் உருவாக்கப்பட்ட நாளன்று 'ஏ'-யின் மகள் இறந்துபோயிருந்தால், அக் கொடை செல்லாது போகும். நிபந்தனையினை நிறைவேற்றவியலாத நிலை உயில் உருவாக்கப் படும்போதும் அல்லது அதன் பின்னரும் ஏற்படக்கூடும். நிறை வேற்றவியலாத நிபந்தனையோடு கூடிய உயில்வழிக் கொடை செல்லாது போகும் என்பது பிரிவு 126. இதற்கிடான விதியைச் சொத்துமாற்றுச் சட்டம் பிரிவு 25-ல் காணலாம். இரு விதி களிலும் கூறப்பட்ட நிபந்தனைகள் முன்நிபந்தனைகளே.

முன்நிபந்தனைக் கொடையில், நிபந்தனைகள் நிறைவேற்றக் கூடாததானாலும், தெய்வாதீனமாகவோ, கொடைபெறுநர், கொடையாளி இருவரின் கட்டுக்கடங்காத சூழ்நிலையினாலோ அல்லது கொடையாளியின் செயலினாலோ முன்நிபந்தனைகளை நிறைவேற்ற வியலாவிட்டால் கொடை சேர்ந்ததையாது. மேற் கூறிய முதல் எடுத்துக்காட்டில் கொடைபெறுநர் மணிக்கு 100 மைல்கள் நடக்கவேண்டும் என்பது முன்நிபந்தனையாகும்.

## இராசேந்திரா எ. மிரிநளினி

கொடைபெறுநர் குறிப்பிட்ட ஒரு குளத்தினைத் தோண்ட வேண்டுமென்ற நிபந்தனையின்பேரில் ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டது. உயிலினை உருவாக்கியபின் விருப்பாவண மளித்தவரே அக் குளத்தினைத் தோண்டிவிட்டார். ஆதலால், குறிப்பிட்ட நிபந்தனையை நிறைவேற்றுவது சாத்தியக் கூறற்ற தாகிவிட்டது. அக் கொடை கழிவுறும் எனத் தீர்ப்பளிக்கப் பட்டது.

உயில் உருவாக்கப்பட்ட நாளுக்கு முன்னரே நடைமுறையி லிருக்கும் சட்டம் முன்நிபந்தனைகளை நிறைவேற்றுதலைச் சாத் தியக் கூறற்றதாகச் செய்திருக்குமானால், அந் நிபந்தனை செல்லாது. ஆனால் கொடை செயல்படும்.

நிறைவேற்றப்படவேண்டிய நிபந்தனை, சட்டத்திற்கும் அல்லது நல்லொழுக்கத்திற்கும் முரணானதாக இருப்பின் அந் நிபந்தனையுடன் கொடுக்கப்பட்ட கொடை இல்லாது போகும் (பிரிவு 127).

**எடுத்துக்காட்டு :**

1. 'பி' என்பவர் 'சி' என்பவரைக் கொலை செய்யவேண்டு மென்ற நிபந்தனையின்பேரில் ரூ. 500/-ஐ 'ஏ' என்பவருக்குக் கொடையாகக் கொடுத்தார். இக் கொடை இல்லாததாகிவிடும்.

2. தம் உடன்பிறந்தவரின் மகள் அவளது கணவனை விட்டுப் பிரிந்து வந்துவிட்டால், கொடுக்கப்பட வேண்டுமென ரூ. 5,000/-ஐ 'ஏ' என்பவர் உயில்வழிக் கொடையாக எழுதி வைத்தார். இக் கொடை இல்லாததாகும்.

முதல் எடுத்துக்காட்டு சட்டத்திற்கு முரணானது, இரண்டாம் எடுத்துக்காட்டு நல்லொழுக்கத்திற்கு முரணானது. நல்லொழுக்கம் என்னும் சொல் மத சம்பந்தப்பட்ட செயல்களையும் திருமணத்திற்குத் தடைகள் விதித்தலையும்கூட உள்ளடக்குவதாகும். விதிக்கப்பட்ட நிபந்தனை நியாயமானதாக இருப்பின் அவை செல்லுபடியாகும். உதாரணமாக, 21 வயதுக்கு முன்னர்த் திருமணம் செய்யக்கூடாது அல்லது சிலரின் அனுமதியின்றிச் செய்யக்கூடாது என்ற நிபந்தனைகளை விதிக்கலாம்.

விதிக்கப்பட்ட நிபந்தனைகளை நிறைவேற்றுவதைப் பற்றின பொதுவான கொள்கை யாதெனில், நிபந்தனை முன்நிபந்தனையாயின் அதனை நிறைவேற்றத் தம்மால் இயன்றதையெல்லாம் செய்து முடித்துவிட்டதைக் கொடைபெறுநர் தெளிவாகக் காட்டவேண்டும். 'சிப்ரே' கொள்கைப்படி நிபந்தனைகளை ஏறத்தாழ நிறைவேற்றிவிட்டால் நிபந்தனைகளை முழுமையாக நிறைவேற்றியதாகக் கருதப்படும். இத் தத்துவத்தினைப் பிரிவு 128-ல் காணலாம். உயிலில் கூறப்பட்ட நிபந்தனைகள் கொடைப் பொருள்கள், கொடைபெறுநரை அடையுமுன் நிறைவேற்ற வேண்டியவைகளாக இருப்பின் அவைகளை ஏறத்தாழ நிறைவேற்றிவிட்டால் பூரணமாக நிறைவேற்றியதாகக் கருதப்படும். இதற்கீடான விதியைச் சொத்துமாற்றுச் சட்டம் பிரிவு 26-ல் காணலாம்.

எடுத்துக்காட்டு :

1. 'ஏ' என்பவர் 'பி', 'சி', 'டி', 'இ' என்பவர்களின் இசைவின் பேரில் திருமணம் செய்துகொண்டால் கொடுக்கப்பட வேண்டுமென ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டது. 'ஏ' என்பவர் 'பி'-யின் இசைவினை எழுத்து வாயிலாகப் பெற்றுத் திருமணம் செய்து கொண்டார். அத் திருமணத்திற்கு 'சி'-யும் வந்திருந்தார். 'டி' திருமணத்திற்கு முன்னரே தம்முடைய வாழ்த்துடன் அன்பளிப்பையும் அனுப்பியிருந்தார். திருமணத்தைப்பற்றிய தம் எண்ணத்தை 'ஏ' நேரிடையாகச் சென்று 'இ' என்பவருக்கு அறிவித்தார். அவர் அதற்குத் தடை ஏதும் கூறவில்லை. ஈண்டு 'ஏ' எல்லா நிபந்தனைகளையும் நிறைவேற்றியதாகக் கருதப்படுவார்.

2. 'ஏ' என்பவர் 'பி', 'சி', 'டி' என்பவர்களின் இசைவினைப் பெற்றுத் திருமணம் செய்துகொண்டால் கொடுக்க வேண்டு மென்ற நிபந்தனையின்பேரில் ஓர் உயில்வழிக் கொடை கொடுக் கப்பட்டது. 'டி' இறந்துவிட்டார். 'பி,' 'சி' என்பவர்களின் இசை வைப் பெற்று 'ஏ' திருமணம் செய்துகொண்டார். 'ஏ' நிபந்தனை யைப் பூரணமாக நிறைவேற்றினதாகக் கருதப்படுவார்.

3. 'ஏ' என்பவர் 'பி', 'சி', 'டி' என்பவர்களின் இசைவைப் பெற்றுத் திருமணம் செய்துகொண்டால், கொடுக்கவேண்டு மென்ற நிபந்தனையின்பேரில் ஓர் உயில்வழிக் கொடை கொடுக் கப்பட்டது. 'பி', 'சி', 'டி' மூவரின் வாழ்நாளில் 'பி', 'சி' இருவரின் இசைவை மட்டுமே பெற்று 'ஏ' திருமணம் செய்துகொண்டார். 'ஏ' நிபந்தனையை நிறைவேற்றவில்லை.

4. 'ஏ' என்பவர் 'பி', 'சி', 'டி' என்பவர்களின் இசைவைப் பெற்றுத் திருமணம் செய்துகொண்டால் கொடுக்கவேண்டு மென்ற நிபந்தனையின்பேரில் ஓர் உயில்வழிக் கொடை கொடுக் கப்பட்டது. 'இ'-யை மணந்துகொள்ள 'பி', 'சி', 'டி' மூவரின் நிபந்தனையற்ற இசைவினை 'ஏ' ஏற்றுக் கொண்டார். பின்னர் அம் மூவரும் வழுவி இசைவினை மறுத்தனர். 'ஏ' என்பவர் 'இ'-யை மணந்தார். 'ஏ' நிபந்தனையை நிறைவேற்றினார்.

5. 'ஏ' என்பவர் 'பி', 'சி', 'டி' என்பவர்களின் இசைவைப் பெற்றுத் திருமணம் செய்துகொண்டால் கொடுக்க வேண்டு மென்ற நிபந்தனையின்பேரில் ஓர் உயில்வழிக்கொடை கொடுக் கப்பட்டது. 'பி', 'சி', 'டி' என்பவர்களின் இசைவின்றி 'ஏ' திருமணம் செய்துகொண்டு, பின்னர் அவர்களது இசைவினைப் பெற்றார். 'ஏ' நிபந்தனையை நிறைவேற்றவில்லை.

# 17. உரிமை விரைவுத் தத்துவம்

## (Doctrine of Acceleration)

ஓர் உயில்வழிக் கொடையினை முதலில் ஒருவருக்குக் கொடுத்து, அக் கொடை கழிவுறுமானால், வேறொருவருக்குக் கொடுக்க வேண்டுமெனக் குறிப்பிட்டிருந்தால், விருப்பாவண மளித்தவர் குறிப்பிட்ட முறையிலோ வேறெந்த விதத்திலோ முதல் கொடை கழிவுறுமானால், இரண்டாம் கொடை செயல் படும். இதுவே உரிமை விரைவுத் தத்துவம் எனப்படும். பின்னர்க் குறிப்பிட்ட கொடை விரைந்து சென்று செயல் படுகிறது. இத் தத்துவம் ஜோன்சு எ. வெஸ்ட்கோம் என்னும் ஆங்கில வழக்கைச் சார்ந்தது.

### ஜோன்சு எ. வெஸ்ட்கோம்

(Eq Cases 245)

விருப்பாவணமளித்தவர், தம் மனைவி கருவுற்றிருக்கிறாள் எனக் கருதி, அக் குழந்தைக்கு ஓர் உயில்வழிக் கொடையைக் கொடுத்து, ஒருவேளை அக் குழந்தை 21 வயதினையடையுமுன் இறந்துபோனால் வேறொருவருக்குக் கொடுக்க வேண்டுமென எழுதியிருந்தார். அவரின் மனைவி கருவுற்றிருக்கவில்லை. விருப்பாவணமளித்தவர் குறிப்பிட்டபடி கொடை கழிவுறாமல் வேறு விதத்தில் கழிவுற்றாலும் பின்னர் அளிக்கப்பட்ட கொடை செயல்படும்.

இத் தத்துவத்தினைப் பிரிவு 129-ல் காணலாம். அதற்கீடான பிரிவைச் சொத்துமாற்றுச் சட்டம் பிரிவு 27-லும் காணலாம். பிரிவு 129 கூறுவதாவது: ஓர் உயில்வழிக் கொடையினை முதலில் ஒருவருக்குக் கொடுத்து, அக் கொடை கழிவுற்றால் வேறொருவருக்குக் கொடுக்க வேண்டுமெனக் குறிப்பிட்டிருந்தால் விருப்பாவணமளித்தவர் குறிப்பிட்ட முறையில் முதல் கொடை கழிவுறாமல் வேறுவிதத்தில் கழிவுற்றாலும்கூட வேறொரு

வருக்குப் பின்னர் அளிக்கப்பட்ட கொடை செயல்படும். இப் பிரிவு செயல்பட வேண்டியதெல்லாம் ஒரு சொத்தினை முதலில் ஒருவருக்குக் கொடுத்து, அக் கொடை செயல்படாவிட்டால், அவரையடுத்து அதே சொத்தினை வேறொருவருக்குக் கொடுப்பதாக இருக்கவேண்டும். ஒரே உயிலில் வெவ்வேறான இரு சொத்துகளைத் தனித்தனியாக இரு கொடைபெறுநருக்குக் கொடுத்தலுக்கு இப் பிரிவு பயன்படாது. ஒரு சொத்து உரிமையாளரின்றி இருக்கவியலாது. ஒருவருக்குப்பின் வேறொருவரைச் சென்றடைய வேண்டுமென்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டதே இத் தத்துவம்.

## இராதாபிரசாத் எ. இராணிமணி

(33 Cal. 94)

விருப்பாவணமளித்தவர் தமக்கு ஒரு மகனைத் தத்து எடுத்துக் கொள்ளுமுரிமையைத் தமது விதவைக்கும், உயில் நிறைவேற்றாளர்கட்கும் கொடுத்து, தம் சொத்துகளையும் அம் மகனுக்குக் கொடையாகக் கொடுத்திருந்தார். அப்படித் தத்து எடுக்கும் மகன் விதவையின் வாழ்நாளில் இறந்துபோனால், அக் கொடைச் சொத்துகளைத் தமது மகள்களுக்குக் கொடுக்க வேண்டுமென எழுதிவைத்தார். தத்தெடுத்தது முதலிலிருந்தே செல்லுபடியாகவில்லை. ஆதலால், மகள்களுக்குப் பின்னர்க் கொடுக்கப்பட்ட கொடை விரைந்து செயல்பட்டது.

## Durga Pershed *vs.* Raghunandan (19 own 439)

விருப்பாவணமளித்தவருக்கு ஒரு மனைவியும் வயதுவராத ஒரு மகனும் மகள்களும் இருந்தனர். வயதுவராத மகனுக்குச் சொத்துகளையெல்லாம் உயில்வழிக் கொடையாகக் கொடுத்து, ஒரு வேளை அம் மகன் வயது வருமுன் இறந்துபோனால், தமது மனைவி அச் சொத்துகளை வாழ்நாள்வரை அனுபவித்து அவளுக்குப் பின் மகள்களுக்குக் கொடுக்க வேண்டுமென எழுதி வைத்தார். முதலில் மனைவி இறந்துபோனார். பின்னர் மகனும் வயது வருமுன் இறந்துபோனார். விருப்பாவணமளித்தவர் குறிப்பிட்டபடி கொடை கழிவுறாவிட்டாலும், அவ் உயில்வழிக் கொடை மகள்கட்குச் சென்றடையும் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

## Okhoymoney *vs.* Nilmoney

இவ் வழக்கில் விருப்பாவணமளித்தவர் உயிலினை எழுதும் போது அவரது மனைவி கருவுற்றிருந்தார். அவரது சொத்துகளை

உயில்வழியாகப் பிறக்கவிருக்கும் குழந்தைக்குக் கொடுத்து விதித்த நிபந்தனையாவது : அக் குழந்தை ஆணாகஇருந்தால் முழுச் சொத்தையும் எடுத்துக்கொள்ளலாம். பெண்ணாக இருந்தால் அச் சொத்தில் அவளுக்கு வாழ்க்கைப் படி (Maintenance) மட்டுமே கொடுக்க வேண்டும். பிறந்த ஆண் குழந்தை வயது வருமுன் இறந்துபோனால், அச் சொத்துகள் அவரது சகோதரனுக்குப் போய்ச் சேரவேண்டுமென எழுதிவைத்தார். அவருக்குப் பிறந்தது பெண்குழந்தையே. முன்னரளிக்கப்பட்ட கொடை விருப்பாவணமளித்தவர் குறிப்பிட்ட விதத்தில் கழிவுறாமல் வேறுவிதத்தில் கழிவுற்றாலும் அக் கொடைச் சொத்துகளைப் பெற விருப்பாவணமளித்தவரின் சகோதரனுக்கு உரிமையுண்டு எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

மேற்கண்ட விதிக்கு விலக்குமுண்டு. முன் குறிப்பிடப்பட்ட கொடை குறிப்பிட்ட விதத்தில் கழிவுற்றால் மட்டுமே பின் குறிப்பிடப்பட்ட கொடை செயல்பட வேண்டுமென்ற எண்ணம் உயிலில் தெரிவிக்கப்பட்டிருந்தால், முன் குறிப்பிட்ட கொடை குறிப்பிட்ட விதத்தில் கழிவுற்றாலன்றிப் பின்குறிப்பிட்ட கொடை செயல்படாது (பிரிவு 130). இப் பிரிவு உரிமை விரைவுத் தத்துவத்திற்கு விதிவிலக்காகும். குறிப்பிட்ட விதத்தில் மட்டுமே முதல் கொடை கழிவுற வேண்டுமென்ற எண்ணம் தெரிவிக்கப்பட்டால் அவ் வெண்ணம் செயல்பட அனுமதிக்க வேண்டும்.

## Underwood *vs.* Wing

'ஏ' என்பவர் அவரது மனைவிக்கு ஓர் உயில்வழிக் கொடையைக் கொடுத்தார். ஒருவேளை அவரது வாழ்நாளிலேயே அவரது மனைவி இறந்துபோனால், அச் சொத்துகளை 'பி'-க்குக் கொடுக்க வேண்டுமென்றும் எழுதிவைத்தார். 'ஏ'-யும் அவரது மனைவியும் ஒரு கப்பற் சேதத்தில் இறந்துவிட்டனர். மனைவி 'ஏ'-க்கு முன் இறந்தாரென்று நிரூபிக்க இயலவில்லை. ஆதலால், 'பி'-க்குக்கொடுக்கப்பட்ட கொடை செயல்படாது.

### பின்நிபந்தனைகள்

விருப்பாவணமளித்தவர் உயில்வழிக் கொடையினைக் கொடுக்கையில் பின் நிபந்தனைகட்கு உட்பட்டும் கொடுக்கலாம். கொடைபெறுநர் கொடையினைப் பெற்றபின் குறிப்பிட்ட நிகழ்ச்சி நடைபெறுமேயானால், அக் கொடை அவரினின்று அகன்று வேறொருவரைச் சென்றடையும். கொடை வேறொருவரைச் சென்றடைதல் நிபந்தனையின் தன்மையைச் சார்ந்தது.

இவ் விதியினைப் பிரிவு 131-ல் காணலாம். அதற்கிடான விதியைச் சொத்துமாற்றுச் சட்டம் பிரிவு 28-ல் காணலாம். குறிப்பிட்ட நிச்சயமற்ற நிகழ்ச்சி நடைபெற்றாலோ நடைபெறா விட்டாலோ ஒருவருக்குக் கொடுக்கப்பட்ட கொடைப்பொருள் அவரைவிட்டுப் பிறிதொருவருக்குச் செல்லுமென்ற நிபந்தனை யுடன் ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்படலாம்.

இந் நிபந்தனையின்படி இறுதிக் கொடை, பிரிவுகள் 120 முதல் 127, 129, 130 ஆகியவற்றிற்கு உட்பட்டதாகும் (பிரிவு 131).

எடுத்துக்காட்டு :

1. ஒரு தொகையினை, 'ஏ' என்பவர் 18 வயதையடைந்த வுடன் கொடுக்க வேண்டுமென்றும் அவ் வயதை அடையுமுன் அவர் இறந்துபோனால் 'பி'-க்குக் கொடுக்கவேண்டுமென்றும் ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டது. பதினெட்டு வயதுக்குள் இறந்துபோனால், 'பி'-க்குச் சென்றடைய வேண்டு மென்ற நிபந்தனைக்குட்பட்டு 'ஏ'-கொடையின்பேரில் சேர்ந் தடையுரிமையைப் பெறுவார்.

மேற்கண்டவாறு கொடை பிறிதொருவரைச் சென்றடையக் குறிப்பிட்ட பின்நிபந்தனைகள் எழுத்தின்படி முழுவதும் நிறை வேற்றப்பட வேண்டும். இதற்கான விதியைப் பிரிவு 132-ல் காணலாம். அதற்கிடாகச் சொத்துமாற்றுச் சட்டம் பிரிவு 29-ல் காணலாம். முன்நிபந்தனைகள் ஏறத்தாழ நிறைவேற்றப் பட்டால் முழுவதும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ள வேண்டு மென்று பொருள் கொள்ளும் பிரிவிலிருந்து இப் பிரிவு முரண்படு கிறது. விதிக்கப்பட்ட நிபந்தனை பின்நிபந்தனையாயின் கொடையினைக் கொடைபெறுநரிடமிருந்து பறிக்கக் குறிப்பிட்ட நிகழ்ச்சி நடைபெற்றே ஆகவேண்டும்.

எடுத்துக்காட்டு :

1. 'ஏ' என்பவருக்கு ஒரு நிபந்தனையுடன் ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டது. நிபந்தனையாவது 'பி', 'சி', 'டி' என்பவர்களின் இசைவின்றி அவர் திருமணம் செய்துகொண்டால் 'இ'-க்கு அக் கொடையினைக் கொடுக்க வேண்டுமென்பதே. 'டி'-இறந்துபோனார். 'பி', 'சி' இருவரின் இசைவின்றி 'ஏ' திருமணம் செய்துகொண்டால் 'இ'-க்குக் கொடுக்கப்பட்ட கொடை செயல்படாது.

2. 'பி' என்பவரின் இசைவின்றித் திருமணம் செய்துகொண்டால், கொடை 'சி'-க்குச் செல்லவேண்டுமென்ற நிபந்தனையுடன் 'ஏ' என்பவருக்கு ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டது. 'பி'-யின் இசைவுபெற்று 'ஏ' திருமணம் செய்துகொண்டார். பின்னர் அவர் விதுரனாகிய 'பி'-யின் இசைவின்றி மறுமணம் செய்துகொண்டார். 'சி'-க்குக் கொடுக்கப்பட்ட கொடை செயல்படாது.

முதல் எடுத்துக்காட்டில் பின்நிபந்தனை முழுவதும் நிறைவேற்றப்படவில்லை. மூவரின் இசைவின்றித் திருமணம் செய்துகொண்டால்தான் கொடை 'இ'-க்குச் செல்லும். ஈண்டு இருவரின் இசைவின்றித்தான் 'ஏ' திருமணம் செய்துகொண்டார். இரண்டாம் எடுத்துக்காட்டில் நிபந்தனை நிறைவேற்றப்பட்டதால் இறுதிக்கொடை செயல்படாது.

இறுதிக்கொடை செல்லாதுபோதல் முதற் கொடையினைப் பாதிக்காது (பிரிவு-133). இதற்கிடான விதியைச் சொத்து மாற்றுச் சட்டம் பிரிவு 30-ல் காணலாம். இவ் விதியினைப் பிரிவுகள் 126, 127 உடன் ஒப்பிட்டால், நிபந்தனைகள் சாத்தியக் கூறற்றதாயினும், சட்டத்திற்கு முரண்பட்டாலும், நல்லொழுக்கத்திற்கு முரண்பட்டாலும் முன்நிபந்தனைகள் செல்லாது போவதோடு கொடையும் செல்லாதுபோகும். ஆனால் பின்நிபந்தனையாயின் நிபந்தனைகள் தள்ளப்பட்டுக் கொடை செல்லுபடியாகும்.

**எடுத்துக்காட்டு :**

1. குறிப்பிட்ட நாளில் 'ஏ' மணிக்கு 100 மைல்கள் நடக்காவிட்டால் 'பி'-க்குக் கொடுக்க வேண்டுமென்ற நிபந்தனையுடன் ஒரு சொத்து 'ஏ'-யின் வாழ்நாள் பாத்தியமாக உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டது. நிபந்தனை சாத்தியக் கூறற்றது. ஆகையால், செல்லாது. நிபந்தனைகள் விதிக்கப்படாததுபோல், 'ஏ' சொத்தினை எடுத்துக்கொண்டார்.

2. 'ஏ' தம் கணவனைப் புறக்கணிக்காவிட்டால் 'பி' க்குக் கொடுக்க வேண்டுமென்ற நிபந்தனையோடு 'ஏ'-க்கு ஒரு சொத்தின் பேரில் வாழ்நாள் அனுபவப் பாத்தியம் கொடுக்கப்பட்டது. இந் நிபந்தனை நல்லொழுக்கத்திற்கு முரணானதால் நிபந்தனைகள் விதிக்கப்படாததுபோல் 'ஏ' சொத்தினைத் தம் வாழ்நாளுக்குப் பெற உரிமையடைகிறார்.

3. பண்ணை ஒன்று 'ஏ'-யின் வாழ்நாள் அனுபவப் பாத்தியமாகவும் அவர் திருமணம் செய்துகொண்டால், அப் பண்ணையை

'பி'-யின் மூத்த மகனுக்கு வாழ்நாள் அனுபவப் பாத்தியமாகவும் கொடுக்க வேண்டுமென்ற நிபந்தனையுடன் உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டது. விருப்பாவணமளித்தவர் இறந்த அன்று 'பி'-க்கு மகன்களே இல்லை. பிரிவு 105-ன்படி பின்னர்க் கொடுக்கப்பட்ட கொடை செல்லாது. 'ஏ' தம் வாழ்நாள்வரை பண்ணையை அனுபவிக்க உரியவர்.

கொடையினைப் பெற்றுக்கொண்டு நிறைவேற்ற வேண்டிய நிபந்தனையாயின் பின் நிபந்தனைகள் என்றும், அந் நிபந்தனைகள் நிறைவேற்றப்படாவிட்டாலோ, குறிப்பிட்ட நிகழ்ச்சி நடைபெறாவிட்டாலோ கொடை அவரைவிட்டு விலகிப் பிறிதொருவரைச் சென்றடையும் என்றும் கண்டோம். பிறிதொருவருக்குச் செல்லாமல் பின் நிபந்தனைகளோடு மட்டுமே கொடையினைக் கொடுக்கவியலும். இவ்விதியைப் பிரிவு 134-லும், அதற்கீடான விதியைச் சொத்துமாற்றுச் சட்டம் விதி 31-லும் காணலாம். குறிப்பிட்ட நிச்சயமற்ற நிகழ்ச்சி நடைபெற்றாலோ நடைபெறாவிட்டாலோ கொடை செயலிழக்கும் என்ற நிபந்தனையை உடன்சேர்த்து ஓர் உயில்வழிக் கொடையைக் கொடுக்கலாம்.

**எடுத்துக்காட்டு :**

(1) பண்ணை ஒன்றினை 'ஏ'-யின் வாழ்நாள் பாத்தியமாக உயில்வழிக் கொடையாகக் கொடுத்து, பண்ணையில் சில மரங்களை அவர் வெட்டுவாரேயானால், கொடை செயலிழக்கும் என்ற நிபந்தனையும் விதிக்கப்பட்டது. 'ஏ' பண்ணையில் மரங்களை வெட்டினார். பண்ணையின்பேரில் இருந்த வாழ்நாள் அனுபவப் பாத்தியத்தை அவர் இழந்துவிட்டார்.

(2) பண்ணையொன்றினை 'ஏ'-க்கு உயில்வழிக் கொடையாகக் கொடுத்து, அவர் உயிலில் கூறப்பட்ட உயில் நிறைவேற்றாளர்களின் இசைவின்றி 25 வயதுக்குள் திருமணம் செய்து கொண்டால் பண்ணை அவருக்குச் சொந்தமாகாது என்ற நிபந்தனையும் விதிக்கப்பட்டது. 'ஏ' நிறைவேற்றாளரின் இசைவின்றி 25 வயதுக்குள் திருமணம் செய்துகொண்டார். பண்ணையின்பேரில் அவருக்கிருந்த உரிமைகளனைத்தும் அவரைவிட்டு நீங்கின.

கொடையுடன் விதிக்கப்பட்ட நிபந்தனைகள் சட்டப்படி செயல்படுத்தக் கூடியனவாக இருக்கவேண்டும். அப்போதுதான் அந் நிபந்தனைகள் நிறைவேற்றப்படாவிட்டால், கொடைபெறுநரைச் சேர்ந்தடைந்த உரிமைகள் அவரைவிட்டு நீங்கும். இக் கூற்றினைப் பிரிவு 135-லும், சொத்துமாற்றுச் சட்டம் பிரிவு 32-லும் காணலாம்.

கொடைபெறுநர் நிபந்தனைகளை நிறைவேற்றக் காலவரையேதும் குறிப்பிடப்படவில்லை என்பதற்காக அந் நிபந்தனைகளைச் சாத்தியக் கூறற்றதாகவோ, நிபந்தனைகளை நிறைவேற்றுதலை நீண்ட நாள்களுக்குக் காலங் கடத்தவோ இயலாது. அதற்கான விதியைப் பிரிவு 136-ல் காணலாம். அதற்கீடான விதியைச் சொத்துமாற்றுச் சட்டம் பிரிவு 33-ல் காணலாம்.

கொடைபெறுநர் குறிப்பிட்ட செயலை நிறைவேற்ற வேண்டும்; அப்படி நிறைவேற்றாவிட்டால், கொடைப்பொருள் வேறொருவரைச் சென்றடையும், அல்லது கொடை செயல்படாதென்ற நிபந்தனையுடன் ஓர் உயில்வழிக் கொடை கொடுக்கப்பட்டு, நிபந்தனையை நிறைவேற்றக் காலவரையும் குறிப்பிடாமலிருந்து, கொடைபெறுநரின் செயலால் நிபந்தனைகள் நிறைவேற்றுதல் சாத்தியக்கூறாகப்பட்டாலோ, காலவரையின்றிக் காலந் தாழ்த்தப்பட்டாலோ அவர் அந் நிபந்தனைகளை நிறைவேற்றாமல் இறந்துவிட்டதாகக் கருதிக் கொடை செயல்படும்.

**உதாரணம் :**

(1) 'ஏ' என்பவர் இராணுவத்தில் சேராவிட்டால் 'பி'-க்குக் கொடுக்க வேண்டுமென்ற நிபந்தனையுடன் 'ஏ' என்பவருக்கு ஓர் உயில்வழிக்கொடை கொடுக்கப்பட்டது. 'ஏ' மதகுருவாகிவிட்டார். அதனால், அவர் குறிப்பிட்ட நிபந்தனையை நிறைவேற்றவியலாது. 'பி' கொடையினைப் பெறத் தகுதி பெறுகிறார்.

(2) 'ஏ' என்பவருக்கு உயில்வழிக்கொடையொன்று கொடுக்கப்பட்டு விதிக்கப்பட்ட நிபந்தனையாவது, அவர் 'பி'-யின் மகளைத் திருமணம் செய்துகொள்ளாவிட்டால் கொடை செயலிழக்கும் என்பதாகும். 'ஏ' அன்னியரைத் திருமணம் செய்துகொண்டார். அதனால், நிபந்தனையை நிறைவேற்றுவதைக் காலவரையின்றித் தள்ளிப்போட்டார். கொடை செயலிழக்கும்.

குறிப்பிட்ட காலவரைக்குள் கொடைபெறுநர் ஒரு செயலைச் செய்யவேண்டுமென்று முன் நிபந்தனையாகவோ, பின் நிபந்தனையாகவோ விருப்பாவணத்தில் குறிப்பிட்டிருந்தால், அந்நிபந்தனைகளை அவர் அறிந்திருந்தாலும், அறிந்திராவிட்டாலும் குறிப்பிட்ட காலவரைக்குள் அச் செயல் செய்து முடிக்கப்பட வேண்டும். மோசடியினால் அச் செயலை நிறைவேற்றுதல் தடைபட்டாலன்றிக் குறிப்பிட்ட காலவரைக்குள் செய்து முடிக்கப்பட வேண்டும். அந் நிபந்தனைகளை அறியவில்லை எனக் கூறிக்

கொடைபெறுநர் தப்பிக்கவியலாது. இக் கருத்தினைப் பிரிவு 127-ல் காணலாம். அதற்கீடாக, சொத்துமாற்றுச் சட்டம் பிரிவு 34-ல் காணலாம். கொடைபெறுநர் குறிப்பிட்ட காலவரைக்குள் ஒரு செயலைச் செய்யவேண்டுமென்று விருப்பாவணம் கூறுமே யானால், கொடையினைப் பெற்று அனுபவிக்கு முன்னர் நிறை வேற்றப்படவேண்டிய நிபந்தனையாகவோ, கொடையினைப் பெற்றபின் நிறைவேற்றப்படாததால், கொடைப்பொருளை வேறொருவருக்குக் கொடுக்க வேண்டுமென்றோ, கொடை செயல்படாது என்ற நிபந்தனையாகவோ இருப்பின் மோசடியினால் அச் செயல் நிறைவேற்றப்படுவது தடைபட்டாலன்றிக் குறிப்பிட்ட காலவரைக்குள் அச்செயல் செய்து முடிக்கப்பட வேண்டும். அப்படி மோசடியினால் ஏற்பட்ட காலதாமதத்தினை ஈடுகட்டத் தேவையான அதிகப்படியான காலம் கூட்டித் தரப் படும்.

**கொடையினை அனுபவித்தலைப்பற்றிய நிபந்தனைகள்**

ஒருவர் ஒரு சொத்தினைப் பராதீனம் (alienate) பண்ணும் போது, பெறுநர் அச் சொத்தினை மாற்றுதல் செய்வதைத் தடை செய்ய நிபந்தனைகள் விதித்தால், சொத்து மாற்றுச் சட்டம் பிரிவு 10-ன்படி அத் தடைகள் செல்லாதுபோகும். அதுபோன்றே உயில்வழிக் கொடைகளிலும் கொடைபெறுநர் கொடைச் சொத்துகளைக் குறிப்பிட்ட விதத்தில்தான் பயன்படுத்தவேண்டு மென்று உயிலில் குறிப்பாணை இருப்பின், அக் குறிப்பாணை செல்லாது. இக் கூற்றினைப் பிரிவு 138-ல் காணலாம். அதற் கீடாகச் சொத்துமாற்றுச் சட்டம் விதி 11-ல் காணலாம்.

பிரிவு 138 கூறுவதாவது : ஒரு சொத்தினை முழுமையாக உயில்வழிக் கொடையாகக் கொடுத்து, அதனைக் குறிப்பிட்டபடி தான் பயன்படுத்த வேண்டும், அல்லது அனுபவிக்க வேண்டு மென்று குறிப்பாணையும் விருப்பாவணத்திலிருந்தால், விருப் பாவணத்தில் குறிப்பாணை ஏதும் இல்லாததுபோல் கொடை பெறுநர் அச் சொத்தினைப் பெறத் தகுதியுடையவர்.

உயில்வழிக் கொடை முழுமையாக இல்லாவிட்டால், இவ் விதியினைப் பயன்படுத்த முடியாது. முழுமையாக என்பது பூரண உரிமை மாற்றத்தைக் குறிப்பிடும் ; பகுதி உரிமை மாற்றங்கட்குச் செல்லாது. அது போன்றே வாழ்நாள் அனுபவப் பாத்திய உயில் வழிக் கொடைகட்கு இவ் விதி பயன்படாது. இவ் விதியில் கண்ட சொத்து என்னும் சொல் அசையும் சொத்துகள், அசையாச் சொத்துகள் இரண்டையுமே சேர்த்துக் குறிக்கும். பயன்படுத்தல்,

அனுபவித்தல் என்னும் சொற்கள் சொத்தினைச் செலவிடு தலையும் மாற்றுதல் செய்தலையும், பராதீனம் செய்தலையும் குறிக்கும்.

சொத்துகளை முழுமையாகக் கொடுத்துவிட்டு அதனுடன் முரணான நிப்ந்தனையும் விதித்தால் நிபந்தனை செல்லாது.

**எடுத்துக்காட்டு :**

(1) விருப்பாவணமளித்த ஒருவர் தம்முடைய சொத்தில் ஒரு பகுதியைத் தம்முடைய மகனுக்கு உயில்வழிக் கொடையாகக் கொடுத்து விதித்த நிபந்தனை யாதெனில், அம் மகன் திருமண மாகாமலோ, வழித்தோன்றல்களின்றியோ இறந்து விட்டால், அப் பங்கு மகள்களுக்குச் செல்லவேண்டுமென எழுதிவைத்தார். மகன் அப் பங்கினைப் பூரணமாகப் பெற்றுக்கொள்வார். நிபந் தனைகள் செல்லா.

(2) விருப்பாவணமளித்த ஒருவர் அவரது சொத்துகளை அவரது இரு மகள்களுக்குச் சொந்தமாகக் கொடுத்து, அவர் களுக்குப்பின் அவர்களது மகள்களுக்குக் கொடுக்கவேண்டுமென எழுதிவைத்தார். அவரது மகள்கள் சொத்துகளைப் பூரணமாக பெற்றுக்கொள்வார்கள் (பிராதாப்சந்த் எ. மக்கம்).

இந்தியச் சட்டத்தில் ஒரு சொத்தினை மாற்றும்போதோ, உயில்வழிக் கொடையாகக் கொடுக்கும்போதோ அச் சொத்தி னைப் பராதீனம் செய்வதிலும் அல்லது மாற்றுதல் செய்வதிலும் தடைகள் ஏதும் விதிக்கப்பட்டால் தடைகள் செல்லா. ஆனால், ஆங்கிலச் சட்டத்தில் பகுதியளவான தடையினை (partial restraint) விதிக்கலாம்.

## கொடைபெறுநரின் பயனுக்காகக் கொடையினை அனுபவித்தலின் பேரில் நிபந்தனைகள் விதித்தல்

விருப்பாவணமளித்தவர் உயில்வழிக் கொடைச் சொத்து களைப் பூரணமாகக் கொடுத்து, கொடைபெறுநரின் பயனுக்காக அச் சொத்தினை அவர் அளவோடுதான் அனுபவிக்கவேண்டு மென்ற நோக்கத்தோடு நிபந்தனை விதித்தால், அந் நோக்கம் நிறைவேறாவிட்டாலும் கொடைபெறுநர் நிபந்தனைகளற்றது போல் கொண்டு அக் கொடையினைப் பூரணமாகப் பெற்றுக் கொள்வார். இவ் விதியினைப் பிரிவுகள் 139, 140 ஆகியவை களில் காணலாம். இவற்றிற்கீடான விதியை ஆங்கிலச் சட்டத் தில் லாசன்ஸ் எ. டயர்னி (Lassence *vs.* Tierney) என்ற வழக்கில் கண்ட விதியில் காணலாம்.

பிரிவு 139 கூறுவதாவது : விருப்பாவணமளித்தவர் தம்முடைய சொத்துகளினின்று ஒரு பகுதியைப் பிரித்தெடுத்து அதனை உயில்வழிக் கொடையாகப் பூரணமாகக் கொடுத்துக், கொடைபெறுநர் குறிப்பிட்ட பயனையடையும் பொருட்டு அதனை அவர் அனுபவித்தலைக் கட்டுப்படுத்திட நிபந்தனைகள் விதித்திருந்தால், கொடைபெறுநர் அப் பயனையடைய முடியாவிட்டாலும் நிபந்தனைகளற்றதுபோல் அச் சொத்து அவருக்குச் சொந்தமாகும்.

உதாரணமாக, ஒருவர் தம்முடைய எஞ்சிய சொத்துகளைத் தம்முடைய மகள்களுக்கிடையே சமபாகமாகப் பிரித்து உயில் வழிக் கொடையாகக் கொடுத்து அதனை அவர்கள் வாழ்நாள் வரை அனுபவித்து அவர்கட்குப் பின்னர் அவர்களது பிள்ளைகட்குக் கொடுக்கவேண்டுமென எழுதிவைத்தார். எல்லா மகள்களும் திருமணம் ஆகாமலே இறந்துபோயினர். ஒவ்வொரு மகளின் பிரதிநிதிகளும் அந்தந்த மகளின் பங்கினைப் பெறலாம்.

பிரிவு 140 கூறுவதாவது : விருப்பாவணமளித்தவர் தம்முடைய சொத்துகளினின்று பிரிக்காமலும் பூரண உரிமைகளைக் கொடுக்காமலும் குறிப்பிட்ட நோக்கோடு ஒரு சொத்தினை உயில் வழிக் கொடையாகக் கொடுத்து உயிலில் கண்ட அந்நோக்கம் நிறைவேறாவிட்டால், அச் சொத்து விருப்பாவணமளித்தவருக்குச் சொந்தமான சொத்தாகவே இருக்கும்.

**உதாரணம் :**

'ஏ'என்பவர் தம்முடைய பொறுப்புரிமையருக்குக் கொடுத்த குறிப்பாணையாவது : தம்முடைய சொத்துகளைக் குறிப்பிட்ட வழியில் முதலீடு செய்து, அதனின்றுவரும் வருவாயைத் தமது மகனுக்கு வாழ்நாள்வரை கொடுத்து, அவனுக்குப் பின் அம் மூலதனத்தை அவனது பிள்ளைகட்குப் பிரித்துக் கொடுக்க வேண்டுமென எழுதிவைத்தார். பிள்ளைகளின்றி மகன் இறந்து போனார். மகனுக்குப் பிறகு அச் சொத்து விருப்பாவணமளித்தவரைச் சேரும்.

பிரிவு 139-ம், 140-ம் இணைந்து செல்லக்கூடியவை. ஒரு சொத்துப் பிரிக்கப்பட்டுப் பூரணமாக உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டால், அக் கொடை பிரிவு 139-ன்கீழ் வரும். அது கொடை பெறுநருக்குச் சொந்தமாகும். ஒரு சொத்துப் பிரிக்கப்படாமல், பூரணமாகக் கொடுக்கப்படாமல் வாழ்நாள் பாத்தியமாகக் கொடுக்கப்பட்டால், பிரிவு 140-ன்கீழ் வரும். இக் கொடை விருப்பாவணமளித்தவரின் சொத்தாகவே இருக்கும்.

இவ்விரண்டு பிரிவுகளையும் ஒன்றுசேர்த்து, தன்னகத்தே கொண்டதுதான் ஆங்கில விதியான லாசன்ஸ் எ. டயர்னி என்ற வழக்கில் கண்ட விதி. ஆங்கில விதியினின்றுதான் இந்தியச் சட்டம் உருவாக்கப்பட்டது. ஆங்கில விதியினை வில்லியம் என்பவர் எழுதிய 'நிறைவேற்றாளர்கள்' என்ற புத்தகத்தின் 10ஆம் பதிப்பு, 1,034 ஆம் பக்கத்தில் காணலாம். ஆங்கில விதி 'Administrator General of Bengal *vs.* Apcar.' என்ற இந்திய வழக்கில் முதலில் பயன்படுத்தப்பட்டது. அவ் வழக்கில் விருப் பாவணமளித்தவர் தமது பேரப்பிள்ளைகட்குக் கொடைகளைக் கொடுத்து விதித்த குறிப்பாணையாவது : கொடையினின்று வரும் வருவாயினின்றும் அவர்கள் படிக்கவைக்கப்படவேண்டும்; பின்னர் 21 வயதையடைந்தவுடன் அவ் வருவாயினை அவர் களிடமே கொடுத்துவிட வேண்டும்; அவர்கட்குப் பின் அவர்களது விதவைகள் அவ் வருவாயினை அனுபவிக்க வேண்டும்; அவர்களுக் குப் பின்னர்ப் பேரன்களின் பிள்ளைகள் அச் சொத்து முழு வதையும் பூரணமாக எடுத்துக் கொள்ளலாமென எழுதிவைத் தார். பேரப் பிள்ளைகட்குக் கொடுக்கப்பட்ட கொடை பூரணமானது. பின்னர்க் குறிப்பிட்ட குறிப்புகள் கொடை பெறு நருக்குக் கொடை பயன்பட வேண்டுமென்ற நோக்கோடு எழுதப் பட்டவையெனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

# 18. உயில் நிறைவேற்றாளருக்கு அளிக்கப்படும் உயில்வழிக் கொடை (பிரிவு 141)

உயில் நிறைவேற்றாளருக்கு அளிக்கப்படும் கொடையினைப் பற்றிப் பிரிவு 67-ல் கண்டோம். நிறைவேற்றாளர் வேறுபட்ட நிலையில் உயிலுக்குச் சாட்சியாகக் கையொப்பமிட்டால், அவருக்குக் கொடுக்கப்பட்ட கொடை செல்லாது செயலிழக்கிறது. ஈண்டு அவருடைய சொந்தத் தகுதியில் நிறைவேற்றாளர் என்ற நிலையில் அவருக்கு அளிக்கப்படும் கொடையினைக் காண்போம்.

ஒருவர்மீது ஏற்பட்ட தனிப்பட்ட மதிப்பின் காரணமின்றி, நிறைவேற்றாளர் என்ற தகுதியில் உயில்வழிக் கொடையொன்று அவருக்குக் கொடுக்கப்பட்டால், அக் கொடையினை அவர் பெறுவது நிறைவேற்றாளரின் பொறுப்பினை ஏற்றுக்கொள்ளுதலைச் சார்ந்தது. உயிலினை நிரூபித்தாலன்றி அக் கொடையினை அவர் பெறவியலாது; அல்லது நிறைவேற்றாளராகப் பணியாற்றத் தமது எண்ணத்தினைத் தெரிவிக்க வேண்டும். இது ஒரு நிபந்தனைக் கொடையாகும். நிபந்தனையினை, கொடையினைப் பெறுமுன்னர் நிறைவேற்ற வேண்டும். அப்படி நிறைவேற்றாவிட்டால், அக் கொடையினை அவர் பெற முடியாது. அவர் மேற்கொண்ட பிரயாசைகளுக்கு ஈடாகக் கொடுக்கப்படுவதே அக் கொடையின் முக்கிய நோக்கம். அப் பொறுப்பினை ஏற்க அவர் மறுத்தால் அக் கொடையினைப் பெறத் தகுதியில்லை என்பதாகும்.

உயிலினை நிரூபிக்க வேண்டுமென்பது கட்டாயமான நிபந்தனையன்று. அவர் தமது செயலின்மூலம் நிறைவேற்றாளரின் பொறுப்பினை ஏற்கச் சம்மதிக்கிறார் என்று தெரிவித்தலே போதும். சொத்துகளை நிருவகிக்கும் உண்மையான எண்ணமின்றி ஆனால், உயிலினை மெய்ப்பித்த செயல்மட்டும் அவருக்கு

அளிக்கப்படும் கொடையினைப் பெறப் போதாது. ஏனெனில், உயிலினை உருவாக்கியவர் அவரில் கொண்டிருந்த முழு நம்பிக்கையினையும் தகர்த்துவிட்டார். சொத்துகள் முழுவதுமாக நிருவகிக்கப்படுமுன்னர் எப்போது வேண்டுமானாலும நிறைவேற்றாளர் உயிலை மெய்ப்பிக்கலாம். நிறைவேற்றாளர் வெளி நாட்டிலிருந்து, அவரது பதிலாள் நியமன அதிகாரம் பெற்ற ஒருவர் சொத்துகளை நிருவகித்திருந்தால் உயிலினை நிரூபிக்காமலே அந் நிறைவேற்றாளர் இறந்துபோனால், அவர் நிறைவேற்றாளரின் பொறுப்பை ஏற்கும் எண்ணத்தினைப் போதுமான அளவிற்குச் செயல்படுத்திவிட்டார். ஆதலால், அவருக்குக் கொடுக்கப்பட்ட கொடையினைப் பெறத் தகுதி பெற்றவராவார் என லூயிஸ் எ. மத்யூஸ் என்னும் வழக்கில் தீர்ப்பு அளிக்கப்பட்டது.

நிறைவேற்றாளராகப் பணியாற்றத் தமது எண்ணத்தினைக் காட்ட வேண்டுமென்ற சொற்கள் இராஜம் எ. பங்கஜம் (AIR. 1944 Mad. 375) என்ற வழக்கில் ஆராயப்பட்டன. இவ் வழக்கில் உயிலினை உருவாக்கியவர் 'ஆர்' என்னும் தமது மருமானுக்கு நிறையக் கொடையினைக் கொடுத்து, உயிலில் பின்னர்ச் சொல்லப்பட்ட பகுதியில் வேறு மருமானோடு 'ஆர்' ஐயும் சேர்த்து நிறைவேற்றாளராக நியமித்திருந்தார். நிறைவேற்றாளர் என்ற தகுதியில் இறந்துபோனவரின் சொத்துகளை மதிப்பிட அவரது வீட்டிற்குப் போனபோது, இறந்தவரின் மனைவி அதனை எதிர்க்கவே, அவர் போய்விட்டார். பின்னர்க் குடும்பத்தில் ஏற்படும் அதிருப்தியைத் தவிர்க்கும் பொருட்டு நிறைவேற்றாளரின் பொறுப்பினைக் கைவிட்டுவிடத் தீர்மானித்தார். அவர் தாம் நிறைவேற்றாளராகப் பணிசெய்யும் எண்ணத்தினைச் செயல்படுத்தவில்லை எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

# 19. குறித்துரைக்கப்பட்ட கொடைகள் (பிரிவு 142)

## (Of Specific Legacies)

லெகசி எனப்படும் உயில்வழிக்கொடை யாதென இச் சட்டம் பொருள் விளக்கம் கொடுக்கவில்லை. ஓர் உயில் மூலமாகக் கொடையாகக் கொடுக்கப்படும் சொத்துகளைப் பொதுவாக ஆங்கில மொழியில் 'பிகுவஸ்ட் அல்லது லெகசி' (Bequest or Legacy) எனக் குறிப்பிடப்படும் இவ்விரு சொற்களும் மாறி மாறிப் பயன்படுத்தப்படும். இரண்டிற்குமுள்ள பாகுபாடு மிக நுண்ணியது. ஆதலால் உயில்வழியாகக் கொடுக்கப்படும் எந்தக் கொடையினையும் இவ்விரு சொற்களும் குறிக்கும்.

பலவகையான கொடையின் தன்மையினைக் கொண்டு கொடைபெறுநரின் உரிமைகளையும் நிருணயிக்கலாம். கொடையளிப்பவரின் உரிமையே கொடையின் தன்மையினை நிருணயிக்கும். உயில்வழிக் கொடைகள் மூன்று வகைப்படும். அவைகளாவன:

1. பொதுத் தன்மைத்தான உயில்வழிக் கொடைகள் (General Legacies)
2. குறித்துரைக்கப்பட்ட உயில்வழிக் கொடைகள் (Specific Legacies)
3. சுட்டிக் காட்டும் உயில்வழிக் கொடைகள் (Demonstrative Legacies)

### 1. பொதுத் தன்மைத்தான உயில்வழிக் கொடைகள்

இக் கொடையினைப் பொருளாகவோ, பணமாகவோ கொடுக்கலாம். கொடையளிப்பவரின் சொந்தச் சொத்துகளினின்றுதான் கொடுக்க வேண்டுமென்றில்லை; வேறு சொத்துகளினின்றும் கொடுக்கலாம். எடுத்துக்காட்டாக, என்னுடைய வைரமோதிரத்தைக் கொடையாகக் கொடுக்கிறேன் என்று வைத்துக்கொள்வோம். ஏதாவதொரு வைரமோதிரத்தைக்

கொடுப்பதன்மூலம் இக் கொடையினை நிறைவேற்றலாம். ஆதலால் இது பொதுத் தன்மைத்தான உயில்வழிக் கொடை. பொதுத் தன்மைத்தான உயில்வழிக்கொடையென்பது விருப் பாவணமளித்தவரின் குறிப்பிட்ட சொத்துகளன்றி மொத்தச் சொத்தினின்று கொடுக்கப்படும் கொடையாகும்; கொடைக் கென ஒதுக்கி வைக்கப்பட்ட சொத்தோ, எளிதில் கண்டு கொள்ளக்கூடிய சொத்தோ அன்று.

இவ்வகைக் கொடையினைப் பற்றிய இந்தியச் சட்டத்தினைப் பிரிவு 171-ல் காணலாம். குறிப்பிடப்படாமல் கொடையாகக் கூறப்பட்டிருந்து, அப் பொருள் அவரது வசத்திலில்லாமலிருந்து, அதனை வாங்குவதற்குப் போதுமான சொத்துமிருந்தால் உயிலின் நிறைவேற்றாளர் அதனை வாங்கிக் கொடைபெறுநருக்குக் கொடுக்கவேண்டும்.

## 2. குறித்துரைக்கப்பட்ட உயில்வழிக் கொடைகள்

இவ்வகைக் கொடைப்பொருள்கள் விருப்பாவணமளித்தவ ரின் சொத்தில் குறிப்பிட்ட பகுதியாகும். அவற்றினை அவரது ஏனைய சொத்துகளினின்று எளிதில் கண்டுகொள்ளவியலும். சொல்லப்பட்ட விவரங்களைக்கொண்டு எளிதில் கண்டுகொள் ளக்கூடியது. மேலும், குறிப்பிட்ட கொடை பெறுநருக்கென்று பொதுவான சொத்தினின்று ஒதுக்கி வைக்கப்பட்டது.

எடுத்துக்காட்டாக, 'சி' எனக்கு அன்பளிப்பாகக் கொடுத்த வைரமோதிரத்தை 'பி'க்குக் கொடையாகக் கொடுக்கிறேன் என்று 'ஏ' எழுதி வைத்திருத்தல். குறிப்பிட்ட பொருளைக் கொடுப்பதன் மூலமே அக் கொடையினை நிறைவேற்றவியலும். ஒரு கொடை குறித்துரைக்கப்பட்ட உயில்வழிக் கொடையா, அல்லதா என்று தெரிந்துகொள்ளப் பின்வரும் நிபந்தனைகள் தேவை.

(1) கொடைப்பொருள் விருப்பாவணமளித்தவரின் சொத்து களினின்று கொடுக்கப்பட வேண்டும்.

(2) அப் பொருள் ஏனைய பொருள்களினின்று எளிதில் கண்டு கொள்ளக் கூடியதாக இருக்க வேண்டும்; மற்றவைகளினின்று பிரித்து வைக்கப்பட்டிருக்க வேண்டும்.

(3) அப் பொருள் விருப்பாவணமளித்தவரின் மொத்தச் சொத்துகளாகவோ எஞ்சிய சொத்துகளாகவோ இருக் கக் கூடாது.

(4) அப் பொருள் எந்த நிலையிலுள்ளதோ அதே நிலையில் பெற்றுக்கொள்ளப்படவேண்டும்.

**பொதுத் தன்மைத்தான உயில்வழிக் கொடைக்கும் குறித்துரைக்கப் பட்ட உயில்வழிக் கொடைக்கும் உள்ள வேறுபாடுகள்**

(1) விருப்பாவணமளித்தவரின் சொத்தினின்று அவரது ஈமச் சடங்குகளுக்கான செலவினையும் கடன் தொகைகளையும், குறித்துரைக்கப்பட்ட உயில்வழிக் கொடைகளையும் கொடுத்த பின்னர் எஞ்சிய சொத்துகள் பொதுத்தன்மைத்தான உயில்வழிக் கொடைகளை முழுவதுமாகக் கொடுக்கப் போதாவிட்டால் அக் கொடைகள் விகிதாசாரத்தில் குறைத்துக் கொடுக்கப்படும். குறிப்பிட்ட பொருள் விருப்பாவணமளித்தவரின் வசத்தில் இருக்கும்வரை குறித்துரைக்கப்பட்ட உயில் வழிக் கொடைகள் குறைவின்றிக் கொடுக்கப்பட வேண்டும். விருப்பாவணமளித்தவர் இறந்த நாளன்று அவர் வசத்தில் இப் பொருள் இல்லாதிருந்தாலோ, கொடையினை வறிதாக்கல் எனப்படும் கொடைப் பொருளை வேறு பொருளாக மாற்றியமைப்பதால் இக் கொடை செயலிழந்தாலோ எஞ்சிய சொத்துகளினின்று தமக்கு ஈடு கொடுக்க வேண்டுமென்று கொடைபெறுநர் கோரவியலாது.

(2) கொடைப் பொருளில்லாவிட்டால் குறித்துரைக்கப் பட்ட கொடை செயலிழக்கும். ஆனால் பொதுத் தன்மைத்தான கொடையிலோ, பொருளில்லா விட் டால் விருப்பாவணமளித்தவரின் சொத்துகள் அனுமதிக் கும்வரை அப் பொருளினை வாங்கிக் கொடுக்க வேண்டியது உயில் நிறைவேற்றாளரின் கடமையாகும்.

(3) குறித்துரைக்கப்பட்ட கொடை விருப்பாவணமளித் தவர் இறந்த நாளினின்று வட்டி அல்லது அதன் வருவாயோடு பெறக்கூடியது (பிரிவு 349). பொதுத்தன்மைத் தான கொடை அவர் இறந்து ஓராண்டு கழித்த பின்னர் வட்டியோடு பெறக்கூடியது (பிரிவு 35).

(4) குறித்துரைக்கப்பட்ட கொடைப்பொருளின்மீது கடன் சுமை இருக்குமானால், கொடைபெறுநர் கடன் சுமையுடன் கொடைப்பொருளினைப் பெறுதல் வேண் டும். அக் கொடையைப் பெறும்போது கடனை அடைக்கக் கடமைப்பட்டவராவார்.

ஒரு பொருளைக் குறித்துரைக்கப்பட்ட கொடையாக விருப்பாவணமளித்தவர் கொடுக்க விரும்பினார் என்று தெளிவான எண்ணம் தெரிந்தாலொழிய நீதிமன்றம் ஒரு கொடையினைக் குறித்துரைக்கப்பட்ட கொடையாகக் கருதாது. பொதுத் தன்மைத்தான கொடைகளைக் கொடுக்க முன்னர்க்குறித்துரைக்கப்பட்ட கொடைகளைக் கொடுக்க வேண்டும்.

விருப்பாவணமளித்தவரின் கடன்களைஅடைக்கும்பொருட்டு அவரது சொத்துகளை விற்க நேரும்போது முதலில் உயிலில் கூறப்பட்ட சொத்துகளையும் கொடையாகக் கொடுத்தது போக எஞ்சியுள்ள சொத்துகளையும், விற்கவேண்டும்: அவை போதாவிடில் இறுதியாகத்தான் குறித்துரைக்கப்பட்ட சொத்துகளை விற்க முயல வேண்டும்.

குறித்துரைக்கப்பட்ட கொடைச்சொத்துகள் மட்டுமே மாற்றியமைத்தலின் மூலம் வறிதாக்கப்பட்டு (adeemed) செயலிழக்கும். ஆனால் பொதுத்தன்மைத்தான கொடைச் சொத்துகளை எச் செயலின் மூலமாகவும் செயலிழக்கச் செய்யவியலாது

இரும்புப் பெட்டியிலிருக்கும் குறிப்பிட்ட தொகையும், வேறு நபர் வசத்திலிருக்கும் பணமும், கொடையளிப்பவருக்கு வரவேண்டிய கடன் தொகையும் குறித்துரைக்கப்பட்ட கொடைக்கு எடுத்துக்காட்டுகளாகும்.

### பாகீரதிபாய் எ. அட்வொகேட் ஜெனரல்
### (39 Bom. L. R. - 497)

விருப்பாவணமளித்த ஒருவர் தம்முடைய சொத்தினின்று வரும் மாத வருவாய் ரூ. 1000-ல் தம்முடைய மனைவி, மூன்று மகள்களுக்கும் தலைக்கு மாதம் ரூ. 125-ம் குடும்பச் செலவிற்காக மாதம் ரூ. 500 ஐ மனைவியிடமும் கொடுக்க வேண்டுமென்று உயிலில் குறிப்பிட்டிருந்தார். இக் குறிப்புக் குறித்துரைக்கப்பட்ட கொடையெனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

பிரிவு 143: கொடைப்பொருள் எந்த மூலதனத்தைச் சார்ந்தது என்ற விவரத்தைக் கொண்டு அக்கொடை குறித்துரைக்கப்பட்ட கொடையெனக் கூறவியலாது.

பிரிவு 144: கொடைப்பொருளைக் குறிப்பிடாமல் பொதுவாகக் கூறியிருந்து, உயில் எழுதிய நாளன்று அவரிடம் அப்பொருளுக்கு ஈடானதாகவோ அதிகமானதாகவோ பொருள்களிருந்தால், அக்கொடையினைக் குறித்துரைக்கப்பட்டகொடையெனக் கூறவியலாது. உயில் எழுதிய நாளன்று 'குறிப்பிட்ட

என்னுடைய பொருள்' என்று குறிப்பிட்டிருந்தாலொழியக் குறித்துரைக்கப்பட்ட கொடையாகாது. உ-ம்: அரசு வங்கியிலிருக்கும் என்னுடைய பங்குகள் எல்லாவற்றையும் கொடையாகக் கொடுக்கிறேன் என்பது போலத் தெளிவான எண்ணத்தோடு கூறப்பட்டிருத்தல் வேண்டும்.

கொடைப் பொருளைப் பணமாகக் கூறி அப்பணம் வரவேண்டியிருப்பதால், கொடை செயல்படுதலைக் காலந்தாழ்த்துவதால், அக் கொடையினைக் குறித்துரைக்கப்பட்ட கொடையெனக் கூற வியலாது.

## ரஜினிகாந்த் எ. கீகூ
## (34 Bom. L. R. - 1124)

தம்முடைய நிலங்களை விற்றுவரும் பணத்தில் குறிப்பிட்ட தொகையைத் தம்முடைய மனைவிக்கும் இரு மகள்களுக்கும் கொடையாகக் கொடுக்கவேண்டுமென்று ஒருவர் உயில் எழுதி வைத்திருந்தார். அக் கொடை குறித்துரைக்கப்பட்ட கொடையன்று எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

பிரிவு 146 : சொத்துகளைப் பிரித்துக் கொடுத்தபின்னர் எஞ்சியுள்ளவைகளைக் கொடையாகக் கொடுக்கும்போது முன்பு கொடையாகக் கொடுக்கப்படாத சில அசையாப் பொருள்களை வரிசைப்படுத்திக் கூறியிருத்தலைக் கொண்டு அக் கொடை குறித்துரைக்கப்பட்ட கொடையெனக் கொள்ளவியலாது.

ஒரு சொத்தினைக் குறித்துரைக்கப்பட்ட கொடையாக ஒருவர் பின் ஒருவராக இருவர் அல்லது அதற்கு மேற்பட்டவர்கட்கு வாழ்நாள் அனுபவப் பாத்தியம் கொடுக்கப்பட்டிருந்தால் சொத்து அழியத்தொடங்கி மதிப்பில் குறைய நேர்ந்தாலும் கொடையளித்தவர் கொடுத்த நிலையிலேயே சொத்தினை வைத்திருக்க வேண்டும். பொதுத்தன்மைத்தான கொடையாயின் கொடைப் பொருள் அழியநேரும்போது அதனை விற்று வேறு நல்ல சொத்துகளாக வாங்கிப்போடலாம். இதனால், கொடை பெறுநர் இருவரும் அனுபவிக்க வேண்டுமென்ற கொடையாளியின் எண்ணம் நிறைவேற்றப்படும்.

கொடையாளியின் கட்டளை ஏதுமில்லாதபோது அழியும் கொடைப்பொருளை மாற்றி உயிலில் கண்டுள்ளபடி கொடை பெறுநருக்கு அனுபவப்பாத்தியத்தைக் கொடுக்கும் உரிமையை

இந்தியச் சட்டம் உயர்நீதி மன்றத்திற்குக் கொடுக்கிறது. பிரிவு 148-ல் சொல்லப்பட்ட அழியும் கொடைப்பொருளை மாற்றி அனுபவிக்கக் கொடுக்கலாமென்ற விதி ஆங்கிலச் சட்டத்தில் ஆவ் எ. ஏர்ல் ஆப் டார்மவுத் என்னும் வழக்கில் உருவான விதியை தழுவியது. ஒருவர் ஒரு சொத்தினை ஒருவருக்கு வாழ்நாள் அனுபவப் பாத்தியக் கொடையாகக் கொடுத்து அவருக்குப் பின் வேறொருவருக்குச் செல்லவேண்டுமென்று குறிப்பாகக் கொடுத்திருந்தால், இரு கொடைபெறுநரும் அக் கொடைப் பொருளை அப் பொருள் இருந்தவண்ணமாக அதன் இயற்கை நிலையில் அனுபவிக்க வேண்டுமென்பதே கொடையாளியின் எண்ணம் என்ற விதி அவ் வழக்கில் உருவாக்கப்பட்டது. மேற் சொன்ன எண்ணமின்றியும் குறிப்பான கொடையுமல்லாதிருந்து கொடைப்பொருள், முதல் கொடைபெறுநரின் வாழ்நாளில் அழியத் தொடங்கினால், அப் பொருளை விற்று வேறு ஏதாவது அழியாச் சொத்தாக மாற்றிப் போடலாம். அப்படிச் செய்வதால் இரு கொடைபெறுநரும் அனுபவிக்க வேண்டுமென்ற கொடையாளியின் எண்ணத்தை நிறைவேற்றவியலும் என்பதே.

குறித்துரைக்கப்பட்ட கொடையின் அனுகூலம் யாதெனில், கொடை கொடுப்பதற்குப் போதிய சொத்துகள் இல்லாவிடில் கொடைச் சொத்தில் தள்ளுபடி செய்யவோ குறைத்துக் கொள்ளவோ வேண்டுவதில்லை. பொதுத் தன்மைத்தான கொடையாளியின் போதிய சொத்துகள் இல்லாவிடில் கொடைச் சொத்தில் தள்ளுபடி செய்ய வேண்டும் (பிரிவு 327).

கொடையாளி இறந்த நாளன்று, குறிப்பாகக் கொடுக்கப் பட்ட கொடைப்பொருள்களைத் தவிர்த்து, ஏனைய சொத்துகள் அவரது கடன்களை அடைக்கப் போதுமானால் குறித்துரைக்கப் பட்ட கொடைப்பொருளை உயில் நிறைவேற்றாளர் கொடை பெறுநருக்குக் கொடுக்க வேண்டுமென்பது விதி (பிரிவு 328). ஏனைய சொத்துகள் அவரது கடன்களை அடைக்கப் போதா விட்டால் அப்போது குறித்துரைக்கப்பட்ட கொடையில் விகிதப் படி தள்ளுபடி செய்யப்படும் (Halbury's Vol. 14 p. 277).

கொடையாளி இறக்கும் நாளன்று குறித்துரைக்கப்பட்ட கொடைப்பொருள் இல்லாமலிருந்தால், கொடையினைப் பாதிக்கும்; கொடை செயலிழந்து வறிதாக்கப்படும். கொடை வறிதாக்கப்பட்டதால் கொடையாளியின் ஏனைய சொத்துகளின் மீது கொடை பெறுநருக்கு எந்தவித உரிமையும் கிடையாது.

3. சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடைகள் (Demonstrative Legacies)

ஒரு குறிப்பிட்ட மூலதனமான பெருந்தொகையினின்றோ, பொருள்களினின்றோ, ஒரு தொகையினையோ ஒரு பொருளினையோ சுட்டிக் காட்டி உயில்வழிக் கொடையாகக் கொடுத்தலே சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடையாகும். ஜார்மன், 'உயில்கள்' எனப்படும் தம்முடைய புத்தகத்தில் சுட்டிக் காட்டும் உயில்வழிக் கொடையினைப் பொதுத் தன்மைத்தான உயில்வழிக் கொடையின் ஓர் உட்பிரிவாகக் கொள்ளலாம் என்று கூறுகிறார். அவர் அப்படிக் கூறுவதற்கும் காரணமுண்டு. கொடையினைக் கொடுக்க மூலப்பொருள் போதாவிடில், விருப்பாவணமளித்தவரின் ஏனைய சொத்துகளினின்று கொடையினைக் கொடுக்கவேண்டும். இத் தன்மையில் இவ்வகைக் கொடை பொதுத்தன்மைத்தான கொடையினைப் போன்றுள்ளது. ஆகவேதான் ஜார்மன் அப்படிக் கூறுகிறார். விருப்பாவணமளித்தவர் சொத்துகள் நிறைய இருந்து சுட்டிக்காட்டும் கொடையினைக் கொடுக்கக் குறிப்பிட்ட சொத்துகள் குறைவுபட்டால் கொடையினை விகிதப்படி தள்ளுபடி செய்வதில்லை. இத்தன்மையில் இக் கொடை குறித்துரைக்கப்பட்ட கொடையின் தன்மைக்கு இயைந்திருக்கிறது. சுருங்கக்கூறின் ஒரு குறிப்பிட்ட சொத்தினின்று கொடுக்கும்படி கட்டளையிடப்பட்ட கொடையே சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடையாகும். எனவே, இக் கொடையினைப் பொதுத் தன்மைத்தான உயில்வழிக் கொடைக்கும், குறித்துரைக்கப்பட்ட கொடைக்கும் இடைப்பட்ட கொடையெனக் கூறல் மிகையாகாது.

'கொடைகளைக் குறித்துரைக்கப்பட்ட கொடை, பொதுத் தன்மைத்தான கொடை என இருவகையாகப் பிரிக்கலாம். பொதுத்தன்மைத்தான கொடையினைச் சுட்டிக்காட்டும் கொடை, சுட்டிக்காட்டாக் கொடை என இரு உட்பிரிவுகளாகப் பிரிக்கலாம்' என ஜார்மன் என்பவர் கூறுகிறார் (Wills 8th Edn. p. 1043).

ஒரு கொடையினைச் சுட்டிக்காட்டும் கொடையெனக் கொள்வதற்கான குணலட்சணங்களாவன:

(1) பொதுத்தன்மைத்தான கொடை போன்று நிபந்தனைகளற்ற கொடையாக இருத்தல் வேண்டும்.

(2) எந்தச் சொத்தினின்று கொடையினைக் கொடுக்க வேண்டுமென்று குறிப்பிட்டிருத்தல் வேண்டும்.

சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடையென்பது, பொதுத் தன்மைத்தான கொடையின் தன்மைகளையும் குறித்துரைக்கப் பட்ட கொடையின் தன்மைகளையும் ஒருங்கே கொண்டது. சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடையினின்று வரும் வருவாயினை விருப்பாவணமளித்தவர் இறந்த நாளினின்று ஓராண்டு கழித்த பின்னர்தான் கொடைபெறுநர் பெறுவார். அந்த ஓராண்டுக்கு அக் கொடைப் பொருளினின்று வரும் வருவாய் அவருக்குக் கொடுக்கப்படமாட்டாது.

**எடுத்துக்காட்டு :**

(1) 'ஏ' என்பவர், 'டபிள்யூ' என்பவர் தமக்குக் கொடுக்க வேண்டிய கடனில் ஒரு பகுதியான ரூ. 1000ஐ 'பி'-க்கு உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். 'சி'-க்கு 'டபிள்யூ' கொடுக்க வேண்டிய கடனில் ரூ. 1000ஐ உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். 'பி'-க்குக் கொடுக்கப்பட்டது குறித்துரைக்கப்பட்ட உயில்வழிக் கொடை; 'சி'-க்குக் கொடுக்கப்பட்டது சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடை.

(2) ரஜினிகாந்த் எ. கிசு. (34 Bom. L. R. 1124): விருப் பாவணமளித்தவர் தம்முடைய நிலங்களை விற்றுவரும் தொகையில், தம்முடைய மனைவிக்கு ரூ. 10,000-ம், மகளுக்கு ரூ. 4000-ம் கொடுக்க வேண்டுமென்று எழுதி யிருந்தார். இவ்விரு கொடைகளும் சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடைகளே எனத் தீர்ப்பளிக்கப் பட்டது.

(3) மாதவராவ் எ. அட்மினிஸ்ட்ரேட்டர் ஜெனரல் (1942 Mad. 17): விருப்பாவணமளித்தவர் தம்முடைய மகன்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே வீடுகளைக் கொடுத்து ஒருவனுக்கு மட்டும் குறிப்பிட்ட வங்கியி லிருக்கும் திட்டமான வைப்புத்தொகை (Fixed Deposit) முதிர்ச்சியடைந்தவுடன் அத் தொகையினின்று ஒரு வீடு வாங்கிக் கொடுக்க வேண்டுமென்றும், எஞ்சியுள்ளதை அனைவரும் சமமாகப் பங்கிட்டுக்கொள்ள வேண்டு மென்றும் உயிலில் எழுதி வைத்திருந்தார். அந்த ஒரு மகனுக்கு வீடு வாங்குவதற்கெனக் கூறப்பட்ட கொடைத் தொகை சுட்டிக்காட்டும் கொடையென்றும், அதில் ஏற்பட்ட குறைபாடு பொதுச் சொத்தினின்று நிறைவாக்கப்பட வேண்டுமென்றும் தீர்ப்பளிக்கப் பட்டது.

**கொடைகளைக் கொடுக்கும் முறை (பிரிவு 151)**

ஒரே சொத்தினின்று குறித்துரைக்கப்பட்ட உயில்வழிக் கொடையும், சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடையும் கொடுக்கப்பட வேண்டுமென்றிருந்தால், குறித்துரைக்கப்பட்ட உயில்வழிக் கொடையினை முதலில் கொடுக்க வேண்டும்.

எஞ்சியுள்ளதில் சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடையினைக் கொடுக்க வேண்டும். எஞ்சியுள்ள சொத்து சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடையினைக் கொடுக்கப் போதாவிட்டால் குறையினை விருப்பாவணமளித்தவரின் பொதுச் சொத்துகளினின்று நிறைவாக்க வேண்டும்.

# 20. கொடைகள் வறிதாக்கல்

## (Ademption of Legacies)

**வறிதாக்கல் என்றால் என்ன?**

கொடுக்கப்பட்ட கொடைகள் சில காரணங்களை முன்னிட்டுச் செயல்படுத்த இயலாதுபோகின்றன. கொடைகள் செயல்படாமல் போகப் பல காரணங்கள் உண்டு. வறிதாக்கல் என்பது கொடைபெறுநரின் செயலினால் ஏற்படுவதன்று. கொடைபெறுநரின் செயலினாலல்லாமல் விருப்பாவணமளித்தவரின் செயலினாலோ, இயற்கையின் போக்கினாலோ ஏற்படும் மாறுதல்கள் மூலம் கொடைகள் செயலிழக்கின்றன. அவையே வறிதாக்கல் எனப்படும். இதனை ஆங்கிலத்தில் 'அடம்ஷன்' (Ademption) என்பர். அவ்வாங்கிலச் சொல் 'எட் எமர் எம்ப்டம்' (*ad emere emptum*) எனப்படும் இலத்தீன் மொழியினின்று உருவாக்கப்பட்டது.

குறிப்பான கொடையொன்றினை விருப்பாவணமளித்தவர் கொடுத்தால், அவர் இறக்கும் நாள்வரை கொடைப்பொருள் கொடுத்தவண்ணமாகவே இருந்தால்தான் கொடைபெறுநர் அதனைப் பெற்றுக்கொள்ளவியலும். கொடைப்பொருளினைக் கொடையாளியே விற்றுவிட்டாலோ, முற்றிலும் வேறான பொருளாக மாற்றியமைத்தாலோ கொடைபெறுநர் அதனைப் பெறவியலாது. கொடைப்பொருளை விற்றுவிட்டாலோ மாற்றியமைத்தாலோ கொடைபெறுநர் அதனைப் பெறவியலாது. கொடையினைச் செயலிழக்கச் செய்வதையே வறிதாக்கல் என்பர்.

உதாரணமாக: ஒருவர் தங்கச் சங்கிலியொன்றினைக் கொடையாகக் கொடுக்கிறார். கொடைபெறுநர் பெறுமுன் அச் சங்கிலி விற்கப்பட்டாலோ வளையலாக மாற்றப்பட்டு விட்டாலோ அந்தத் தங்கச் சங்கிலியினை அவர் பெறவியலாது (டுராண்டு எ. பிரண்டு). கொடை செயலிழந்து வறிதாக்கப் பட்டது.

ஒருவர் ஒரு குறிப்பிட்ட பொருளைக் கொடையாகக் கொடுப்பதாகக் கூறி அதனைக் காப்பீடு (insure) செய்து கப்பலில் கொண்டுவரும்போது கப்பல் மூழ்கிவிட்டது. சட்டப்படி கொடையாளி இறக்கும் நாளன்று கொடைப்பொருள் கொடுத்தவண்ணமாக இருக்க வேண்டும். ஈண்டுக் கப்பல் மூழ்கியதால் கொடைப்பொருள் முதலில் அழிந்ததா, கொடையாளி முதலில் இறந்தாரா என்ற ஐயமெழும். எது எப்படியாயினும் பொருள் அழிந்துபோனதனால் கொடைபெறுநருக்கு அதன்பேரில் எந்த உரிமையும் கிடையாது. பொருளின் காப்பீட்டுப் பணத்தையும் பெறவியலாது; கொடைப்பொருள் வறிதாக்கப்பட்டது. கொடைப்பொருளைப் பாதுகாப்பின் பொருட்டு ஓர் இடம் விட்டு வேறுஇடம் மாற்றி அமைப்பதன் மூலம் கொடை வறிதாக்கப்பட்டது எனக் கொள்ளலாகாது. பொருள் முற்றிலுமாக மாற்றப்பட வேண்டும்.

வறிதாக்கல் இருவகைப்படும். விருப்பாவணமளித்தவரின் எண்ணத்தினாலோ செயலினாலோ அன்றி இயற்கையின் செயலினால் கொடைப்பொருள், பெறுநர் பெறுமுன்னர் விருப்பாவணமளித்தவருக்குச் சொந்தமில்லாமற் போவதால் கொடை செயலிழந்து வறிதாக்கப்படும்; இது முதல்வகை. குறித்துரைக்கப்பட்ட கொடை வறிதாக்கல் முதல் வகையினைச் சார்ந்தது.

இரண்டாம் வகை, விருப்பாவணமளித்தவரின் எண்ணத்தினாலோ செயலினாலோ கொடை செயலிழத்தல். கொடையாளி கொடைப்பொருளை விற்றுவிடுவதாலோ வேறொருவருக்குக் கொடுத்துவிடுவதாலோ கொடையினை ரத்துச்செய்துவிடுகிறார் (Revocation). ரத்துச்செய்வதனால் கொடை வறிதாக்கப்படுகிறது. இதற்கு விருப்பாவணமளித்தவரின் விருப்பம் தேவை. பொதுத்தன்மைத்தான கொடைகளை வறிதாக்கப் பயன்படுவது சுட்டிக்காட்டும் கொடையினை வறிதாக்கவியலாது. காரணம் யாதெனில், கொடைகளைக் கொடுக்கும் முறையில் சுட்டிக்காட்டும் கொடை இறுதியாகக் கொடுக்கப்படுகிறது. சுட்டிக்காட்டும் கொடையினைக் கொடுக்கக் குறிப்பிட்ட சொத்துகள் போதாவிடில் மொத்தச் சொத்துகளினின்று குறைவினை நிறைவாக்க வேண்டும். ஆகையால்தான் அதனை வறிதாக்கவியலாது.

### வறிதாக்கப்படும் விதங்கள்

விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளன்று கொடைச்சொத்துகள் (1) இல்லாமல் இருந்தாலும், (2) அவருக்குச்

சொந்தமானதாக இல்லாமல் போனாலும், (3) முற்றிலும் மாறுபட்ட சொத்தாக மாற்றப்பட்டுப் போனாலும் கொடை செயலிழந்து வறிதாக்கப்படும். ஆக மூன்று விதங்களில் கொடைப் பொருள் வறிதாக்கப்படலாம்.

விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளன்று கொடையாகக் கொடுக்கப்பட்ட குறிக்கப்பட்ட சொத்துகள் கொடைபெறுநர் பெற்றுக்கொள்ளும்படி இல்லாமலிருந்தால் கொடை வறிதாக்கப்பட்டது (பிரிவு 158). 'இல்லாமலிருத்தல்' எனப்படுவது சொத்து கொடையாளியின் சொத்தாக இல்லாமலிருத்தலையும், வருங்காலத்தில் உருவாக்கக்கூடியதாக இருத்தலையும் குறிக்கும்.

விருப்பாவணமளித்தவர் இறக்கும் நாளில் கொடைப் பொருளில் ஒரு பகுதி மட்டுமே இருக்குமானால் அதனை மட்டுமே கொடைபெறுநர் பெறுவார். இல்லாத பகுதி வறிதாக்கப்பட்டது (பிரிவு 159).

உதாரணமாக: 'ஏ' என்பவர் 'பி'-க்குத் தம்முடைய 5½ சதவீதம் கொண்ட ரூ. 10,000/-மதிப்புள்ள அரசு கடன் பத்திரங்களைக் கொடையாக எழுதிவைத்தார். பின்னர் 'ஏ' ரூ. 5000/- மதிப்புள்ள பத்திரங்களை விற்றுவிட்டார். கொடைபெறுநர் எஞ்சியுள்ள பத்திரங்களை மட்டுமே பெறுவார். விற்கப்பட்டவை வறிதாக்கப்பட்டன.

வேறொருவரிடமிருந்து மதிப்புள்ள பொருளைத் தாம் பெற்றுக்கொள்ளவிருக்கும் உரிமையினை விருப்பாவணமளித்தவர் கொடையாகக் கொடுத்து, பின்னர் அப்பொருளை அவரே பெற்றுக்கொண்டால் அக் கொடை வறிதாக்கப்படுகிறது. ஈண்டுக் கவனிக்கவேண்டியது யாதெனில், கொடையாகக் கொடுக்கப்பட்டது பெறவிருக்கும் உரிமையினைத்தான்; பொருளையன்று. அவ்வுரிமையினை அவரே பயன்படுத்துவதால் அது வறிதாக்கப்படுகிறது (பிரிவு 154).

உதாரணமாக: 'ஏ' என்பவர் தம்முடைய ஆயுள் காப்பீட்டுப் பணம் பெறும் உரிமையினை 'பி' என்பவருக்குக் கொடையாகக் கொடுத்துவிடுகிறார். பின்னர் 'ஏ' தம்முடைய வாழ்நாளிலேயே அப் பணத்தினைப் பெற்றுக்கொள்கிறார். அவரே பெற்றுக்கொள்வதால் கொடை வறிதாக்கப்பட்டது.

தமக்கு வரவிருக்கும் சொத்து முழுவதையும் உயில்வழிக் கொடையாக்க் குறிப்பிட்டுக் கொடுத்து, கொடைபெறுநர் அதனைப் பெறுமுன் அச்சொத்தில் ஒரு பகுதியைக் கொடை

யாளியே பெற்றுக்கொண்டால், அவர் பெற்றுக்கொண்ட அளவு சொத்துகள் மாத்திரமே வறிதாக்கப்படும்; எஞ்சிய சொத்து களைக் கொடைபெறுநர் பெற்றுக்கொள்ளலாம் (பிரிவு 155).

(உ-ம்) 'ஏ' என்பவர் தமக்கு 'சி'-யிடமிருந்து வரவிருக்கும் கடன் தொகையினை 'பி'-க்கு உயில்வழிக் கொடையாகக் கொடுக் கிறார். 'சி' கொடுக்க வேண்டிய கடன் தொகை ரூ. 10000/- அக் கடனில் ரூ. 5000/-ஐ 'சி' திருப்பி 'ஏ'-யிடம் கொடுத்து விடுகிறார். 'ஏ' பெற்றுக்கொண்ட ரூ. 5000/-அளவுக்கு அவர் கொடுத்த கொடை வறிதாக்கலின் மூலம் ரத்துச் செய்யப்பட்டது (Revoked).

தமக்கு வரவிருக்கும் சொத்தில் ஒரு பகுதியினை உயில்வழிக் கொடையாகக் குறிப்பிட்டுக் கொடுத்து, கொடைபெறுநர் தமக் குக் கொடுக்கப்பட்ட பகுதியினைப் பெறுமுன், மொத்தச் சொத் தில் ஒரு பகுதியைக் கொடையாளியே பெற்றுக்கொண்டால், எஞ்சியுள்ள சொத்துகளைக் குறிப்பிட்ட கொடையினைக் கொடுக்கப் பயன்படுத்த வேண்டும். எஞ்சியுள்ள சொத்துகள் கொடைச் சொத்துகளைவிடக் குறைவுபட்டால் எவ்வளவு குறைவுபடுகிறதோ, அந்த அளவிற்குக் கொடை வறிதாக்கப்பட்டு மீதமுள்ளவற்றினையே அவர் பெற்றுக்கொள்ள வேண்டும் (பிரிவு 156).

### வறிதாக்கலுக்கு விதிவிலக்குகள்

**இடப்பெயர்ச்சி** கொடைப்பொருள் ஓர் இடத்தில் இருப்ப தாக உயிலில் விவரிக்கப்பட்டு, அப் பொருள் அவ்விடத்தினின்று தகுந்த காரணமின்றிப் பெயர்ந்து சென்றிருந்தால் அக் கொடை வறிதாக்கப்படும் என்பது பொதுவிதி. சில காரணங்களால் கொடைப்பொருள் விவரிக்கப்பட்ட இடத்தினின்று இடம் பெயர்ந் திருந்தால் கொடை வறிதாகாது என்பது விதிவிலக்கு.

1. பொருளினைப் பாதுகாப்பதற்குத் தாற்காலிகமாகக் குறிப்பிட்ட இடத்தினின்று இடப்பெயர்ச்சி செய்யப் பட்டிருந்தாலும்,

2. கொடைபெறுநரை ஏமாற்றும் எண்ணத்தோடு இடப் பெயர்ச்சி செய்யப்பட்டிருந்தாலும்,

3. கொடையாளியின் ஆணையின்றி அல்லது அவருக்குத் தெரியாமல் இடப்பெயர்ச்சி செய்திருந்தாலும் கொடை யினை வறிதாக்க முடியாது (பிரிவு 160).

உதாரணமாக : 'பி' என்னுமிடத்தில் விருப்பாவணமளித்தவருக்குச் சொந்தமான வீட்டிலுள்ள துணிமணிகள், தட்டுகள், பீங்கான் பொருள்கள் முதலான வீட்டுச் சாமான்களை 'ஏ' என்பவருக்குக் கொடையாகக் கொடுத்தார். பின்னர் விருப்பாவணமளித்தவர் வேறொரு வீட்டை எடுத்து அதில் முன் குறிப்பிட்ட வீட்டிலுள்ள வீட்டுச் சாமான்களைக் கொண்டு வைத்துவிட்டார். அப்படி அப்புறப்படுத்தியதால் அக் கொடை வறிதாக்கப்பட்டதாகத் தீர்ப்பளிக்கப்பட்டது.

கொடைப்பொருள்களை எளிதில் கண்டுகொள்ளும் பொருட்டு அது இன்ன இடத்திலிருப்பதாக விவரிக்கப்பட்டிருந்து அப்பொருள் வேறோர் இடத்திலிருந்தால் கொடை வறிதாக்கப்படாது. ஈண்டுப் பொருளினைக் கண்டுகொள்ளும் பொருட்டுத்தான் அது எங்கு உள்ளது என இருக்குமிடம் விவரித்துக் கூறப்பட்டது. இருக்குமிடம் ஈண்டு முக்கியமன்று; பெறும் கொடைப் பொருள்தான் முக்கியம். ஆதலால் கொடை வறிதாக்கப்படாது (பிரிவு 161).

எடுத்துக்காட்டாக : ஒருவர் தம் உயிலில் "'எல்' என்னும் தெருவிலுள்ள 'என்' வீட்டிலுள்ள பொருள்கள் அனைத்தும் என் மனைவிக்குச் சேரவேண்டியது" என எழுதி வைத்திருந்தார். பின்னர் அவர் சில பொருள்களை அங்கிருந்து எடுத்து இன்னும் சில பொருள்களைச் சேர்த்து வாங்கி வேறு வீட்டில் போட்டு வைத்தார். குறிப்பிட்ட வீட்டிலிருந்து சில பொருள்களை எடுத்தார் என்பதால் கொடை வறிதாக்கப்படவில்லை. ஈண்டு வீட்டினைக் குறிப்பிட்டது கொடையினைத் தெளிவாகக் கூறத்தான்; வீடு உள்ள தெரு முக்கியமன்று. ஆதலால் கொடை வறிதாக்கப்படாது எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

வேறொருவரிடமிருந்து தாம் பெறவிருக்கும் பணத்தையோ, மதிப்புள்ள பொருளையோ உயில்வழிக் கொடையாகக்கொடுத்து, பின்னர் அவரோ அவரது பதிலாளோ, அப் பொருளையோ பணத்தையோ பெற்றுக்கொண்டு அதனைத் தம் சொத்துகளோடு சேர்க்காமல் தனியாக வைத்திருந்தால் அக் கொடைப்பொருள் வறிதாக்கப்படாது; தம் சொத்துகளோடு சேர்த்துக்கொண்டால் மட்டுமே வறிதாக்கப்படும் பிரிவு (162). இக் கூற்று முன்னர்ப் பிரிவு 154-ல் கூறப்பட்ட கூற்றினின்று வேறுபட்டது. பிரிவு 154-ல் கொடையாகக் கொடுத்தது மதிப்புள்ள பொருளைப் பெற்றுக் கொள்ளும் உரிமையையே; ஈண்டுக் கொடையாகக் கொடுத்தது உரிமையையன்று; பொருளையே. பிரிவு 154-ல் கொடையாளி தம் வாழ்நாளில் கொடைப் பொருளைப் பெற்றுக்கொண்டால்

கொடை வறிதாக்கப்படும். ஈண்டுக் கொடைப்பொருளைக் கொடையாளி பெற்றுத் தம் சொத்துகளோடு சேர்த்துக்கொண்டால்தான் கொடை வறிதாக்கப்படும்.

உயில் உருவாக்கப்பட்ட நாளிலிருந்து உயிலினை உருவாக்கியவர் இறந்த நாளுக்குள் சட்டத்தின் நடைமுறையினாலோ, கொடையாளிக்குத் தெரியாமலோ, அனுமதியின்றியோ குறித்துரைக்கப்பட்ட கொடைப்பொருளில் மாறுதல்கள் ஏற்பட்டால் கொடை வறிதாக்கப்படாது (பிரிவு 163 & 164). கொடையாளிக்குத் தெரியாமல் அவரது பதிலாள் கொடைப்பொருளை மாற்றிவிட்டால் கொடை வறிதாக்கப்படாது. கொடைப் பொருளிலே ஏற்படும் சிறு மாறுதல்கள் கொடையினை வறிதாக்காது. பெரும் மாறுதல்களே கொடையினை வறிதாக்கும்.

## டர்னர் எ. லிமிங்

ஒரு கம்பெனியிலுள்ள தம்முடைய பங்குகளை உயில்வழிக் கொடையாக ஒருவருக்குக் கொடுத்தார். அவரது வாழ்நாளில் அக்கம்பெனி கலைக்கப்பட்டுப் புதிதாக உருவாக்கப்பட்டுப் புதிய சிறப்புப் பங்குகள் அவருக்குக் கொடுக்கப்பட்டன. பங்குகள் மாற்றியமைக்கப்பட்டதால் கொடை வறிதாக்கப்படாது. கொடைபெறுநர் புதிய பங்குகளைப் பெறுவார் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

விருப்பாவணமளித்தவருக்கு மனநோய் கண்டு அவரது மகன் கொடைச்சொத்துகளை விற்றுவிட்டால் கொடை வறிதாக்கப்படாது. ஆனால், கொடைப்பொருள் விற்பனை, நீதிமன்றத்தின் ஆணையின்படி நடைபெற்றிருக்குமானால் அது விருப்பாவணமளித்தவரின் செயலுக்கு ஈடானது. அப்போது கொடை வறிதாக்கப்படும்.

குறிப்பாகக் கொடுக்கப்பட்ட கொடைப்பொருளைக் கொடையாளி வேறொருவருக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் இரவலாகக் கொடுத்திருந்தால் கொடை வறிதாக்கப்படாது. காரணம் யாதெனில், இரவலாகக் கொடுத்த சமயத்தில் பொருள் அவர் வசமில்லாவிட்டாலும் அதன் பேரிலுள்ள உரிமம் அவருடையதுதான். இரவலாகக் கொடுக்கப்பட்ட கொடைப்பொருள், வறிதாகாமலிருக்க இரு நிபந்தனைகளுண்டு: (1) பொருளைத் திருப்பிக் கொடுக்கும் உடன்பாடு, (2) கொடையாளி இறக்கும்முன் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்பன (பிரிவு 165).

கொடைப்பொருள் விற்கப்பட்டுப் பின்னர் அதே அளவு குறிப்பிட்ட பொருளை விருப்பாவணமளித்தவர் வாங்கி வைத்திருந்தால் கொடை வறிதாக்கப்படாது. இவ் விதி பார்டிரிஜ் எ. பார்டிரிட்ஜ் என்னும் வழக்கின் தீர்ப்பைச் சார்ந்தது. இவ் விதிக்கு இரு நிபந்தனைகளுண்டு.

1. வாங்குதல் குறிப்பிட்ட வகைப்பொருளை வாங்குதலைக் குறிக்கும். அதற்கு ஈடான வேறு பொருளை வாங்குதலைக் குறிக்காது.

2. விற்கப்பட்ட கொடைப்பொருளின் அளவுக்குச் சம அளவுப்பொருளை வாங்குதலைக் குறிக்கும்.

சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடைகள் வறிதாக்கப்படா. குறிப்பிட்ட சொத்தினின்று சுட்டிக்காட்டும் கொடையினைக் கொடுக்கவேண்டும். குறிப்பிட்ட சொத்து, கொடையைக் கொடுக்கக் குறைவுபட்டால் பொதுச் சொத்தினின்று குறைவை நிறைவாக்க வேண்டும்.

**கடன் பொறுப்புகள் சார்ந்த கொடைகள்**

1. சொத்துகளை விட்டுவிட்டு ஒருவர் இறந்துபோனால் அவர் கொடுக்க வேண்டிய கடன்களை அவர் விட்டுச்சென்ற சொத்துகளினின்று கொடுக்கவேண்டும். கடன்கள் இருக்கும் போது சொத்துகளை மட்டும் கொடையாகப் பலருக்கு எழுதி வைத்திருந்தால் ஒவ்வொரு கொடைபெறுநரும் தாம் பெறும் கொடையின் அளவுக்குத் தக்கதாக விகிதப்படி, கொடையாளி கொடுக்கவேண்டிய கடன்களைக் கொடுத்துத் தீர்க்கவேண்டும். கடன்களைக் குறிப்பிட்ட சொத்தினின்று அடைக்க வேண்டுமென்று விருப்பாவணமளித்தவரே குறிப்பிட்டிருந்து அச் சொத்துக், கடன்களை அடைக்கப் போதுமானதாகவிருந்தால் கொடை பெறுநர்களின்மீது கடன் பொறுப்பு அமராது. இதுவே மாறுபட்ட எண்ணத்தைத் தெரிவித்தல் எனப்படும். பல சொத்துகளைச் சேர்த்து, ஒரே அடைமானமாக வைக்கப்பட்டிருந்தது. அச் சொத்துகள் வெவ்வேறு ஆள்களுக்குக் கொடையாகக் கொடுக்கப்பட்டு, அடைமானம், எந்தச் சொத்தினின்று அடைகசுப்பட வேண்டும் என்ற மாறுபட்ட எண்ணம் தெரிவிக்கப்படாமலிருந்தால் ஒவ்வொரு கொடைபெறுநரும் பெறும் கொடைச்சொத்துக்குத் தக்கதாக விகிதப்படி அடைமானக் கடனைக் கொடுக்க வேண்டும் (Halsbury Vol 14 Page 343). அசையாச் சொத்துகள் குறித்துரைக்கப்பட்ட கொடை

களாகக் கொடுக்கப்பட்டால் அச் சொத்துக்கான நிலவரி, சொத்துவரி முதலான வரிகளும் கொடுக்கப்பட வேண்டியிருக்கும். நிலுவையிலிருக்கும் வரிப் பாக்கியினைக் கடன் பொறுப்பு எனக் கொள்ளவியலாது. சொத்துவரி வேறு, கடன் பொறுப்பு வேறு.

**கிரிஸ்ச்சந்தர் எ. ஆனந்தமாயி 15 Cal. 66 (PC)**

*விருப்பாவணமளித்தவர் கொடைபெறுநருக்குத் தம் சொத்துகளை நிபந்தனையின் பேரில் கொடையாகக் கொடுத்தார். கொடைபெறுநர் விருப்பாவணமளித்தவரின் ஈமச் சடங்குகளைச் செய்யவேண்டும்; அவர் தரவேண்டிய கடன் களை அடைக்க வேண்டும் என்ற நிபந்தனைகள் இருந்தன. சொத்துகளின்பேரில் நிறைவேற்றப்படவேண்டிய பொறுப்பு களுண்டு. கொடை பெறுநர் அப் பொறுப்புகளை நிறைவேற்றக் கடமைப்பட்டவர். கடன்களைக் கொடுத்துத் தீர்க்கவேண்டும் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.*

2. கொடைச் சொத்துகள் விருப்பாவணமளித்தவருக்குச் சொந்தச் சொத்தாக இருக்கவேண்டும். அச் சொத்தின் பேரில் அவருக்கு உடைமை உரிமை இருக்கவேண்டும். கொடைச் சொத்தின்பேரில் விருப்பாவணமளித்தவருக்கு உடைமையுரிமை யினைப் பெற ஆகும் செலவினை அவரது இதரச் சொத்துகளி னின்று கொடுக்க வேண்டும். கொடைச்சொத்துகள் வேறொரு வரிடமிருந்து வாங்கியதாக இருந்து அதன் விலைப்பாக்கி கொடுக்க வேண்டியிருந்தால் உயில் நிறைவேற்றாளர் அப் பாக்கியினை விருப்பாவணமளித்தவரின் இதரச் சொத்துகளினின்று கொடுக்க வேண்டும் (பிரிவு 168).

3. அசையாச் சொத்துகள் உயில்வழிக் கொடையாகக் கொடுக்கப்பட்டால், உயிலினை உருவாக்கியவர் இறந்தநாள் வரை கொடுக்கவேண்டிய வாடகை, நிலவரிகள் ஆகியவற்றை அவரது இதரச் சொத்துகளினின்று கொடுக்கவேண்டும். அந் நாளுக்குப் பிறகு கொடுக்க வேண்டிய வரிகளைக் கொடை பெறுநர் கொடுப்பார். கொடைச்சொத்துகள் ஒரு கம்பெனியின் பங்குகளாக இருப்பின் அப் பங்குகளின் பணம் கொடையாளியின் வாழ்நாளுக்குள் செலுத்தப்பட வேண்டியதாயின் அவரது இதரச் சொத்துகளினின்று செலுத்தப்பட வேண்டும். அவர் இறந்த நாளுக்குப் பிறகு செலுத்தப்பட வேண்டியதாயின் கொடை பெறுநர் செலுத்த வேண்டும். கொடைபெறுநர் கொடையினை ஏற்றுக்கொள்ளாவிட்டால், அப் பணத்தை அவர் செலுத்த வேண்டியதில்லை. பங்குப் பணம் செலுத்த வேண்டிய நாள்

என்பது குறிக்கப்பட்ட கடைசித்தினமே; 'பங்குப் பணம் செலுத்த வேண்டும்' என்று பெற்ற அறிவிப்புக் கடிதத்தின் நாளன்று (பிரிவு 170).

உதாரணமாக: 'ஏ' என்பவர் ரூ. 100/- மதிப்புள்ள 50 பங்குகளை வாங்க இசைவளித்தார். பங்குப் பணத்தைச் செலுத்தினால்தான் உடைமையுரிமை அளிக்கப்படும். பணம் செலுத்தப் படும்முன் இப் பங்குகளை 'பி' என்பவருக்குக் கொடையாகக் கொடுத்தார். உடைமையுரிமை பெறுவதற்கான பணத்தினை 'ஏ'-யின் இதரச் சொத்துகளினின்று செலுத்த வேண்டும்.

2. 'ஏ' என்பவர் ஒரு ரெயில்வே கம்பெனியில் தமக்கிருந்த பங்குகளைக் கொடையாக 'பி' என்பவருக்குக் கொடுத்தார். 'பி' அக் கொடையினைப் பெற்றுக்கொண்டார். 'ஏ' இறந்த பின்னர், அப் பங்குகளின்பேரில் இன்னும் அதிகமான பணம் செலுத்தும்படி கேட்கப்பட்டது. அதற்கான பணத்தை 'பி' தான் செலுத்த வேண்டும்.

3. ஒரு ரெயில்வே கம்பெனியில், 'ஏ' என்பவருக்குச் சொந்தமாகப் பத்துப் பங்குகள் இருந்தன. அவரது வாழ்நாளில் நடைபெற்ற பங்குதாரர்களின் கூட்டத்தில் ஒவ்வொரு பங்குதாரரும் ஒரு பங்குக்கு ரூ. 50/-வீதமாக அப் பணத்தை மூன்று தவணைகளில் செலுத்த வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. 'ஏ' தம் பங்குகளை 'பி' என்பவருக்குக் கொடையாகக் கொடுத்தார். முதல் தவணை செலுத்த வேண்டிய நாள் கடந்த பின்னர், அதனைச் செலுத்தாமல், இரண்டாம் தவணை செலுத்த வேண்டிய நாள் வருவதற்கு முன்னரே 'ஏ' இறந்துவிட்டார். முதல் தவணையை 'ஏ'-யின் சொத்துகளினின்றும் கொடுக்க வேண்டும். 'பி' கொடையினை ஏற்றுக்கொண்டால் எஞ்சிய தவணைகளைச் செலுத்த வேண்டும்.

**வாடகை அல்லது வருவாய்க்கொடை (பிரிவு 172)**

ஒருவர் தம் அசையாச் சொத்துகளின் வருவாயை மட்டும் கொடையாகக் கொடுக்கிறார். தமக்குப் பிறகு அச் சொத்துகள் யாருக்குப் போய்ச் சேரவேண்டுமென்று குறிப்பிடவில்லை. அவரது வாரிசுகள் யாரென்றும் கண்டுபிடிக்க இயலவில்லை. இந் நிலையில் விருப்பாவணமளித்தவர் இறந்துபோனால் வருவாயைப் பெறும் கொடைபெறுநரே, வருவாய்த் தரும் சொத்துகளையும் சேர்த்து எடுத்துக்கொள்வார். இதனை ஆங்கிலத்தில் 'பழமரத் தத்துவம்' (Fruit Tree Doctrine) என்பர். ஒரு மரத்தின்

பழங்களைப் பறிக்க உரிமை கொடுத்தால் அக் கொடை மரத்தையும் சேர்த்துக் கொடுத்ததாகும்.

## Mannox *vs.* Greener LR. 14 EV. 456 (1872)

விருப்பாவணமளித்தவர் தம்முடைய சொத்துகளினின்று வரும் இலாபத்தையும், வருவாயையும், பயன்களையும் அனுபவிக்கும் காலவரையின்றித் தம் பேரப்பிள்ளைகட்குக் கொடையாகக் கொடுத்தார். கொடையினைக் குறிப்பிட்ட கால அளவு தான் அனுபவிக்க வேண்டுமென்ற எண்ணம் தெரிவிக்கப்படாததால் வருவாயோடுகூடச் சொத்துகளையும் சேர்த்துக் கொடையாகக் கொடுத்தார் என்ற கொள்கை உருவாக்கப்பட்டது. இக் கொள்கையினை அடிப்படையாகக் கொண்டு இந்திய வழக்குகளிலும் தீர்ப்பளிக்கப்பட்டது.

## Hemangini Dasi *vs.* Nabichand (8. Cal. 788)

விருப்பாவணமளித்தவர் தம் சொத்துகளின் வாடகை வருவாயினின்று தம் வாரிசுகட்குக் குறிப்பிட்ட பங்குகளைக் கொடுத்தார். ஒவ்வொரு வாரிசுக்கும் கொடுக்கப்பட்ட குறிக்கப்பட்ட பங்கின் அளவின் விகிதப்படியே விருப்பாவணமளித்தவர் தம் சொத்துகளை அவ் வாரிசுகட்குக் கொடுத்திருக்க வேண்டுமென்று தீர்ப்பளிக்கப்பட்டது.

கொடைபெறுநருக்கு வருவாயை மட்டுமே கொடுக்க வேண்டும் என்று தெளிவாக உயிலில் கூறப்பட்டிருந்தால் மேற்சொன்ன விதியைப் பயன்படுத்தவியலாது. இது 'மாறுபட்ட எண்ணம்' என்று கூறப்படுகிறது. 'பி'-க்கும் 'சி'-க்கும் சேர்த்து வருவாயைக் கொடையாகக் கொடுத்து, 'இருவரில் உயிரோடிருப்பவர்' எனக் குறிப்பிட்டிருந்தால் அது மாறுபட்ட எண்ணமாகும்.

**ஆண்டுப் பணக்கொடை (பிரிவு 173—176) (Bequest of annuity)**

ஒருவர் தம் சொத்தினின்று வேறொருவருக்கு அவரது வாழ்நாள்வரை ஆண்டுதோறும் அளிக்கும் ஒரு குறிப்பிட்ட தொகையே ஆண்டுப்பணமாகும் (Williams on Executors 1215 Eds-p. 503). ஆண்டுப்பணங்கள் மூன்று வகைப்படும் (1) குறிப்பிட்ட காலம் வரை கொடுக்கக்கூடியது, (2) வாழ்நாள்வரை கொடுக்கக் கூடியது, (3) நிரந்தரமாகக் கொடுக்கக்கூடியது.

வாழ்நாள்வரை கொடுக்க வேண்டிய ஆண்டுப்பணத்தினைக் கொடையாகக் கொடுப்பதை மட்டும் ஈண்டுக் காண்போம் (பிரிவு 173).

இருக்கும் சொத்துகளினின்று ஆண்டுப்பணம் கொடுக்க, வேண்டுமென்பது பொதுவான முறையாயினும் அல்லது ஆண்டுப் பணம் கொடுக்கும்பொருட்டுச் சில சொத்துகளை வாங்க வேண்டுமென்று குறிப்பிட்டுக் கொஞ்சம் தொகையினை ஒதுக்கி வைத்திருந்தாலும், ஆண்டுப்பணம் கொடுக்க வேண்டும் என்று உயிலில் ஏற்படுத்தப்பட்டு, வேறு எண்ணங்கள் ஏதும் தெரிவிக்கப் படாமலிருந்தாலும் கொடைபெறுநர் தம் வாழ்நாள்வரைதான் ஆண்டுப்பணம் பெறத் தகுதியுடையவர். ஆனால் ஆங்கிலச் சட்டத்தில், ஆண்டுப்பணம் கொடுப்பதன் பொருட்டுச் சொத்து களை வாங்கத் தொகை ஒதுக்கப்பட்டிருப்பின் வாழ்நாள்வரை மட்டுமன்று; நிரந்தரமாக ஆண்டுப்பணம் கொடுக்க வேண்டும் (Halsbury Vol. 14 p......).

கொடைபெறுநரின் வாழ்நாள்வரை ஆண்டுப்பணம் கொடுப் பதற்குச் சொத்துகளை வாங்கப் பணத்தினை உயில்வழிக் கொடையாக ஒதுக்கீடு செய்து, விருப்பாவணமளித்தவருக்குப் பின் கொடைபெறுநர் உயிரோடிருந்தால், அப் பணத்தினையோ அதனைக்கொண்டு வாங்கப்பட்ட சொத்தினின்று வரும் ஆண்டுப் பணத்தினையோ பெறத் தகுதி பெற்றவராவார்.

விருப்பாவணமளித்தவர் இறந்தவுடனேயே கொடைச் சொத்துகளின் உரிமை கொடைபெறுநரைப் போய்ச் சேர்ந்து விடுகிறது. ஆதலால், அப்படி ஒதுக்கீடு செய்யப்பட்ட பணத் தினைச் சொத்துகளை வாங்கப் பயன்படுத்தும் முன்னரோ, கொடை கொடுக்கப்பட்ட உயிலினை நிரூபிக்கும் முன்னரோ கொடைபெறுநர் இறந்துவிட்டாலும், உயில்வழிக் கொடையாளி இறந்தவுடன், கொடை, கொடைபெறுநரைச் சென்றடையும். கொடைபெறுநர் இறந்துவிட்டால் அவரது பின் வாரிசுகளுக்குப் போய்ச் சேரும் (Halsbury Vol. 24. p-481) (பிரிவு 174).

உதாரணமாக: 'ஏ' என்பவர் 'பி' என்பவருக்கு ரூ. 1000/-த்தை ஆண்டுப்பணமாகக் கொடுக்கும்பொருட்டு அதற்கான சொத்துகளை வாங்குவதற்குத் தம் சொத்துகளைப் பயன்படுத்துமாறு நிறைவேற்றாளர்கட்கு உயிலில் குறிப்பிட் டிருந்தார். அப்படி வாங்கப்பட்ட சொத்தினின்று ரூ. 1000/-த்தை ஆண்டுப்பணமாகவோ ஆண்டுப்பணம் கொடுக்கச் சொத்தினை வாங்க வைத்திருக்கும் பணத்தினையோ பெறத் தேர்ந்தெடுக்க 'பி'-க்குத் தகுதியுண்டு.

2. 'ஏ' என்பவர் 'பி' என்பவரின் வாழ்நாள் அனுபவத்திற்கு ஒரு தொகையைக் கொடையாகக் கொடுத்து, 'பி' இறந்த

பின்னர் அத் தொகையினைச் 'சி' என்பவருக்கு ஆண்டுப்பணம் கொடுக்கும்பொருட்டுச் சொத்துகளை வாங்கப் பயன்படுத்தும்படி குறிப்பிட்டிருந்தார். விருப்பாவணமளித்தவர் இறந்தபோது 'பி'-யும் 'சி'-யும் உயிரோடிருந்தனர். 'பி'-யின் வாழ்நாளிலேயே 'சி' இறந்துவிட்டார். 'பி' இறந்த பின்னர், அத் தொகை 'சி'-யின் பிரதிநிதிகட்குச் சொந்தமாகும்.

பிரிவுகள் 173, 174 ஒன்றுபோலவே தோன்றும். ஆனால் இரண்டிற்குமிடையே வேறுபாடுகளுண்டு. ஆயுட்கால ஆண்டுப் பணக்கொடையில் விருப்பாவணமளித்தவரின் வாழ்நாளில் கொடைபெறுநர் இறந்துவிட்டால், கொடை செயல்படாமல் விழலாகிவிடும். காலவரையிலா ஆண்டுப்பணக் கொடையில் விருப்பாவணமளித்தவர் இறந்தவுடன் கொடைபெறுநரின் பேரில் சேர்ந்துவிடுகிறது.

ஆண்டுப்பணக்கொடையும் ஏனைய உயில்வழிக் கொடைகளைப் போன்று ஒரு சாதாரணக் கொடையாகும். எனவே, ஆண்டுப் பணக்கொடை பெறுநருக்கும் உயில்வழிக் கொடைப் பெறுநருக்குமிடையே எந்தவிதப்பாகுபாடும் கிடையாது. விருப்பாவணமளித்தவரின் சொத்துகள் ஆண்டுப்பணக்கொடைகளையும், உயில்வழிக் கொடைகளையும் முழுவதுமாகக் கொடுக்கப் போதாவிட்டால், ஆண்டுப்பணக்கொடைச் சொத்துகளை மதிப்பிட்டு, அம் மதிப்பீட்டுத் தொகையினை உயில்வழிக் கொடையெனக் கொண்டு, ஏனைய கொடைகளோடு சேர்த்து விருப்பாவணமளித்தவரின் சொத்துகள் அனுமதிக்கும் வரையில் விகிதப்படி குறைக்க வேண்டும்.

குறைக்கப்பட்ட மதிப்பீட்டுப் பணத்தை ஆண்டுப் பணக் கொடைபெறுநருக்குக் கொடுக்க வேண்டும் (பிரிவு 175). இவ் விதியினை, இதனையடுத்துவரும் விதி ஓரளவுக்குக் கட்டுப் படுத்தும். ஆண்டுப் பணக்கொடையோடு, எஞ்சிய கொடையும் கொடுக்கப்பட்டிருந்து, விருப்பாவணமளித்தவரின் சொத்துகள் இரு கொடைகளையும் கொடுக்கப் போதாவிட்டால், முதலில் ஆண்டுப் பணக்கொடை முழுவதுமாகக் கொடுத்தபின்னர் ஏதேனும் எஞ்சியிருந்தால் எஞ்சிய கொடைபெறுநர் பெறுவார் என்பது விதி (பிரிவு 176).

**கடனாளருக்கும் பங்குதாரருக்கும் கொடுக்கப்படும் கொடை**

ஆங்கிலச் சட்டத்தில் கடனாளி (Debtor) ஒருவர், தாம் பட்ட கடனுக்குச் சமமாக அல்லது அதற்கு அதிகமான சொத்துகளைக்

கடனாளருக்கு (Creditor) உயில்வழிக் கொடையாகக் கொடுத்தால், எதிர்ச் சாட்சியங்கள் இல்லாதிருந்தால், அக் கொடை, கடனைத் தீர்ப்பதற்காகக் கொடுக்கப்பட்டதாகச் சட்டம் துணிகின்றது. கொடைச் சொத்துகள் கடனைவிடக் குறைவாக இருந்தால் கடனைத் தீர்க்கக் கொடுக்கப்பட்டதாகக் கொள்ள முடியாது. இக் கொள்கை 'Talbot *vs.* Earl of Shrewsbury' என்னும் வழக்கில் உருவாக்கப்பட்டது.

இந்தியச் சட்டம் ஆங்கிலச் சட்டத்தினின்று மாறுபட்டுக் கொடை, கடனையடைக்கும் கொள்கையினை ஏற்காமல், கடனாளர், கொடையினையும் கடன் தொகையினையும் பெறுவார் எனப் பிரிவு 177-ல் கூறுகிறது. கடனாளி ஒருவர் தம் உயிலில் 'கடனையடைப்பதற்காக' எனக் குறிப்பிடாமல், கடனாளருக்கு ஒரு கொடையினைக் கொடுத்திருந்தால், அவர் உயில்வழிக் கொடையோடுகூடக் கடனையும பெறத் தகுதியுடையவராவார்.

பொறுப்புடைய தந்தை ஒருவர், தம் பிள்ளையின் நலனுக்காகத் தம் சொத்தில் ஒரு பகுதியினைக் கொடுக்கக் கடமைப்பட்டிருந்து, அதனைக் கொடுக்கத் தவறி, பின்னர்ப் பிள்ளையின் நலனுக்குக் கொடுக்கப்பட வேண்டிய சொத்தின் பகுதிக்காக என்று கூறாமல் உயில்வழிக் கொடையினைக் கொடுத்தால், அப் பிள்ளை கொடையினையும், நலனுக்காகக் கொடுக்கப்படும் பகுதிச்சொத்தையும் சேர்த்துப் பெறத் தகுதி உடையவர் (பிரிவு 178). இவ் விதியும் ஆங்கிலச் சட்டத்தினின்று மாறுபட்டதாகும். ஆங்கிலச் சட்டத்தில் ஒரு தந்தை தம் பிள்ளைக்குத் தம் சொத்தில் ஒரு பங்கினைக் கொடுக்க வாக்களித்தார். பின்னர், உயில்வழியாக முன் வாக்களித்த பங்கிற்குக் குறைவாகவோ, ஈடாகவோ, அதிகமாகவோ கொடையாகக் கொடுத்தால், வாக்களித்த பங்கினைக் கொடுத்துத் தீர்க்கவே கொடையாகக் கொடுத்தார் எனத் துணிய வேண்டும்.

தந்தையின் பொறுப்பிலுள்ள ஒருவர் தம் பிள்ளைக்கு உயில்வழிக் கொடை ஒன்றினைக் கொடுத்து, பின்னர், ஒரு விழாவின் போது தம் சொத்தில் ஒரு பகுதியினைக் கொடுத்தால் அது உயில்வழிக் கொடையின் ஒரு பகுதியன்று. உயில்வழிக் கொடையினை பின்னர்க் கொடுக்கப்பட்ட பங்கு வறிதாக்காது; அல்லது அதன் அளவுக்குக் கொடையினைக் குறைக்காது; கொடையினையும் பங்கினையும் பெறக் கூடியவர் (பிரிவு 179). இதுவும் ஆங்கிலச் சட்டத்தினின்று மாறுபட்டதே. ஆங்கிலச் சட்டத்தில் தம் பிள்ளைக்கு உயில்வழிக் கொடையினைக் கொடுத்தால்,

பிள்ளைக்கு அவர் கொடுக்க வேண்டிய பங்கு எனக் குறிப்பிடா விட்டாலும், அது கொடுக்க வேண்டிய பங்காகும்; பின்னர் ஒரு விழாவின் போது தம் சொத்தில் ஒரு பகுதியைக் கொடுத்தால், அதன் அளவுக்கு உயில்வழிக் கொடையினை வறிதாக்கும் (ademption). இது 'இருபங்குகட்கு எதிர்விதி' (Rule against double portion) எனப்படும்.

## Jagjivandas *vs.* Brijdas 7 Bom. LR 299

விருப்பாவணமளித்த ஒருவர் தம் மகனின் மகளுக்கு ரூ. 2000/- ஒதுக்கி வைக்கும்படி தம் உயில் நிறைவேற்றாளர்கட்குக் குறிப்பிட்டிருந்தார். அடுத்த நாள் தம் வரவுசெலவுக் கணக்குப் புத்தகத்தில் ரூ. 2000/-த்தை மகனின் மகளுக்குக் கொடுத்ததாகக் காட்டி அவளது கணக்கில் வரவு வைத்திருந்தார். இரு கொடைகளும் வெவ்வேறு; ஆதலால் கொடைபெறுநர் இரண்டையும் பெறக்கூடியவர் எனத் தீர்க்கப்பட்டது.

# 21. தேர்ந்துகொளல் வரைவுக் கோட்பாடு (பிரிவு 180-190)

(Doctrine of Election)

இக் கோட்பாடு நேர்மை நெறியினை நாடுகின்றவர் நேர்மை நெறியினைச் செய்ய வேண்டுமென்ற கூற்றினைச் சார்ந்தது. விருப்பாவணமளித்தவர், தம்முடைய உயிலின் மூலமாகத் தம் முடையதல்லாத வேறொருவருடைய சொத்திற்கு வகைசெய்து (dispose of) அவ் வேறொருவருக்கு அவ்வுயிலின் மூலமாகவே தம் முடைய சொத்தின் பயனைக் கொடுத்தால், அவ் வேறொருவர் உயில்வழிப் பயனைப் பெற்றுக்கொண்டு தம்முடை சொத்தினை விருப்பாவணமளித்தவர் வகுத்தமைக்கும்படி கைவிடவேண்டும் அல்லது உயில்வழிப் பயனைப் பெற்றுக்கொள்ளாமல் தம்முடைய சொத்தினையே வைத்துக்கொள்ள வேண்டும். இவ் இரண்டி லொன்றைத் தேர்ந்துகொள்ள வேண்டும். இதனையே 'தேர்ந்து கொளல் வரைவுக் கோட்பாடு' என்பர். இக் கோட்பாடு செயல்பட இரு சொத்துகள் இருக்க வேண்டும். ஒன்று விருப் பாவணமளித்தவருக்குச் சொந்தமாகவும், மற்றொன்று உயில் வழிப் பயனடைபவருக்குச் சொந்தமாகவும் இருக்க வேண்டும்.

உயில்வழிப் பயனடைபவருக்கு அப் பயனைப் பெறலாமா வேண்டாவா என்ற இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் நிர்ப்பந்தமான சூழ்நிலை ஏற்படுகின்றது. பயனைப் பெற விரும்பினால் தம்முடைய சொத்துகளை உயிலில் கண்டபடி விருப்பாவணமளித்தவர் வகைசெய்ய அனுமதிக்க வேண்டும். இக் கோட்பாட்டின் உள்நோக்கம் யாதெனில் ஒருவர் ஓர் ஆவணத்தை ஒரே சமயத்தில் ஏற்றுக்கொள்ளவோ, புறக் கணிக்கவோ அல்லது பயனைமட்டும் பெற்றுக்கொண்டு எஞ்சியதைத் தள்ளிவிடவோ இயலாது.

இக் கோட்பாடுகளை இந்திய வாரிசுரிமைச் சட்டம் பிரிவு 180 முதல் 190 வரையில் காணலாம். இவைகளைச் சொத்துஉரிமை மாற்றுச் சட்டம் 35 ஆவது பிரிவிலும் காணலாம்.

**தேர்ந்துகொளல் வரைவுக் கோட்பாட்டிற்குத் தேவையானவை**

இக் கோட்பாட்டினைப் பயன்படுத்தப் பின்வரும் நிபந்தனைகள் மிகவும் அவசியமானவை :

1. விருப்பாவணமளித்தவர் தம்முடைய உயில்வழியாகத் தம்முடையவற்றை ஒருவருக்குக் கொடுத்துப் பயனடையும் அந்நபரின் சொத்துகளை வேறொருவக்குக் கொடுக்க முயல வேண்டும். தமதல்லாத சொத்தினைக் கொடுக்க முயலும் போது, சொத்தினை இழப்பவருக்கு விருப்பாவணமளித்தவர் தம்முடையவற்றை கொடுக்க வேண்டும். இல்லையெனில், அவ்வுரிமை மாற்றம் இக் கோட்பாடுகளின்கீழ் வாராது என பிரிஸ்டவ் எ. வார்டே (1794) 2 Ves. 336 என்னும் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது. பொதுக் குடும்பச் சொத்தினை ஒருவர் தம்முடைய உயில் மூலமாக உடன் பங்குரிமையருக்குக் (Coparcener) கொடுக்கிறார். பங்குரிமையருக்கும் அச் சொத்தில் தனிப்பட்ட முறையில் உரிமையுண்டு. ஆதலால் அவர் தம்முடைய உரிமையைத் துறந்த உயில்வழியாகப் பயனையடைகிறார் எனக் கொள்ள வியலாது. எனவே, தமக்குச் சொந்தமான, தமக்கு வரும் பயன் இவை இரண்டிலொன்றை அவர் தேர்ந்தெடுக்க வேண்டிய நிர்பந்தத்திலில்லை என வள்ளியம்மாள் எ. நாகப்பா (AIR. 1967 S. C. 1153) என்ற வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

2. விருப்பாவணமளித்தவர் உயில்வழியாக மூன்றாம் நபருக்குக் கொடுக்க முயலும் சொத்துகள் உயில்வழி முதலில் பயனடைபவருக்குச் சொந்தமானதாக இருக்க வேண்டும். உயில்வழியாக முதலில் பயனடைபவர் தமக்குச் சொந்தமான சொத்தினையே வைத்துக்கொள்வதா, அதனைத் துறந்து வரும் பயனையடைவதா என்ற இருநிலைகளிலொன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டிய நிர்பந்தத்திலிருக்க வேண்டும். அச் சொத்துகள் தம்முடையவைகளா அல்லவா என்று விருப்பாவணமளித்தவர் அறிந்திருக்கத் தேவையில்லை. தேவையான தெல்லாம் அச் சொத்துகள் அவருடையனவாக இருக்கக்கூடாது. உயில்வழியாக முதலில் பயனடைபவர் அச் சொத்துகள் தமதென்று உரிமை பாராட்டாவிட்டால் இக் கோட்பாட்டினைப் பயன்படுத்த வியலாது.

3. உயில்வழி உரிமைக்கும், உயிலுக்கு எதிரிடையான உரிமைக்குமிடையேதான் இக் கோட்பாட்டினைப் பயன்படுத்த முடியும். (The doctrine is applicable only as between a claim under the will and claim dehors the will and adverse to it.)

இக் கோட்பாட்டினை உடனடியாகப் பெறும் நலன்களுக்கும், காலந்தாழ்த்திப் பெறும் நலன்கட்கும், நிகழ்வுடைவுரிமைகட்கும், (Contingent) அசையும் அசையாச் சொத்துகளைச் சார்ந்த உரிமைகட்கும் பயன்படுத்தவியலும். இக் கோட்பாட்டினைப் பயன்படுத்துவதில் உயில்வழி உரிமையருக்குள் எந்தவிதப் பாகுபாடும் கிடையாது. கொடையளிப்பவரின் தகுதியின்மையின் காரணத்தினால் கொடை செல்லாதொழிந்தால் இக் கோட்பாட்டினைப் பயன்படுத்தவியலாது. கொடைச் சட்டத்திற்கு முரணாயிருந்தாலும் இக் கோட்பாட்டினைப் பயன்படுத்தவியலாது. இதனை இங்கிலாந்து நாட்டில் முதன்முதலில் உயில்களுக்கு மட்டுமே பயன்படுத்திப் பின்னர் மாற்றளிப்பாவணங்கட்கும் (Conveyance) அறுதி ஆவணங்கட்கும் (Settlements) பயன்படுத்தினர். உயிலினை உருவாக்கிய தேதிக்குப் பின்னர் விருப்பாவணமளித்தவருக்கும் உயில்வழி உரிமையருக்குமிடையே சொத்துகளைத் தேர்ந்துகொள்வதில் உண்டான உடன்படிக்கையைக் கொண்டு இக் கோட்பாட்டினைப் பயன்படுத்தலாம். அவ்வுயில்வழி உரிமையருக்குக் கொடுக்கப்பட்ட கொடை கடைசியாக இருந்தாலும் இக் கோட்பாட்டினைப் பயன்படுத்தலாம். ஏனெனில், உயில் விருப்பாவணமளித்தவர் இறந்த தேதியினின்று தான் அமலுக்கு வருகிறது.

இக் கோட்பாடு இந்துக்களையும் சேர்த்து இனமுறைச் சட்டத்தினால் கட்டுப்படுத்தப்படும் அனைவருக்கும் பயன்படும்.

### சோமாபாய் எ. செல்லம் (AIR 1939 M. 485)

ஓர் இந்து தமது உயிலில் கொடைக்கும் தருமத்திற்கும் சொத்துகளை ஒதுக்கிய பின்னர், தந்தி இலாகாவினின்று தமக்கு வரும் பிராவிடன்ட் பண்டுப் பணத்தையும், முயூச்சுவல் பெனிபிட் பண்டிலும் கூட்டுறவு கிரெடிட் சொசைடியிலும் போட்டு வைத்திருந்த பணத்தையும், தம்முடைய சொத்துளைச் சேகரித்து அவற்றில் பாதியைத் தம்முடைய மனைவிக்கும் தலைக்குக் கால் பங்காக இரு மகள்களுக்கும். கொடுக்கும்படி தம்முடைய உயில் நிறைவேற்றாளர்கட்குக் குறிப்பிட்டிருந்தார். அவர் இறந்த பின்னர் மனைவியும் இரு மகள்களும் உயிரோடிருந்தார்கள். அந்த மனைவியும் இறந்த பின்னர் ஒரு மகள், மற்ற மகளின் மீதும் (தனது தாயின்) மனைவியின் உயில் நிறைவேற்றாளர் மீதும் வழக்குத் தொடுத்தார். அம் மனைவி பிராவிடன்ட் பண்டுப் பணத்திற்கு வாரிசானதினால் அப் பணத்தோடு, விருப்பாவணமளித்தவரின் ஏனைய சொத்தில் பாதியையும் பெறுவாரா அல்லது இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டுமா என்ற வினா

அவ் வழக்கிலெழுந்தது. பிராவிடன்ட் பண்டுச் சட்டம் அரசினர் நிருவகிக்கும் நிதிகட்கே பொருந்தும். ஆகையால், அம் மனைவி பிராவிடன்ட் பண்டுப் பணம், ஏனைய சொத்துகள் இவை இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஆனால், அவர் தமது வாழ்நாளில் தேர்ந்தெடுக்கவில்லை. ஆதலால் அவரது உயிலில் நிறைவேற்றாளர் தேர்ந்தெடுக்கலாமென்று தீர்ப்பளிக்கப்பட்டது.

4. விருப்பாவணமளித்தவரின் உயில்வழியாக வரும் சொத்துகளைப் பெறுபவர் கைவிடும் சொத்துகளின்பேரில் அவருக்கு உரிமை இருக்கவேண்டும். அப்படி இல்லையானால் அவருக்குத் தேர்ந்தெடுக்கும் உரிமை கிடையாது.

5. விருப்பாவணமளித்தவர் உயில்வழிக் கொடையாளரின் சொத்துகளை வகுத்தமைத்தலும், அவருக்குத் தம்முடைய சொத்துகளைக் கொடுத்தல் ஆகிய இரு கொடைகளும் ஒரே ஆவணத்தில் சொல்லப்பட்ட ஒரே செயலாக இருக்க வேண்டும். தனித்தனிச் செயல்களானால் உயில்வழிக் கொடையாளருக்குக் கொடுக்கப்படும் நலனும் அவரிடமிருந்து எடுக்கப்படும் சொத்துகளும் ஒரே செயலாக இருக்கவேண்டும். ஓர் ஆவணத்தின்கீழ் ஒருவருக்குரிய சொத்தினை வேறொருவருக்கு கொடுத்துவிட்டு வேறோர் ஆவணத்தின்கீழ் அந்த ஒருவருக்கு ஒரு நலனைக் கொடுத்தால் இரண்டும் தனித்தனிச் செயல்களாகும். அதற்குத் தேர்ந்தெடுக்கும் இக் கோட்பாட்டினைப் பயன்படுத்தவியலாது.

## Muhammed Afzul *vs.* Ghullam Kasim (1903) 30 Cal. 843

நவாப் ஒருவர் இறந்தவுடன் அவரது மூத்த மகனுக்கு அத் தலைமைப் பதவியைக் கொடுத்து, நவாபுக்குக் கொடுத்துவந்த ரொக்கப்படியின் (Cash Allowance) ஒரு பகுதியை இரண்டாம் மகனுக்கு அரசு அளித்தது. முன்பே நவாப் இரண்டாம் மகனுக்கு வாழ்க்கைப் பொருளுதவியாக இரு கிராமங்களை அளித்திருந்தார். இவ்விரு கொடைகளும் ஒன்றையொன்று சார்ந்திராமல் தனித்தனியாக வெவ்வேறு சமயங்களில் கொடுக்கப்பட்டிருப்பதால் இரண்டாம் மகன் இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டியதில்லை எனப் பிரிவி கவுன்சில் தீர்ப்பளித்தது.

6. தேர்ந்துகொளல் கோட்பாட்டினைப் பயன்படுத்துகின்றவர் உயில்வழியாக நேரடியாகப் பயன்பெறுகிறவராக இருத்தல் வேண்டும். உயில்வழியாக நேரடியாகப் பயன்பெறாமல் மறை

முகப் பயன் பெறுவாரேயானால், அவர் இக் கோட்பாட்டினைப் பயன்படுத்த முடியாது.

எடுத்துக்காட்டு :

(அ) ஒரு விருப்பாவணமளித்தவர் தமது உயில்வழியாக 'சி'-க்குச் சொந்தமான சொத்துகளை 'பி'-க்குக் கொடையாகக் கொடுத்தார். 'டி'-க்கு ரூ. 1000-ஐ உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார்; 'சி'-க்கு ஒன்றும் கொடுக்கவில்லை. பின்னர் 'சி'-யின் சொத்துகளை 'டி' விலைக்கு வாங்கிக்கொள்கிறார். இரண்டிலொன்றைத் தேர்ந்துகொள்ள 'டி' அனுமதிக்கப்பட மாட்டார்.

(ஆ) சுல்தான்பூர் நிலங்கள் 'சி'-யின் வாழ்நாள்களுக்கும் அவர் இறந்த பின்னர், அவரது ஒரே மகன் 'டி'-க்கும் கொடுக்கப் படுகிறது. 'ஏ' என்பவர் சுல்தான்பூர் நிலங்களை 'பி'-க்கும் ரூ. 1000-ஐ 'சி'-க்கும் உயில்வழிக் கொடையாகக் கொடுக்கிறார். விருப்பாவணமளித்தவர் இறந்த சிறிது காலத்திற்குள் 'சி'-யும் உயில் எழுதி வைக்காமலும், தம்முடைய ஆயுள் பாத்தியச் சொத்து, கொடை ரூ. 1000-ல் இரண்டிலொன்றைத் தேர்ந் தெடுக்காமலும் இறந்துவிடுகிறார். 'சி'-யின் சொத்துகளின் திருவாகி என்ற நிலையில் 'D' உயில்வழியாகப் பயனடையத் தேர்ந்தெடுக்கின்றார். அந்தத் தகுதியில் ரூ. 1000-ஐக் கொடையாகப் பெற்றுக்கொண்டு, விருப்பாவணமளித்தவர் இறந்த பின்னரும் 'சி' இறக்கு முன்னருமான இடைப்பட்ட காலத்தில் சுல்தான்பூர் நிலங்களிலிருந்து வந்த வருவாய்க்கு 'பி'-க்குக் கணக்கு ஒப்புவிக்கிறார். தம்முடைய சொந்தத் தகுதியில் உயிலுக்கு எதிராகச் சுல்தான்பூர் நிலங்களைத் தம்மிடமே வைத்துக்கொள்கிறார். உயிலின்வழியாக நேரடியாகப் பயன் பெறாமல் மறைமுகமாகப் பயனடைவோர் தேர்ந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார். ஒருவர் உயில்வழியாக உரிமை கோரும்போது, சட்டத்தின் வாயிலாக வந்தடையும் உரிமைகள் உயிலுக்கு எதிராக இருந்தாலும் அவைகளைப் பெறுவதை இக் கோட்பாடு தடை செய்யாது.

7. ஓர் ஆவணத்தின் கீழ்வரும் பயனைத் தம்முடைய சொந்தத் தகுதியில் பெற்றுக்கொண்டு வேறுபட்ட தகுதியில் வரும் பயனை உயிலுக்கு எதிராகவும் தேர்ந்துகொள்ளலாம் (பிரிவு 185).

உதாரணம் :

சுல்தான்பூர் பண்ணை 'ஏ'-யின் ஆயுட்காலப் பாத்தியதைக் கும் அவரது மறைவிற்குப்பின் 'பி'-க்கும் கொடுக்கப்படு

கிறது. 'ஏ' சுல்தான்பூர் பண்ணையினை 'டி'-க்கும், ரூ. 2000-ஐ 'பி'-க்கும், ரூ. 1000-ஐ 'பி'-யின் ஒரே மகனான 'சி'-க்கும் கொடுக்கிறார். விருப்பாவணமளித்தவர் இறந்த பின்னர்ச் சிறிது காலத்திற்குள் 'பி'-யும் உயில் எழுதி வைக்காமலும் தமக்குக் கொடுக்கப்பட்ட சொத்து, கொடை ரூ. 2000-ல் இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுக்காமலும் இறந்துவிடுகிறார். 'பி'-யின் சொத்துகளின் நிருவாகப் பொறுப்பைச் 'சி' ஏற்கிறார். 'பி' யின் சொத்துகளின் நிருவாகி என்ற தகுதியில் சுல்தான்பூர்ப் பண்ணையை வைத்துக் கொண்டு, உயில்வழிக் கொடை ரூ. 2000-ஐக் கைவிடுவதாக உயிலுக்கு எதிராகத் தேர்ந்தெடுக்கிறார். தமக்குக் கொடுக்கப்பட்ட உயில்வழிக் கொடை ரூ. 1000-ஐப் பெறுகிறார்.

ஆவணத்தில் குறிப்பிட்ட முதல்நிலைக் கொடைபெறுநர் (Legatee) அவ் வாவணத்திற்கு எதிராகத் தேர்ந்தெடுப்பதால் இரண்டாம் நிலைக் கொடைபெறுநருக்கு வரவிருக்கும் கொடையினைச் செயல்படாமல் தடுக்கின்றார். ஆதலால், ஆவணத்திற்கு எதிராகத் தேர்ந்தெடுத்த முதல்நிலைக் கொடைபெறுநர் 'இசைந்துவாராக் கொடைபெறுநர்' (Refracting Donee) என அழைக்கப்படுவார். இசைந்துவாராக் கொடைபெறுநர் தம்முடைய சொத்துகளைத் தாமே வைத்துக்கொள்ளத் தேர்ந்தெடுப்பதால் இரண்டாம் நிலைக் கொடைபெறுநர் கொடையினைப் பெறாமல் ஏமாற்றமுறுகிறார். எனவே, இரண்டாம் நிலைக் கொடைபெறுநர் 'ஏமாற்றமுற்ற கொடைபெறுநர்' (Disappointed Donee) என அழைக்கப்படுவார்.

ஆங்கிலச் சட்டத்தில் இசைந்தவராகக் கொடைபெறுநர் உயிலுக்கு எதிராகத் தேர்ந்தெடுக்கப்படும்போது தம்முடைய சொத்துகளைத் தம்வசமே வைத்துக்கொண்டு, ஆவணத்தில் கண்டுள்ள கொடைப் பயன்களையும் பெறலாம். தம்முடைய சொத்துகளைத் தாமே வைத்துக்கொள்ள விரும்பும்போது உயில் வழிக் கொடைப் பயன்களைக் கைவிட வேண்டியதில்லை. தம்முடைய சொத்துகளைக் கைவிடுவதற்குப் பதிலாக அதன் மதிப்பிற்கு ஈடான பணத்தை ஏமாற்றமுற்ற கொடைபெறுநருக்கு இழப்பீடாகக் (Compensation) கொடுக்க வேண்டும்.

இந்தியச் சட்டத்தில் இசைந்துவாராக் கொடைபெறுநர் உயிலுக்கு எதிராகத் தேர்ந்தெடுக்கும்போது உயில்வழியாகத் தமக்கு வரவிருக்கும் கொடையினை இழப்பார். உயில்வழிக் கொடையினை அவர் உதறித் தள்ளும்போது, அவரது சொத்தின்

மதிப்பிற்கு ஈடான தொகையை அவர் உதறித் தள்ளின உயில் வழிக் கொடையினின்று ஏமாற்றமுற்ற கொடைபெறுநருக்குக் கொடுத்துவிட்டு, மீதிக்கொடை பிரிவு 103-ன்கீழ் விருப்பாவணமளித்தவரின் எஞ்சிய சொத்துகளோடு சேர்க்கப்பட்டு எஞ்சிய கொடையாகக் கொடுக்கப்படும். எஞ்சிய கொடையில்லையானால், உயில்வழியில் இறந்தவரது சொத்துகளாகக் கருதப்படும்.

**உதாரணம் :**

சுல்தான்பூர் பண்ணை 'சி' என்பவருக்குச் சொந்தமானது. அதனை 'ஏ' என்பவர் 'பி' என்பவருக்கு உயில்வழிக் கொடையாகக் கொடுத்து, 'சி'-க்கு ரூ. 1000-ஐ உயில்வழிக் கொடையாகக் கொடுத்தார். 'சி' ரூ. 800 மதிப்புள்ள தம்முடைய பண்ணையைத் தாமே வைத்துக்கொள்வது எனத் தேர்ந்தெடுத்தார். 'சி' தமக்கு வரவிருந்த உயில்வழிக் கொடை ரூ. 1000-த்தை இழப்பார். அத் தொகையில் ரூ. 800 'பி'-க்குப் போய்ச் சேரும். மீதி ரூ. 200 எஞ்சிய கொடையாகவோ வாரிசுரிமை வழியாகவோ செல்லும்.

### விதிவிலக்கு—பிரிவு 186

விருப்பாவணமளித்தவர் முதல்நிலை உயில்வழிக் கொடைபெறுநரின் சொத்துகளை வகைசெய்வதற்கு ஈடாக ஒரு குறிப்பிட்ட கொடை கொடுப்பதாக உயிலில் குறிப்பிட்டிருந்தால் முதல்நிலை உயில்வழிக் கொடைபெறுநர் தம்முடைய சொத்துகளைத் தாமே வைத்துக்கொள்ள விரும்பும்போது குறிப்பிட்ட கொடையினை மட்டுமே இழப்பார். அதே உயிலில் கூறப்பட்டுள்ள ஏனைய கொடைகளை அவர் இழக்க வேண்டியதில்லை. ஏனெனில் இரு கொடைகளும் தனித்தனியானவை.

**உதாரணம் :**

'ஏ'-யின் திருமண முடிவின்படி அவரது மனைவி அவருக்குப் பின் உயிரோடிருப்பின் அவளது வாழ்நாள் முழுவதும் சுல்தான்பூர் சொத்தினை அனுபவிக்க உரிமையுண்டு. 'ஏ' தமது உயில் வழியாகச் சுல்தான்பூர் சொத்துகளைத் தமது மகனுக்குக் கொடுத்து, அச் சொத்தின்மீது தமது மனைவிக்கு இருந்த உரிமைக்குப் பதிலாக ஆண்டுப் பணமாக (Annuity) ரூ. 200-ஐ மனைவிக்குக் கொடுக்கிறார். தமது மனைவிக்கு ரூ. 1000-ஐக் கொடையாகவும் கொடுக்கிறார். திருமண முடிவின்படி தமக்குரிய உரிமைகளையே அவரது விதவை தேர்ந்தெடுக்கிறார். அவ் விதவை ஆண்டுப் பணத்தை இழக்க வேண்டுமேயல்லாமல் தமக்கு

கொடுக்கப்பட்ட கொடை ரூ. 1000-த்தை இழக்க வேண்டிய தில்லை.

இக் கோட்பாட்டின் 'அடிப்படையில் ஒருவருக்கு ஓர் உயில் வழிக் கொடையினைக் கொடுத்து அவரது சொத்துகளைக் கைவிட வேண்டும் என்ற நிலையில் அவர் இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டும். எதைத் தேர்ந்தெடுத்தாலும் அத் தேர்வு இறுதியானதே. அதன்பிறகு அம் முடிவினை மாற்றி யமைக்கலாகாது. அவரும், அவரது பிரதிநிதிகளும் அம் முடிவிற்குக் கட்டுப்பட்டவர்களே. ஆகையால், தேர்ந்தெடுப் பவர் சில சமயங்களில் சரியான விவரங்களின்றி அறியாமையிலும் தேர்ந்தெடுக்கலாம், அல்லது மற்றவரின் ஏமாற்றுதலுக்கு ஆளாகியும் தேர்ந்தெடுக்கலாம். எனவே, அறியாமையினாலும் ஏமாற்றத்திற்குள்ளாகி நியாயமான தவற்றினாலும் தேர்ந் தெடுத்தல், அவரைக் கட்டுப்படுத்தாது. தேர்ந்தெடுத்தலுக்கான சரியான விவரங்களையும் சூழ்நிலைகளையும் அறியாமல் ஒருவர் தேர்ந்தெடுக்க வேண்டியதில்லை. உயில்வழிக் கொடையினை ஏற் றுக்கொண்டோ, அதற்கு எதிராகவோ தேர்ந்துகொண்டு விருப் பத்தினைத் தெரிவிக்க வேண்டுமென்று அறிந்தும்கூட ஒருவர் தமது தேர்ந்தெடுத்தலைத் தெரிவிக்காமல் கொடைச் சொத்துகளை அனுபவிக்கின்றார் என்றால் அச் செயலினைக் கொண்டே அவர் அக் கொடைச் சொத்துகளை ஏற்கத் தேர்ந்துகொண்டார் எனத் தெளிவாகிறது.

தேர்ந்தெடுத்துக் கொண்டதை, வெளிப்படையாக அறிவிப் பதன் மூலமாகவும் அல்லது நடத்தையின் மூலம் உட்கிடை யாகவும் தெரிவிக்கலாம். உயில்வழிக் கொடையினை ஏற்றுக் கொண்டார் என்பதனை நடத்தையின் மூலம் உட்கிடையாக அனுமானிக்கச் சில காரணங்களும் தேவை. தேர்ந்தெடுக்கும் உரிமை தமக்குண்டு என்று அவர் அறிந்திருக்க வேண்டும். அவ் வுரிமையினைப் பயன்படுத்த எண்ணியிருக்க வேண்டும். வர விருக்கும் கொடையின் மதிப்பீட்டினையும் அவர்களின்பேரில் தமக்குண்டான உரிமைகளையும் நன்கு அறிந்தவராக இருக்க வேண்டும். மேற்கண்ட உரிமையினையும், சொத்துகளின் விவரங் களையும் நன்கு அறியாமல் தேர்ந்தெடுத்துக் கொண்டால் அத் தேர்வு அவரைக் கட்டுப்படுத்தாது என்று முன்னரே கண்டோம். ஆனால், தேர்ந்துகொள்ளுவதில் தமக்குரிய உரிமையினையும் கடமையினையும் அறியாமலிருந்து ஆனால் போதிய விசாரணை கள் செய்திருந்தால் அவ் வுரிமைகளைப் பற்றி அறியலாம் எனத் தெரிந்திருந்தும் வேண்டுமென்றே விசாரிக்காமல் விட்டிருந்தால் அவரது தேர்ந்துகொளல் அவரைக் கட்டுப்படுத்தும்.

**உதாரணம்:**

1. கூடுவாஞ்சேரிப் பண்ணை 'ஏ' என்பவருக்குச் சொந்தமானது. காட்டுப்பாக்கம் பண்ணையில் அவருக்கு ஆயுட்காலப் பாத்தியம். அவருக்குப் பிறகு அப் பண்ணை அவருடைய மகன் 'பி'-க்குப் போய்ச் சேரும். 'ஏ' தமது உயிலில் கூடுவாஞ்சேரிப் பண்ணையை 'பி'-க்கும், காட்டுப்பாக்கம் பண்ணையைச் 'சி'க்கும் கொடுக்க வேண்டுமென்று எழுதியிருந்தார். காட்டுப்பாக்கம் பண்ணையின் பேரில் தமக்குரிய உரிமையை அறியாமல் 'சி' அதை எடுத்துக்கொள்ள அனுமதித்துவிட்டுக் கூடுவாஞ்சேரிப் பண்ணையை எடுத்துக் கொண்டார். சொத்துகளின் பேரில் தமக்குரிய உரிமைகளையறியாமல் 'பி' நடந்துகொண்டதால் அச் செயல் அவரைக் கட்டுப்படுத்தாது. ஆகையால், காட்டுப்பாக்கம் பண்ணை 'சி'-க்குக் கொடையாகக் கொடுக்கப்பட்டதை 'பி' ஒப்புக்கொண்டார் எனக் கொள்ள முடியாது.

2. அரும்பாக்கம் பண்ணை 'ஏ'-ன் மூத்த மகன் 'பி'யின் வசத்திலிருக்கிறது. 'ஏ' தமது உயில்வழிக் கொடையாக அரும்பாக்கம் பண்ணையினைச் 'சி' என்பவருக்கும், எஞ்சியுள்ள தமது சொத்துகளை 'பி'-க்கும் எழுதிவைக்கிறார். 'ஏ'-ன் எஞ்சியுள்ள சொத்துகளின் மதிப்பு ரூ. 5000 இருக்கும் என அவரது நிறைவேற்றாளர்கள் கூறியதைக்கொண்டு அரும்பாக்கம் பண்ணையினைச் 'சி' எடுத்துக்கொள்ள அனுமதிக்கிறார். 'ஏ'-ன் எஞ்சிய சொத்துகள் ரூ. 500-க்கும் மிகாது என 'பி' பின்னர்தான் கண்டுபிடிக்கிறார். ஈண்டு 'பி' ஏமாற்றப்பட்டுவிட்டதால் அவர் அரும்பாக்கம் பண்ணை 'சி'-க்குக் கொடையாகக் கொடுக்கப்பட்டதை ஒப்புக்கொண்டார் எனக் கொள்ளவியலாது.

உயில்வழிக் கொடையினைப் பெற்றுக்கொண்டு அதனைப் பெறுவதில் தம்முடைய வெறுப்புகளைத் தெரிவிக்காமல் இரண்டாண்டு காலம் அனுபவித்துவந்தால், அக் கொடையினை ஏற்றுக்கொண்டார் என யூகிக்கலாம். அவர் அக் கொடையினை ஏற்றுக்கொள்ளவில்லை என்று தகுந்த சாட்சியங்களுடன் மெய்ப்பித்தலின் மூலம் மேற்சொன்ன யூகத்தினைக் களையக்கூடும். ஆங்கிலச் சட்டத்தில் இதுபோன்ற காலக்கெடு ஏதும் கிடையாது.

இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுக்கும் கடமையினை உணர்ந்த பின்னரும் தேர்ந்தெடுக்காமல் உயில்வழிக் கொடைச் சொத்தின் பேரில் உரிமை பாராட்டி அனுபவித்தால், அதன் தன்மை மாற்றப்பெற்று, இரண்டாம் நிலைக் கொடை பெறுநருக்கு அச் சொத்தினைத் தான் பெற்றநிலையில் கொடுக்க

வியலாது என்றேற்படும் நிலையில் அவரது சொத்துகளையே வைத்துக்கொள்ள அனுமதிக்கப்படமாட்டார்.

'ஏ' என்பவர் தமது உயில்வழியாகச் 'சி'-க்குச் சொந்தமான சொத்தினை 'பி'-க்கும், ஒரு நிலக்கரிச் சுரங்கத்தினை 'சி'-க்கும் கொடையாகக் கொடுக்கிறார். 'சி' சுரங்கத்தின் உடைமையைப் பெற்றுக்கொண்டு நிலக்கரி முழுவதையும் தீர்த்துவிடுகிறார். இச் செயலின் மூலம் தம்முடைய சொத்துகளை 'ஏ' என்பவர் 'பி'-க்குக் கொடையாகக் கொடுத்ததைச் 'சி' உறுதிசெய்கிறார்.

### தேர்ந்துகொள்ளக் காலக்கெடு

தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய சொத்துகளின் விவரங்களை முதல்நிலைக் கொடைபெறுநர் அறிந்தாலொழிய அவர் இரண்டி லொன்றைத் தேர்ந்துகொண்டார் எனக் கூறமுடியாது எனப் பார்த்தோம். விவரங்களையறிந்து தேர்ந்துகொள்ளப் போதிய காலம் அனுமதிக்கப்படவேண்டும். இக் காலக்கெடுவினை இந்திய வாரிசுரிமைச் சட்டம் பிரிவு 337 கூறுகிறது. உயிலின் கர்த்தா (Testator) இறந்த நாளினின்று ஓராண்டுக்குள் தமது தேர்ந்து கொள்ளுதலைத் தெரிவிக்க வேண்டும். இக் காலக்கெடு முடிந்த பின்னரும் கொடைபெறுநர் தமது எண்ணத்தைத் தெரிவிக்கா விடில், உயில் நிறைவேற்றாளர்கள் அவருக்கு ஓர் அறிக்கையினை அனுப்பி அவ் வறிக்கை பெற்ற பின்னாக் குறிப்பிட்ட சமயத் திற்குள் அவர் தேர்ந்துகொள்ள வேண்டும் என்று அறிவிக்க வேண்டும். அதன்பிறகும் அவர் தெரிவிக்காமலிருந்தால் உயிலில் கூறப்பட்டபடி கட்டுப்படத் தேர்ந்துகொண்டார் என அனு மானிக்கப்படுவார். ஆங்கிலச் சட்டத்தில் காலக்கெடு ஏதும் குறிப்பிடப்படவில்லை. ஆனால் குறிப்பிட்ட கால அளவிற்குள் தேர்ந்தெடுக்கும்படி நீதிமன்றத்தால் உணர்த்தப்பட்டிருந்து அக்கால அளவிற்குள் அவர் தேர்ந்தெடுக்கப்படவில்லையானால் உயிலுக்கு எதிராகத் தேர்ந்தெடுத்தார் எனக் கருதப்படுவார்.

### தேர்ந்தெடுத்தலைத் தள்ளிப்போடல்

கொடைபெறுநருக்குத் தகுதி குறைவுற்றால் அக் குறைவு நிறைவாகும்வரை தேர்ந்தெடுத்தலைத் தள்ளிப்போடலாம். அல்லது உரிமை பெற்ற பிறர் தேர்ந்தெடுக்கும் வரையும் தள்ளிப் போடலாம். தேர்ந்தெடுக்க வேண்டியவர் வயதுவராதவராக இருந்தால் அவர் வயது வரும்வரை தள்ளிப்போடலாம் அல்லது அவரது காப்பாளர் தேர்ந்தெடுக்கும் வரையில் தள்ளிப்போட லாம்.

# 22. மரணக் கொடை அல்லது மரணத்தை எதிர்நோக்கியுள்ளவர் அளிக்கும் கொடை (பிரிவு 191)

கொடையென்பது உயிரோடிருக்கும் இருவரிடையே எந்த வித மறுபயனையும் எதிர்நோக்காமல் ஒரு சொத்துக் கொடுக்கப் படும் செயலைக் குறிப்பதாகும். மரணத்தறுவாயில் இருக்கும் ஒருவர் கூடத் தம்முடைய அசையும் சொத்துகளைக் கொடையாகக் கொடுக்கலாம். அதனையே பிரிவு 191 கூறுகிறது. அசையாச் சொத்தாயின் சொத்து மாற்றுச் சட்டம் பிரிவு 129-ன் கீழ்வரும்.

உயில்வழியாகக் கொடுக்கக்கூடிய அசையும் சொத்துகளை மரணத்தை எதிர்நோக்கியுள்ள ஒருவர் கொடையாகக் கொடுக்கலாம்.

நோயுற்று, அந் நோயினால் விரைவில் மரணத்தை எதிர் நோக்கியுள்ள ஒருவர் யாதோர் அசையும் சொத்தின் ஒப் படைப்பை மற்றொருவருக்களித்து, கொடையளித்தவர் அந் நோயினால் இறந்துபோனால் கொடையாக வைத்துக்கொள்ளும் படி கொடுத்தலே மரணத்தை எதிர்நோக்கிக் கொடுக்கும் கொடையாகும்.

அக் கொடையினைக் கொடுத்தவர் அதனைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். நோய்வாயின்போது கொடுக்கப்பட்ட கொடை அவர் மீண்டெழும்போதும் அவருக்குமுன் கொடை பெறுநர் இறக்கும்போதும் செயலிழக்கும்.

மரணத்தறுவாயிலிருப்பவர் அளிக்கும் கொடையினை உரோமச் சட்டத்தில் 'Donatio Mortis Causa' என்றழைப்பர்.

ஒரு கொடையினை மரணக்கொடையெனக் கூறுவதற்குப் பின்வரும் குணாதிசயங்கள் இருக்கவேண்டும்.

1. கொடையாளி விருப்பாவணத்தின்மூலம் வகுத்தமைக்கக் கூடிய அசையும் சொத்தாக இருக்கவேண்டும்.

2. மரணத்தறுவாயில் இருக்கும் ஒருவர் கொடையினைக் கொடுக்க வேண்டும். அவர் மரணத்தை எதிர்நோக்கிக் கொண்டிருப்பவராக இருக்க வேண்டுமென்றில்லை. தற்கொலை செய்துகொள்ளும் எண்ணத்தோடு கொடை கொடுக்கப்பட்டால் அதனை மரணக்கொடை எனக் கொள்ளவியலாது.

3. கொடையாளி இறந்த பின்னர்தான் கொடை செயல்படும் என்ற நிபந்தனையோடு கொடுக்கப்பட வேண்டும். கொடையாளி மரணமடைய வேண்டும். அந் நோயினின்று சுகமடைந்தாலோ, கொடை பெறுநரை எஞ்சி வாழ்ந்தாலோ இக் கொடை செயல்படாது.

4. கொடைப்பொருள் கொடைபெறுநரின் வசத்தில் ஒப்படைக்கப்பட வேண்டும். கொடையாளி கொடைப் பொருளை ஒப்படைக்கும்போது உடைமையை மட்டும் கொடுப்பதல்லாமல் அதன் மீதிருந்த ஆதிக்க உரிமையையும் கொடுத்துவிட வேண்டும்.

5. கொடையாளி நோயினின்று மீண்டெழுந்தால் கொடைப்பொருளைத் திரும்பத் தந்துவிட வேண்டுமென்ற நிபந்தனையோடு கொடை கொடுக்கப்பட வேண்டும்.

மரணக் கொடையினை வாய்வார்த்தை மூலமாகவோ, எழுத்து மூலமாகவோ பதிவின்றிக் கொடுக்கலாம். உடைமை ஒப்படைப்பு மட்டுமே மிகமிகத் தேவையானது.

**மரணக்கொடைச் சொத்துகள்**

மரணக்கொடை மூலம் கொடுக்கக்கூடிய சொத்துகளாவன: ஒருவர் விருப்பாவணத்தின் மூலம் வகுத்தமைக்கக்கூடிய எந்த அசையும் சொத்துகளையும் மரணக்கொடையாகக் கொடுக்கலாம். அசையாச் சொத்துகளை மரணக்கொடையாகக் கொடுக்க இச் சட்டத்தில் ஏதும் கூறப்படவில்லை. அசையும் சொத்துகள் என்னும் சொல் ஒப்படைப்பளிக்கக்கூடிய ரூபா நோட்டுகளையும், கடனுறுதிச் சீட்டுகளையும் (Promissory Notes) மற்றும் ஏனைய மாற்றுமுறை யாவணங்களையும்

(Negotiable Instruments) கூடக் குறிக்கும். ஆகவே அவை களையும் மரணக்கொடையாகக் கொடுக்கலாம். அடைமானப் பத்திரங்களையும் ஆயுட் காப்பீட்டுப் பாலிசிகளையும் மரணக் கொடையாகக் கொடுக்கலாம்.

மரணத்தை எதிர்நோக்கி நோயுற்ற நிலையில் கொடுக்கப் பட்ட கொடை அவர் அந் நோயினின்று சுகம்பெற்று மீண்டெழு வாரேயானால் செயல்படாது. அதுபோலவே கொடைபெறுநர் கொடையாளியை எஞ்சி வாழாவிட்டால் கொடை செயல் படாது.

மரணக்கொடைகள் ஒப்படைப்பளிக்கப்பட்ட நேரத்தி னின்று செயல்படுவதால், விருப்புறுதிக்கு உயில் மெய்ப்பிதழ் பெறத் தேவையில்லை. கொடைபெறுநரின் உரிமை மூலத்தினை (Title) பூரணமாக்க நிறைவேற்றாளரின் ஒப்புதலும் வேண்டிய தில்லை. இவ்விதத்தில் மரணக்கொடைகள் ஏனைய உயில்வழிக் கொடைகளினின்று மாறுபடுகின்றன.

மரணக்கொடைகள் உயில்களின் தன்மைகளைக் கொண் டவை. விருப்புறுதி, ஆவணமளித்தவரின் வாழ்நாளில் மாற்றி யமைக்கக் கூடியது; மறுத்தழிக்கக் கூடியது. மரணக்கொடைச் சொத்துகள் கொடையாளி இறக்கும் தருணம் வரையில் அவருடைய சொத்தாகவே இருக்கும். கொடையாளியின் மரணத் திற்குப் பின்தான் கொடைபெறுநருக் குரியதாகும். கொடை யாளி தம் வாழ்நாளில் கொடையினை மறுக்காமலிருந்தால்தான் அவரது இறப்பிற்குப்பின், கொடைச் சொத்துகளின் வாரிசு கொடைபெறுநரைச் சென்றடையும். இவ்விதங்களில் சொத்து மாற்றுச் சட்டம் பிரிவு 122-ல் கூறப்பட்ட கொடைகளினின்று மரணக்கொடை மாறுபடுகிறது. கொடையாளியின் கடன்களை யடைக்க அவரது சொத்துகள் போதாவிட்டால், மரணக் கொடைச் சொத்துகளையும் அக் கடன்களையடைக்க எடுத்துக் கொள்ளலாம்.

மரணக்கொடைகள் மகமதியச் சட்டத்தில் உண்டு. இது 'மார்க உல்-மாட்' என அழைக்கப்படுகிறது. கொடையாளியின் ஈமச் சடங்குகட்கான செலவுகள், கடன்கள் கொடுத்து எஞ்சிய நிகரச் சொத்துகளில் மூன்றில் ஒரு பங்கினை மரணக்கொடை யாக ஒரு மகமதியர் கொடுக்கலாம். கொடைச்சொத்துகளை ஒப்படைப்புச் செய்தல் மிகவும் அவசியமானதாகும். மூன்றி லொரு பங்குக்கு அதிகமாகப் பணக்கொடையாகக் கொடுத்தால் கொடையாளியின் மரணத்திற்குப்பின் அவரது வாரிசுகள் இஞ்சு

வளித்தாலன்றி மூன்றிலொரு பங்குக்கு அதிகமான சொத்துகளைக் கொடைபெறுநர் பெறவியலாது. அதுபோன்றே வாரிசு ஒருவருக்கே கொடுக்கப்பட்டாலும் கொடையாளியின் இறப்பிற்குப்பின் ஏனைய வாரிசுகள் இசைவளிக்க வேண்டும். ஒரு மகமதியர் தம் சொத்துகளனைத்தையும் நோயுள்ள நிலையில் மரணக்கொடையாகக் கொடுத்து, பின்னர் நோயினின்று மீண்டெழுவாரேயானால், கொடை செயல்பட்டு முழுச் சொத்துகளும் கொடை பெறுநரைச் சேரும். ஆனால், வாரிசுரிமைச் சட்டத்தில் கொடையாளி நோயினின்று மீண்டெழுந்தால் கொடை செயலிழக்கும். இவ்விதத்தில் மகமதியச் சட்டம் இச் சட்டத்தினின்று மாறுபடுகிறது.

**இந்துச் சட்டத்தின் மரணக்கொடைகள்**

வாரிசுரிமைச் சட்டத்தில் கூறப்பட்டுள்ள விதிகள் இந்துகட்குச் செல்லா என்றாலும், மரணக்கொடைகளை இந்துச் சட்டமும் ஏற்றுக்கொண்டு அனுமதிக்கின்றது. இந்துச் சட்டத்தில் மரணக்கொடைக்கும் ஏனைய கொடைகட்கும் பாகுபாடுகள் இல்லை. இந்துச் சட்டத்தில் கொடையளிக்கத் தேவையானதெல்லாம், வாய்மொழி மூலமாகவோ, எழுத்து மூலமாகவோ கொடையாகக் கொடுக்கும் நோக்கத்தோடு சொத்துகளை உண்மையிலேயே உடைமை ஒப்படைப்புச் செய்திருக்க வேண்டும். கொடையாளியின் வாழ்நாளிலேயே கொடைபெறுநர் கொடையினை ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும்.

## குமார் உபேந்திரா எ. நாபின் கிருஷ்ணா

## [3B LR. (oc) 113]

மரணத்தறுவாயிலிருந்த இந்து ஒருவர் இறப்பதற்குச் சில மணி நேரங்கட்கு முன்னர் அரசு கடன்பத்திரங்களை வாங்கச் செய்து, அவைகளின் உரிமையைக் கொடுக்கும் நோக்கத்தோடு தமது மகனிடம் ஒப்படைத்தார். அவர் மிகவும் பலவீனப்பட்டிருந்ததால் அக் கடன் பத்திரங்களின்மீது 'மேல் கையொப்பம்' (Endorsement) செய்யவியலவில்லை. ஆங்கிலச் சட்டப்படி மரணக் கொடையாகவும் இந்துச் சட்டப்படி கொடை செல்லுபடியாகும் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

## 23. இறந்தவரின் சொத்துகளைப் பாதுகாத்தல்

இறந்தவரின் சொத்துகளை வாரிசுரிமைப்படி கொடுப்பதில் வாரிசுகளைக் குறித்து ஐயமேற்படுமாயின் சரியான வாரிசுகளைக் கண்டுபிடிக்கும்வரை சொத்துகள் வாரிசுரிமைப்படி பிரித்துத் தரப்படமாட்டாது. அதுவரை அச் சொத்துகள் பாதுகாக்கப் படும். அச் சொத்துகள் யாருக்கு உரியவையென இறுதியாகத் தீர்வு காணும்வரை அவற்றினைப் பொறுப்பில்கொள்ள யாருக்கு உரிமையுண்டுயென வழக்குத் தொடுப்பதின் மூலம் 'நீதிமன்றம்' தாற்காலிக முடிவு காணலாம். இறுதித்தீர்வு காணும்வரை அவர் அச் சொத்துகளைப் பாதுகாக்கலாம்.

அசையா அல்லது அசையும் சொத்துகளை விட்டு ஒருவர் இறந்து, அச் சொத்துகளை யாரேனும் ஆக்கிரமித்துக் கொண் டாலும் பலவந்தமாக அபகரித்துக் கொண்டாலும் வாரிசுரிமைப் படி அவற்றினைப் பெற உரிமையுடைய எவரும் அச் சொத்துக ளிருக்கும் மாவட்டத்தின் நீதிபதிக்கு உரிமை கோரி, விண்ணப் பிக்கலாம். உரியவர் இறந்து ஆறுமாதங்களுக்குள் மாவட்ட நீதிபதிக்கு விண்ணப்பிக்க வேண்டும்.

மாவட்ட நீதிபதி அவ் விண்ணப்பத்தினைக் கொண்டு விண்ணப்பதாரருக்கு இறந்தவரின் சொத்தில் உரிமையுண்டு என்பதற்கும் ஆக்கிரமித்துக் கொண்டவருக்கு உரிமையில்லை யென்பதற்கும் கூறும் ஆதாரங்கள் உண்மைதாமா என்று விசாரிக்கவேண்டும். விசாரித்த பின்னர் ஆக்கிரமித்துக்கொண்ட வருக்கு உரிமையில்லையெனத் தெரிந்த பின்னர் சொத்துகளி னின்று குறிப்பிட்ட காலத்திற்குள் வெளியேறுமாறு அறிக்கை கொடுக்கப்படும். அதன் பிறகு விண்ணப்பதாரரின் உடைமை உரிமைக்குத் தீர்ப்பளிக்கப்படும். உடைமைக்கு மாவட்ட நீதி பதியின் தீர்ப்பே முடிவானது; அதற்குமேல் மேல்முறையீடு கிடையாது.

விண்ணப்பத்தின்பேரில் உடைமைக்கு உடனடியாகத் தீர்வு காணவியலாது; சற்றுக் காலதாமதமாகும். அதற்குள் சொத்து

கள் வீணாகிவிடும். துர் ஆக்கிரமிக்கப்படும் என அறிந்தால் அவற்றினைக் காக்க ஒரு பொறுப்பாளரை (Curator) நீதிமன்றம் நியமிக்கலாம். உடைமைக்குத் தீர்வு காணும்வரை பொறுப்பாளர் பொறுப்பிலிருக்கலாம்.

## பொறுப்பாளரின் அதிகாரங்கள்

பொறுப்பாளர் உடைமையினைப் பொறுப்பேற்று நிருவகிக்கலாம்; வீணாவதையும் துர் ஆக்கிரமிப்பையும் தடுக்க ஏற்பாடுகள் செய்யலாம்; வசூலிக்க அதிகாரம் கொடுக்கப்பட்ட கடன்களையும், வாடகைகளையும் வசூலிக்கலாம்; வசூலித்த பின்னர், கடனாளிகளைக் கடன் பொறுப்பினின்று விடுவிக்கலாம். பொறுப்பாளரிடம் கொடுக்கப்படும் பணங்களுக்கு உத்தரவாதம் உண்டு.

## கடமைகள்

அவரது பொறுப்பிற்கு ஜாமின் (Security) கொடுக்க வேண்டும். சொத்துகளினின்று பெறப்படும் ஆண்டு வருவாயில் 5 சதவீதத்தை அவருக்கு ஊதியமாகக் கொடுக்கலாம்.

ஒவ்வொரு மாதத்திற்குமான கணக்குகளையும், மூன்று மாதங்கள் கழிந்த பின்னர் உடைமையினை ஒப்படைக்கும்போது நிருவாகத்திற்கான விளக்கமான கணக்குகளையும் மாவட்ட நீதிபதியிடம் ஒப்படைக்கவேண்டும்.

கணக்குகளைச் சரிவரக் காட்டாவிட்டாலும், பொய்க் கணக்குக் காட்டினாலும் ஒவ்வொரு முறையும் தவறிழைக்கும் போது மாவட்ட நீதிபதி, பொறுப்பாளருக்கு ரூ. 1000 வரை அபராதம் விதிக்கலாம்.

# 24. சொத்து நிருவாகம்

ஒருவர் இறந்துபோனால் அவரது சொத்துகளை இரண்டு வழிகளில் வாரிசுரிமைக்கு வழிசெய்யலாம் என முன்பு கவனித்தோம். இறந்தவர் உயில் எழுதி வைத்திருந்தால் அவரது சொத்துகளை உயில்வழி வாரிசுரிமையின்படி வாரிசுகட்குப் பங்கிட்டளிக்க வேண்டும். உயில் எழுதி வைத்திராவிட்டால் உயில்வழியில் வாரிசுரிமை செய்யவேண்டும். எவ்வகை வாரிசுரிமையானாலும், விருப்பாவணமளித்தவர் இறந்தவுடன் சொத்துகளின் உரிமை வாரிசுகளைச் சென்றடையும். ஆனால் சொத்துகளின் உடைமை பின்புதான் தரப்படும். வாரிசுகளிடம் உடைமை ஒப்படைப்புச் செய்யப்படும்வரை அச் சொத்துகள் பராமரிக்கப்பட்டு நிருவகிக்கப்படவேண்டும். அப்படிச் செய்யப்படாவிட்டால் சொத்துகள் வாரிசுகளைச் சென்றடைதல் இயலாது.

இறந்தவரின் சொத்துகளின் நிருவாகப் பொறுப்பை ஏற்பவர்களை இருவகையாகப் பிரிக்கலாம்: (1) நிறைவேற்றாளர்கள், (2) நிருவாகிகள். இவர்களை இறந்தவரின் பிரதிநிதிகள் எனவும் கூறலாம். ஒருவர் இறந்தவுடன் அவரது சொத்துகள் அனைத்தும் இப் பிரதிநிதிகளைத்தாம் முதலாவது சென்றடையும். சொத்துகளைவிட்டு இறந்தவர் ஓர் உயிலையும் எழுதி, அவ்வுயிலில் ஒரு நிறைவேற்றாளரையும் நியமித்திருந்தால் சொத்துகள் அந் நிறைவேற்றாளரைச் சென்றடையும். இறந்தவர் உயில் எழுதி வைக்காமல் இறந்திருந்தால் நீதிமன்றம் நியமிக்கும் நிருவாகியைச் சென்றடையும். இறந்தவர் உயில் எழுதி வைத்தாரோ இல்லையோ எப்படியாயினும் சொத்துகளை வாரிசுகட்குப் பிரித்துக் கொடுக்கும் வரையில் ஒருவரது நிருவாகப் பொறுப்பில் இருக்கவேண்டும். நிருவாகத்தின் பொருட்டு அச் சொத்துகள் மேற்சொன்ன பிரதிநிதிகளில் ஒருவரை அடையும். இறந்தவரின் சொத்துகள் அவரின் பிரதிநிதிகளைச் சென்றடைவதைப் பிரிவு 211 கூறுகின்றது.

இறந்தவர் விட்டுச்சென்ற அசையும், அசையாச் சொத்துகளும் நிறைவேற்றாளர்களையோ நிருவாகிகளையோ சென்றடையும். ஒன்றுக்கு மேற்பட்ட நிறைவேற்றாளாகள் இருப்பின்

சொத்துகள் அனைத்தும் முழுவதுமாக எல்லா நிறைவேற்றாளர்களையும் சேர்த்துச் சென்றடையும். உயில் மெய்ப்பிதழ் (Probate) பெற மனுப் போடும்போதும் எல்லாச் சொத்துகளையும் சேர்த்துத்தான் போடவேண்டும். உயில் மெய்ப்பிதழ் எல்லா நிறைவேற்றாளர்களையும் சேர்த்துத்தான் தரப்படும். இது போலவே ஒருவர் உயில்வழியில் இறந்திருந்தால் நிருவாக உரிமைப் பத்திரம் பெற மனுப் போடும்போதும் எல்லாச் சொத்துகளையும் சேர்த்துத்தான் போடவேண்டும்.

**பிரதிநிதிகளைச் சென்றடையும் சொத்துகள்**

(1) இறந்தவரின் வசத்திலிருந்த அசையும், அசையாச் சொத்துகள் அனைத்தும் பிரதிநிதிகளைச் சென்றடையும், (2) வழக்குரிமைப் பொருள்களும்கூடச் சென்றடையும் (Chose in action) ஆக்குபொருள் உரிமையும் ஒரு வழக்குரிமையே, (3) இறந்தவரின் முதலீடு செய்யப்பட்ட எல்லாப் பங்குகளும், கடனீட்டுப் பத்திரங்களும் (Shares of Securities) பிரதிநிதிகளைச் சென்றடையும், (4) ஆயுட் காப்பீட்டு நிதியினின்று சேரவேண்டிய தொகையும் பிரதிநிதிகளைச் சென்றடையும், (5) இறந்தவர் குத்தகைக்கு எடுத்திருந்த சொத்துகள் பிரதிநிதிகளைச் சென்றடையும், (6) புத்தகப் பதிப்புரிமைகளும் (Copyright), நிறைவேற்றாளரைச் சென்றடையும், (7) இறந்தவர் விட்டுச் சென்ற வழக்கு மூலம் (Cause of action) பிரதிநிதிகளைச் சென்றடையும்.

**இறந்தவரின் சொத்துகள் பிரதிநிதிகளைச் சென்றடைதலுக்கு விதி விலக்கும் உண்டு** [ பிரிவு 211(2) ]

1. கூட்டுக் குடும்பச் சொத்துகள் (Joint Family Property) அல்லாது மூதாதையர் சொத்துகள் எஞ்சி வாழ்பவர்களைச் (Survivors) சென்றடையுமென இந்துச் சட்டம் கூறுகிறது. இச் சொத்துகள் பிரதிநிதிகளைச் சென்றடையா.

2. இந்தியக் கூட்டாண்மைச் சட்டப்படி ஒரு கூட்டாளி இறந்துபோனால் கூட்டாண்மைச் சொத்துகள் எஞ்சியுள்ள கூட்டாளியைச் சேரும். எனவே, கூட்டுத்தொழில் சொத்துகள் (Partnership Property) பிரதிநிதிகளைச் சென்றடையா.

3. கூட்டுநிலச் சொத்துகள் (Joint Tenancy Property) ஒருவர் இறந்தால் எஞ்சியுள்ளவரைச் சேரும். அவையும் பிரதிநிதிகளைச் சென்றடையா.

4. கூட்டு வைப்புத்தொகை (Joint Deposit) பிரதிநிதிகளைச் சென்றடையாது.

ஒருவர் உயில் சொத்துகளை விட்டு இறந்துபோனால் அச் சொத்தில் எவரேனும் உரிமை கோரினால், அவர் முதலில் நீதி மன்றத்திடமிருந்து சொத்து நிருவாக உரிமைப் பத்திரம் பெற்ற பின்னர்தான் பங்கு கேட்க வேண்டும் (பிரிவு 211). இப் பிரிவு இந்துக்களுக்கும், மகமதியருக்கும், இந்தியக் கிறித்தவர்களுக்கும் செல்லாது.

### நிருவாகப் பத்திரம் எப்போது தேவை ?

ஐரோப்பியரோ, கிழக்கிந்தியரோ, ஆர்மீனியரோ, யூதரோ உயில்இல்வழியில் இறந்துபோனால் சொத்து நிருவாக உரிமைப் பத்திரம் தேவை.

கடன்களை வசூலிக்க நிருவாக உரிமைப் பத்திரம் தேவை.

### நிருவாக உரிமைப் பத்திரம் எப்போது தேவையில்லை ?

1. இந்துக்களும், மகமதியரும், இந்தியக் கிறித்தவரும், புத்த, சீக்கிய, ஜைன, பார்சி மதத்தினரும் உயில்இல்வழியில் இறந்து போனால் அவர்களது சொத்துகளை நிருவகிக்க நிருவாக உரிமைப் பத்திரம் தேவையில்லை.

2. சமய மடங்களின் சொத்துகட்கு நிருவாக உரிமைப் பத்திரம் தேவையில்லை.

3. வாரிசின்றி ஒருவர் இறந்து, அவரது சொத்துகள் அரசினைச் சென்றடையும்போது நிருவாக உரிமைப் பத்திரம் தேவையில்லை.

நிறைவேற்றாளரோ உயில்வழிக் கொடைபெறுநரோ தாங்கள் உரிமைக்கோரும் உயிலுக்கு உயில் மெய்ப்பிதழ் பெற்றாலன்றித் தங்களது உரிமையினை எந்த நீதிமன்றத்திலும் நிலைநாட்டவியலாது (பிரிவு 213). ஐரோப்பியர், கிழக்கிந்தியர், ஆர்மீனியர், யூதர், இந்தியக் கிறித்தவர், பார்சி ஆகியோரது உயில்களுக்கும், உயிலிணைப்புகட்குமே உயில் மெய்ப்பிதழ் தேவை; ஏனையோருக்குத் தேவையில்லை.

### கடன் வசூலித்தல்

இறந்தவரின் சொத்துகளை நிருவகிக்கும்போது அவருக்குச் சேரவேண்டிய கடன்களையும் வசூலிக்க வேண்டும். அப்படி வசூலிக்க உயில் மெய்ப்பிதழோ, நிருவாக உரிமைப் பத்திரமோ பெற வேண்டியதில்லை. ஆனால், இறந்தவரின் வாரிசு ஒருவர் அக் கடன்களை வசூலிக்க முற்பட்டால் அவர் இறந்தவரின் சொத்தின்பேரில் தமக்குள்ள உரிமையைக் கோரி உயில் மெய்ப்

பிதழோ, நிருவாக உரிமைப் பத்திரமோ, வாரிசுரிமைச் சான்றிதழோ (Succession Certificate; பெற்றிருக்க வேண்டும் (பிரிவு 214).

இறந்தவரின் சொத்துகட்கு வாரிசுரிமைச் சான்றிதழ் கொடுத்துப் பின்னர் அச் சொத்துகட்கு உயில் மெய்ப்பிதழோ, நிருவாக உரிமைப் பத்திரமோ கொடுக்கப்பட்டால், பின்னர் அளிக்கப்பட்ட பத்திரங்கள் முன்பளிக்கப்பட்ட வாரிசுரிமைச் சான்றிதழைச் செயலிழக்கச் செய்யும். அதனைக் குறிப்பாக ரத்துச் செய்ய வேண்டியதில்லை. சான்றிதழ் பெற்றவர் கடனை வசூலிக்க முற்பட்டு வழக்குகள் தொடுத்திருந்தால், உயில் மெய்ப்பிதழும் நிருவாக உரிமைப் பத்திரமும் பெற்ற பின்னர் நிறைவேற்றாளரோ நிருவாகியோ சான்றிதழைப் பெற்றவருக்குப் பதிலாக அவ் வழக்குகளைத் தொடரலாம் (பிரிவு 215).

உயில் மெய்ப்பிதழோ, நிருவாக உரிமைப் பத்திரமோ கொடுக்கப்பட்ட, பின்னர் நிறைவேற்றாளரோ நிருவாகியோ தாம் இறந்துபோனவரின் பிரதிநிதி. நியமிக்கப்பட்ட உத்தரவு ரத்துச் செய்யப்படும்வரை எல்லா உரிமைகளும் அவர்களைச் சென்றடையும். நிருவாகி, என்றும் நிருவாகியல்லர். அவர்கள் நியமிக்கப்பட்ட தேவை நிறைவேறிவிட்டபோது, அவர்களது வேலை முற்றுப்பெறும். அவ்வாறு முற்றுப் பெறும்போது நீதிமன்றத்தின் ஆணை ஏதுமின்றி அவர்களது நியமன உத்தரவு செயலிழக்கும் (பிரிவு 216).

**உயில் மெய்ப்பிதழும் நீதிமன்றமளிக்கும் நிருவாக உரிமைப் பத்திரமும்**

ஒருவர் சொத்துகளைவிட்டு இறந்துபோனால் அதனை நிருவகிப்பது குறித்து முன்னொரு தலைப்பின்கீழ்க் கண்டோம். சொத்துகளை நிருவகிப்போர் இருவகையினர், அவர்கள் நிறைவேற்றாளரும் நிருவாகியுமே. நிறைவேற்றாளர் உயில் மெய்ப்பிதழ் மூலமும் நிருவாகி நிருவாக உரிமைப் பத்திரம் மூலமும் இறந்தவரின் சொத்துகளை நிருவகிக்கும் அதிகாரத்தினைப் பெறுகின்றனர். இந்திய வாரிசுரிமைச் சட்டமும், உயில்வழி வாரிசுரிமையையும் உயில்இல்வழி வாரிசுரிமையையும்பற்றிக் கூறுகிறது. இச் சட்டம் எவரைக் கட்டுப்படுத்தும் என்று முன் பிரிவுகளில் கண்டோம். இந்தியச் சொத்துமாற்றுச் சட்டத்தைப் போன்றே எல்லாச் சட்டங்களும் வாரிசுரிமையை இரு வகைகளாகத்தான் பிரிக்கின்றன. இறந்தவர் அச் சட்டத்திற்குக் கீழ்ப்பட்டவராயினும் அவரது சொத்துகளை நிருவகிக்க உயில் மெய்ப்பிதழோ, நிருவாக உரிமைப் பத்திரமோ பெறவேண்டும்.

# 25. உயில் மெய்ப்பிதழ்

விருப்பவாணமளித்தவரின் சொத்துகளை நிருவகிக்கும் உரிமையளித்து, நீதிமன்றத்தின் முத்திரையிடப்பட்டுச் சான்றளிக்கப்பட்ட உயிலின் நகலே, உயில் மெய்ப்பிதழாகும். வேறு விதமாகவும் கூறலாம். குறிப்பிட்ட நாளில் மூலஉயில் நிரூபிக்பட்டதெனச் சான்றளித்து, மாவட்ட நீதிபதியோ நீதிமன்றப் பதிவாளரோ கையெழுத்திட்டு நீதிமன்றத்தின் முத்திரையிட்ட சான்றளிக்கப்பட்ட பத்திரத்தோடு சான்றளிக்கப்பட்ட உயிலின் நகலும் இணைக்கப்படும். நீதிமன்றச் சான்றிதழும் உயில் நகலும் சேர்த்து உயில் மெய்ப்பிதழ் எனப்படும். உயில் மூலமாக நியமிக்கப்பட்ட நிறைவேற்றாளருக்கே, உயில் மெய்ப்பிதழ் அளிக்கப்படும். விருப்பாவணமளித்தவர் பலரை நிறைவேற்றாளராக நியமித்திருந்தால் அவர்கள் அனைவரும் உயில் மெய்ப்பிதழ் பெறத் தகுதியுடையவர்கள். நிறைவேற்றாளர்கள் பலரை ஒன்றுசேர்த்து உயில்மெய்ப்பிதழ் கொடுக்கப்பட்டிருந்து, அவர்களில் ஒருவர் இறந்துபோனால் முழுப் பிரதிநிதித்துவமும் எஞ்சிவாழும் நிறைவேற்றாளர்கட்குப் போய்ச் சேரும்.

உயில் மெய்ப்பிதழைப் பெறும்பொருட்டு உயிலும் அதனைச் சேர்ந்த எல்லா உயிலிணைப்புகளும் சேர்ந்து ஒரே சமயத்தில் சமர்ப்பிக்கப்பட்டு அனுமதிக்கப்பட வேண்டும். உயில் மெய்ப்பிதழ் அளிக்கப்பட்ட பின்னர் ஏதேனும் ஓர் உயிலிணைப்புக் கண்டுபிடிக்கப்படுமாயின் அவ் வுயிலிணைப்பிற்கு மட்டும் தனி உயில் மெய்ப்பிதழ் அளிக்கப்படும். அவ் வுயிலிணைப்பு மூல உயில் நிறைவேற்றாளரின் நியமனத்தைப் பாதிப்பதாக இருக்கக் கூடாது. அவ் வுயிலிணைப்பு வேறு நிறைவேற்றாளர்களை நியமிக்குமானால், உயிலுக்கு கொடுக்கப்பட்ட உயில் மெய்ப்பிதழ் ரத்துச் செய்யப்பட்டு உயிலோடு அவ் வுயிலிணைப்பினையும் சேர்த்துப் புதிய உயில் மெய்ப்பிதழ் அளிக்கப்படும்.

**உயில் மெய்ப்பிதழ் யாருக்குக் கொடுக்கவியலாது ?**

1. வயதுவராத நிறைவேற்றாளருக்கு உயில் மெய்ப்பிதழ் கொடுக்கவியலாது.

2. திடசித்தம் இல்லாத நிறைவேற்றாளருக்கு உயில் மெய்ப்பிதழ் அளிக்க முடியாது.

3. பல நபர்களைக்கொண்ட ஒரு சங்கத்திற்கு உயில் மெய்ப்பிதழ் அளிக்கவியலாது.

**உயில் மெய்ப்பிதழ் பெறக் காலவரை**

விருப்பாவணமளித்தவர் இறந்த நாளினின்று ஏழு தினங்களுள் உயில் மெய்ப்பிதழ் பெற விண்ணப்பிக்க வேண்டும். அவ்வேழு நாள்கள் முடிந்த பின்னர்தான் உயில் மெய்ப்பிதழ் அளிக்கப்படும் (பிரிவு 293).

**உயில் மெய்ப்பிதழின் விளைவு**

ஓர் உயிலின் உயில் மெய்ப்பிதழ் அவ் வுயிலை விருப்பாவணமளித்தவர் இறந்த சமயத்தினின்று நிருபித்து நிலைநிறுத்திச் செயல்படச் செய்கிறது. விருப்பாவணமளித்தவரின் சொத்துகளனைத்தும் உடனடியாக நிறைவேற்றாளரைச் சென்றடைகிறது. இடைப்பட்ட நாளில் சொத்துகளை நிருவகிப்பதில் அவர் செய்த செயல்களனைத்தையும் செல்லுபடியாக்குகிறது.

1. உயிலின் நகலோடு சேர்த்து உயில்மெய்ப்பிதழ் உண்மையாகவே உயில் உருவாக்கப்பட்டதென்பதற்கும், உயில் செல்லத்தக்கது என்பதற்கும், உயிலினை உருவாக்க விருப்பாவணமளித்தவரின் தகுதிகட்கும் அறுதிச் சான்றாகும். உயில் உண்மையாகவே உருவாக்கப்பட்டது என்ற உயில் மெய்ப்பிதழ் அளிக்கும் நீதிமன்றத்தின் முடிவு அறுதியானது.

2. நிறைவேற்றாளர்களின் நியமனத்திற்கும் உயில் மெய்யானது என்பதற்கும் உயில் மெய்ப்பிதழே அறுதியான சான்று. உயில் மெய்ப்பிதழ் அளிக்கும் விசாரணையில் உயிலைவிட்டு இறந்தவர் எந்நாட்டினர், அவரது வாழ்வகமென்ன என்ற ஐயங்கள் எழும். அவ்வையங்கள் களையப்பட்ட பின்னரே உயில் மெய்ப்பிதழ் அளிக்கப்படும். எனினும், இறந்தவரின் வாழ்வகத்திற்கு அறுதிச் சான்றன்று.

3. உயில் மெய்ப்பிதழ் அளிக்கப்பட்ட பின்னர் உயிலினை எழுதும்போது விருப்பாவணமளித்தவர் திடசித்தமின்றியிருந்தார் என வெளிப்படுத்த வழக்குத் தொடர வியலாது.

4. நிறைவேற்றாளர் விருப்பாவணமளித்தவரின் பிரதிநிதி என்பதற்கு உயில் மெய்ப்பிதழ் அறுதிச்சான்று. இறந்தவரின் கடன்களை வசூலிக்க உரிமையினையும், கடன் தொகையினை நிறைவேற்றாளரிடம் செலுத்துபவர்கட்கு ஈட்டினையும் கொடுக்கிறது.

# 26. நீதிமன்றமளிக்கும் நிருவாக உரிமைப் பத்திரம்

# (பிரிவுகள் 218-221, 232-236, 291-293)

ஒருவர் உயிலை எழுதிவைத்து, அதில் சொத்துகளை நிருவகிக்க ஒரு நிறைவேற்றாளரை நியமித்திருந்தால், அவரது சொத்துகளைப் பிரிப்பதில் சங்கடங்கள் எவையும் இரா. ஆனால், அவர் உயில் ஏதும் எழுதாமல் இறந்துபோனால், சொத்துகளை நிருவகிப்பதிலும் பிரித்துக் கொடுப்பதிலும் சங்கடங்கள் ஏற்படும். சொத்துகளை நிருவகிக்க யாரை நியமிப்பது? எவர் நியமிப்பது? என்ற வினாக்கள் எழும். இறந்தவருக்குரிய தனிப்பட்ட சட்டத்தின்படி உயில்வழியில் வாரிசுரிமைக்கு வழிசெய்யும் வரை, அவரது சொத்துகள் நிருவகிக்கப்படவேண்டும். நிருவாகியை நியமிக்க எவருக்கும் அதிகாரமில்லை; நீதிமன்றம் மட்டுமே நியமிக்கலாம்.

**எப்போது தேவை ?**

1. ஐரோப்பியரோ, கிழக்கிந்தியரோ, ஆர்மீனியரோ, யூதரோ உயில்இல்வழியில் இறந்துபோனால் அவரது சொத்துகளை நிருவகிக்க நிருவாக உரிமைப் பத்திரம் தேவை.

2. உயில்இல்வழியில் இறந்தவரின் கடன்களை வசூலிக்க நிருவாக உரிமைப் பத்திரம் தேவை.

**எப்போது தேவையில்லை ?**

1. ஓர் இந்துவோ, மகமதியனோ, புத்த மதத்தினனோ, சீக்கியனோ, பார்சியோ உயில்இல்வழியில் சொத்துகளை விட்டு இறந்துபோனால் அச் சொத்துகளை நிருவகிக்க நிருவாக உரிமைப் பத்திரம் தேவையில்லை.

2. சமய மடங்களின் சொத்துகளுக்கு நிருவாக உரிமைப் பத்திரம் தேவையில்லை.

3. உயில்இல்வழியில் இறந்த இந்தியக் கிறித்தவரின் சொத்துகளுக்கு நிருவாக உரிமைப் பத்திரம் தேவையில்லை.

4. வாரிசின்றி இறப்பவரின் சொத்துகள் அரசினைச் சேரும். அவற்றிற்கு நிருவாக உரிமைப் பத்திரம் தேவையில்லை.

உயில்இல்வழியில் இறந்த ஓர் இந்து, மகமதியன், புத்த மதத்தினன், சீக்கியன், ஜைனன் ஆகியோரது சொத்துகளுக்கு நிருவாக உரிமைப் பத்திரம் வேண்டுமென அச் சொத்தில் முழு உரிமையோ பகுதி உரிமையோ உடைய எவரேனும் விண்ணப்பித்தால் அவருக்கு அப் பத்திரம் அளிக்கப்படும்.

பலர் விண்ணப்பித்தால் எல்லோருக்குமோ, சிலருக்கோ அல்லது ஒருவருக்கோ அளிக்கப்படலாம். ஒருவரும் விண்ணப்பிக்காவிட்டால் இறந்தவருக்குக் கடன் கொடுத்தவருக்கே அளிக்கலாம்.

**நிருவாக உரிமைப் பத்திரம் பெறத் தகுதியுடைய உறவினரின் வரிசைக்கிரமம்**

1. கணவன் அல்லது விதவை. விதவைக்கு இறந்தவரின் சொத்தில் உரிமையேதும் இல்லை எனும்போது நிருவாக உரிமைப் பத்திரம் பெறத் தகுதி கிடையாது. விதவை புத்திசுவாதீன மற்றவளாகவிருந்தாலும், கெட்ட நடத்தையுள்ளவளாகவிருந்தாலும், விவாகரத்துச் செய்யப்பட்டவளாகவிருந்தாலும் நிருவாக உரிமைப் பத்திரம் பெறத் தகுதியில்லை.

2. இறந்தவரின் சொத்தில் பங்கடையக்கூடிய உறவினர் பெறலாம். அவர்களில் தாய்க்கு முதலில் கொடுக்க வேண்டும்.

3. நிருவாகப் பொறுப்பினையெடுக்க ஒருவரும் முன்வராவிட்டால் இறந்தவருக்குக் கடன் கொடுத்தவருக்கே அளிக்கலாம்.

4. இறந்தவர் தமது உயிலில் நிறைவேற்றாளர் ஒருவரை நியமிக்காமலிருந்தாலோ, நிறைவேற்றாளரை நியமித்திருந்து அவர் செயல்படாவிட்டாலோ, செயல்பட இயலாவிட்டாலோ நிருவாக உரிமைப் பத்திரம் அளிக்கலாம்.

**நிருவாக உரிமைப் பத்திரம் யாருக்குக் கொடுக்க இயலாது**

1. வயதுவராத ஒருவருக்கு நிருவாக உரிமைப் பத்திரம் கொடுக்கவியலாது.
2. திடசித்தம் இல்லாத ஒருவருக்கு நிருவாக உரிமைப் பத்திரம் கொடுக்கவியலாது.
3. பல நபர்களைக்கொண்ட ஒரு சங்கத்திற்கு நிருவாக உரிமைப் பத்திரம் அளிக்க முடியாது.

**நிருவாக உரிமைப் பத்திரம் அளிக்கக் காலவரை**

உயில்இல்வழியில் ஒருவர் இறந்த நாளினின்று 14 நாள்கள் கழிந்த பின்னர்தான் நிருவாக உரிமைப் பத்திரம் அளிக்கப்படும்.

**நிருவாக உரிமைப் பத்திரம அளித்தலின் விளைவுகள்**

உயில்இல்வழியில் ஒருவர் இறந்த நாளன்றே அவரது சொத்துகளை நிருவகிக்க உரிமை அளித்ததுபோன்று, இறந்தவருக்கிருந்த உரிமைகள் அனைத்தும் நிருவாகியைச் சேரும். சொத்தின் உரிமையாளர் இறந்த நாளன்றே அவருக்கிருந்த உரிமைகள் நிருவாகியைச் சேரும் என்பதனால் நிருவாக உரிமைப் பத்திரம் அளிக்குமுன் அந் நிருவாகி செய்த எல்லாச் செயல்களும் செல்லுபடியாகும் என்று சொல்லமுடியாது. இறந்தவரின் சொத்துகட்குப் பயனளிக்கும் நிருவாகியின் முன்செயல்கள் மட்டுமே சொத்துகளைக் கட்டுப்படுத்திச் செல்லுபடியாகும்; சொத்துகட்கு ஊறுவிளைவிக்கும் ஏனைய செயல்கள் செல்லுபடியாகா. இவ்விதத்தில் நிருவாகிக்கும் நிறைவேற்றாளருக்கும் உள்ள வேறுபாட்டினைக் காணலாம். உயில் மெய்ப்பிதழ் நிறைவேற்றாளரின் இடைப்பட்ட செயல்களனைத்தையும் செல்லுபடியாகுமெனப் பிரிவு 227 கூறுகிறது. இவ் வேறுபாட்டிற்குக் காரணம் யாதெனில், நிருவாகி தமது உரிமைகளை நீதிமன்றத்திடமிருந்து பெறுகின்றார். ஆனால், நிறைவேற்றாளரோ உயிலினின்று தம் உரிமைகளைப் பெறுகின்றார்.

நிருவாகி உயில்இல்வழியில் இறந்தவரின் பிரதிநிதி என்பதற்கு நிருவாக உரிமைப் பத்திரம் அறுதிச்சான்று. அதனோடு சொத்தின் உரிமையாளர் உயில்இல்வழியில் இறந்துபட்டார் என்பதற்குத் தகுந்த நல்லதொரு சாட்சியாகும்.

வயதுவராத ஒருவருக்கு நிருவாகப் பத்திரம் அளிக்கப்படாது எனக் கண்டோம். உயிலினை நிறைவேற்றவிருக்கும் ஒரே நிறைவேற்றாளர் உரிய வயதினையடையாமல் இருந்தாலோ சொத்து

களனைத்தையும் பெறப்போகும் எஞ்சிய கொடையாளி வயது வராதவராக இருந்தாலோ, அச் சொத்துகளை நிருவகிக்க நிருவாக உரிமைப் பத்திரம், அவர் உரிய வயதினையடையும்வரை அவரது காப்பாளருக்குக் கொடுக்கப்படும்.

இறந்தவரின் உயிலைக்குறித்து ஐயப்பாடு ஏற்பட்டு வழக்கு நீதிமன்றத்திலிருந்தாலோ, நிருவாகப் பத்திரம் பெறும் பொருட்டோ அதனை ரத்துச்செய்யும் பொருட்டோ வழக்கு நீதிமன்றத்திலிருந்தாலோ தீர்ப்பளிக்கப்படும்வரை சொத்துகளை நிருவகிக்க நிருவாகியை ஏற்படுத்தலாம்.

**உயில்மெய்ப்பிதழையும் நிருவாகப் பத்திரத்தையும் ரத்துச்செய்தல் (Revocation)**

உயில் மெய்ப்பிதழும் நிருவாகப் பத்திரமும் கொடுக்கப்பட்ட பின்னர் அவை முறைப்படி பெறப்படவில்லை எனக் கண்டால் ரத்துச்செய்யப்படும்.

1. அவை தவறான முறையில் பெறப்பட்டிருந்தால் ரத்துச் செய்யப்படும்.
2. மெய்க்காரணங்களை நீதிமன்றத்திடமிருந்து மறைத்துப் பொய்க்காரணங்களைக் கூறி ஏமாற்றும் நோக்கத்தோடு வாங்கப்பட்டிருந்தால் ரத்துச்செய்யப்படும்.
3. அறியாமையினாலோ, தவறுதலாகவோ நியாயப்படி மேற்படி உரிமையினைப் பெற்றுப் பொய்க்காரணங்களைக் கூறிப் பெற்றிருந்தால் ரத்துச்செய்யப்படும்.
4. ஒரு சூழ்நிலையில் கொடுக்கப்பட்ட அதிகாரம் பயனற்றோ செயலிழந்தோபோனால் ரத்துச்செய்யப் படும்.
5. மேற்படி அதிகாரம் பெற்றவர் குறித்த காலத்தில் தகுந்த காரணமின்றியோ, வேண்டுமென்றோ சொத்துகளின் மதிப்பீட்டையும் கணக்குகளையும் காட்டத் தவறினாலோ, பொய்க்கணக்குக் காட்டினாலோ கொடுக்கப் பட்ட அதிகாரத்தினை ரத்துச்செய்யலாம்.

**உயில் மெய்ப்பிதழ் பெறுவதற்கு விண்ணப்பத்தில் கொடுக்க வேண்டிய தகவல்கள்**

1. விருப்பாவணமளித்தவர் இறந்த நேரம்.
2. உயில் இணைக்கப்பட வேண்டும்.
3. விண்ணப்பதாரரின் வசத்தில் வரவிருக்கும் சொத்து களின் மதிப்பு.

4. விண்ணப்பதாரர் உயிலில் கூறப்பட்ட நிறை வேற்றாளரா?

5. விருப்பாவணமளித்தவர் இருப்பிடமும் சொத்துகளின் இருப்பிடமும் எந்த மாவட்ட எல்லைக்குட்பட்டன?

6. இறக்கும்போது இருந்த இருப்பிடம்.

**நிருவாகப் பத்திரம் பெற, விண்ணப்பத்தில் கொடுக்கவேண்டிய தகவல்கள்**

1. இறந்த இடமும் நேரமும்.
2. நன்றாகத் தேடியும் உயில் ஏதும் கிடைக்கவில்லை.
3. இறந்தவரின் உறவினர்களும் அவர்களது முகவரியும்.
4. நிருவாகப் பத்திரம் பெற விண்ணப்பதாரரின் உரிமை.
5. சொத்துகள் இருக்கும் மாவட்டம்.
6. விண்ணப்பதாரரின் வசத்தில் வரவிருக்கும் சொத்து களின் மதிப்பு.
7. இறக்கும்போது அவரது இருப்பிடம்.

# 27. நிறைவேற்றாளரும் நிருவாகியும்

(Executor and Administrator)

விருப்பாவணமளித்தவரின் இறுதி உயிலை நிறைவேற்றும் பொருட்டு உயிலிலேயே பெயர் குறிக்கப்பட்ட ஒருவரே நிறைவேற்றாளர். நிறைவேற்றாளரை உயில் மூலமாகத்தான் நியமிக்க முடியும். அவர் உயிலினின்று பொறுப்புகளையும் அதிகாரத்தினையும் பெறுகிறார். உயில் மூலமாக நியமிக்கப்பட்ட நிறைவேற்றாளருக்கு மட்டுமே உயில் மெய்ப்பிதழ் அளிக்கப்படும். நிறைவேற்றாளரைப் பெயர் குறிப்பிட்டோ அவரைப்பற்றிய விவரங்களைக் கூறுவதனால் உட்கிடையாகவோ நியமிக்கலாம். நிறைவேற்றாளராக எவரை வேண்டுமானாலும் நியமிக்கலாம். வயதுவராத ஒருவரையும் திடசித்தம் இல்லாத ஒருவரையும்கூட நியமிக்கலாம். அவர்கட்கு உயில் மெய்ப்பிதழ் மட்டும் அளிக்கப்படமாட்டாது. உட்கிடையாக நியமிக்கப்படும் நிறைவேற்றாளர் உட்கிடை நிறைவேற்றாளர் எனப்படுவார். ஒன்றுக்கு மேற்பட்டுப் பலரை நிறைவேற்றாளர்களாக நியமிக்கலாம். அவர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து செயல்படுவர். அவர்களில் ஒருவர் இறந்து போனால் முழுப் பிரதிநிதித்துவமும் எஞ்சி வாழும் நிறைவேற்றாளர்கட்குப் போய்ச் சேரும்.

நிறைவேற்றாளராக நியமிக்கப்பட்ட ஒருவர் அப் பொறுப்பினை ஏற்கவேண்டுமென்ற கட்டாயமில்லை. அப் பொறுப்பினை ஏற்காமல் அவர் தள்ளிவிடலாம். அவர் பொறுப்பினை ஏற்காமல் தள்ளிவிட்டால் நியாயப்படியான கால அளவிற்குள் தள்ளிவிட வேண்டும். பொறுப்பினை ஏற்கும் வரையில் இறந்தவரது சொத்துகள் அவரைச் சென்றடையா. உயிலினை மெய்யென நிரூபித்து உயில் மெய்ப்பிதழ் கோரி விண்ணப்பிக்கும் போது அவர் அப் பொறுப்பினை ஏற்றார் என்பது திண்ணம். நிறைவேற்றாளராக நியமிக்கப்பட்டவர் எழுத்தின் மூலமாகவோ நீதிபதியின் முன்னிலையில் வாய்மொழியாகவோ அவருக்குக் கொடுக்கப்பட்ட பொறுப்பினைத் தள்ளிவிடலாம்.

நிறைவேற்றாளர் இறந்தவருக்கு எல்லாவிதத்திலும் சட்ட பூர்வமான பிரதிநிதி. நிருவாகப் பொறுப்பினை அவர் ஏற்றுக் கொண்டவுடன் விருப்பாவணமளித்தவர் இறந்த நாளினின்றே அவரது சொத்துகள் நிறைவேற்றாளரைச் சென்றடையும். சொத்துகளை ஒன்றுசேர்த்து, கொடுக்கப்படவேண்டிய கடன் களையெல்லாம் அடைத்த பின்னர், அச் சொத்துகளை வாரிசுகட் கிடையே பிரித்துக் கொடுக்கும்வரை நிறைவேற்றாளர் பொறுப் புரிமையாளராகப் பணியாற்றுவார்.

**நிறைவேற்றாளரின் கடமைகள் (பிரிவுகள் 316—330)**

1. போதுமான சொத்துகள் இருப்பின் விருப்பாவண மளித்தவரின் தகுதிக்கும் அந்தஸ்துக்கும் ஏற்ப அவரது ஈமச் சடங்குகளைச் செய்யவேண்டும்.

2. விருப்பாவணமளித்தவரின் அசையா, அசையும் சொத்து கள், அவருக்கு வரவேண்டிய, அவர் கொடுக்கவேண்டிய கடன்கள் எவ்வளவு என்று கணித்துக் குறிப்பிட்ட கால வரைக்குள் நிர்ணயித்து நீதிமன்றத்திடம் சமர்ப்பிக்க வேண்டும்.

3. விருப்பாவணமளித்தவரின் சொத்துகளை ஒன்றுசேர்க் கும்போதும் கடன்களை வசூலிக்கும்போதும் நிறைவேற்றாளர் மிகுந்த கவனமுள்ளவராக இருக்கவேண்டும்.

4. பின்வரும் செலவினங்களை மேற்கொள்ளலாம்.

(அ) அவரது அந்தஸ்திற்கு ஏற்ப ஈமச்சடங்குகளுக்கான செலவு, மரணப்படுக்கையில் இருக்கும்போது ஆகிய மருத்துவச் செலவுகள், இறப்பதற்குமுன் ஒரு மாதத் திற்கு ஆகிய உணவு, விடுதிச் செலவுகளெல்லாம் முதலாவது கொடுக்கப்பட வேண்டும்.

(ஆ) பின்னர் உயில் மெய்ப்பிதழ் பெறுவதற்கான பத்திர, நீதிமன்றச் செலவுகள் கொடுக்கப்படவேண்டும்.

(இ) விருப்பாவணமளித்தவர் இறப்பதற்குமுன் மூன்று மாதங்களில் அவருக்குப் பணிவிடை செய்த பணி யாளர்கட்கான ஊதியத்தைக் கொடுக்க வேண்டும்.

(ஈ) அவர் கொடுக்கவேண்டிய எல்லாக் கடன்களையும் கொடுக்க வேண்டும்.

(உ) பின்னர் உயில்வழிக் கொடைகளைக் கொடுக்கலாம். உயில்வழிக் கொடைகளைக் கொடுக்கும்போது வரிசைக்கிரமமாகத்தான் கொடுக்கவேண்டும். பின்னர் உள்ள கொடைபெறுநருக்கு முன்னதாகக் கொடுக்க நிறைவேற்றாளருக்கு உரிமையில்லை. உயில்வழிக் கொடைகளைக் கொடுக்கும்போது முதலில் குறித்துறைக்கப்பட்ட கொடைகளையும், பின்னர்ச் சுட்டிக் காட்டும் உயில்வழிக் கொடைகளையும் பொதுத் தன்மைத்தான உயில்வழிக் கொடைகளையும் கொடுக்க வேண்டும். எல்லாக் கொடைகளையும் கொடுக்கப் போதுமான சொத்துகள் இல்லாவிட்டால் பொதுத் தன்மைத்தான உயில்வழிக் கொடைகள் விகிதப்படி கழிவுறும்.

## தான்தோன்றி நிறைவேற்றாளர் (Executor-de-son-tort)

தான்தோன்றி நிறைவேற்றாளர் என்பவர் தாமாகவே முன்வந்து நிறைவேற்றாளர் பொறுப்பினை ஏற்றுக்கொள்பவர். விருப்பாவணமளித்தவர் இவரை நிறைவேற்றாளராக நியமிக்கவில்லை. நீதிமன்றத்திடமிருந்து அதிகாரம் பெற்றவருமல்லர்; இறந்தவரின் சொத்துகளில் தலையிடுவதன்மூலம் தம்மீது நிறைவேற்றாளரின் பொறுப்பினைச் சுமத்திக்கொள்பவர். இறந்தவரின் சொத்துகளில் தலையிடும் எல்லோரையும் தான்தோன்றி நிறைவேற்றாளர் எனக் கூறிவிட இயலாது. அதற்கும் விதிவிலக்குகள் உண்டு.

இறந்தவரின் சொத்துகளைப் பாதுகாக்கவும், அவரது குடும்பத்தினருக்கு வேண்டிய உடனடித் தேவைகளைக் கவனிப்பதற்கும், இறந்தவரின் ஈமச் சடங்குகளைச் செய்யவும் முன்வருபவரைத் தான்தோன்றி நிறைவேற்றாளர் எனக் கூறவியலாது. மற்றவர்களிடமிருந்து இறந்தவருக்கு வரும் பொருள்களை நடைமுறையில் கையாளுவதில் ஒருவரைத் தான்தோன்றி நிறைவேற்றாளர் எனக் கூறவியலாது.

ஒருவர் இறந்தவரின் பொருள்களைப் பயன்படுத்தினாலோ, யாருக்காவது கொடுத்துவிட்டாலோ, விற்றுவிட்டாலோ, இறந்தவரிடமிருந்து தமக்கு வரவேண்டிய கடன்களுக்காகவோ, உயில்வழிக் கொடைக்காகவோ எடுத்துக்கொண்டாலோ, இறந்தவருக்கு வரவேண்டிய கடன்களை வசூலித்தாலோ, அவரைத் தான்தோன்றி நிறைவேற்றாளர் எனலாம்.

**அவரது பொறுப்புரிமைகள்**

தான்தோன்றி நிறைவேற்றாளர், வசத்தில் வந்த சொத்துகளுக்குக் கணக்கு ஒப்புவிக்கக் கடமைப்பட்டவர். சொத்தினை நிருவாகம் செய்வதில் ஏற்பட்ட செலவினங்களையும் நியாயப்படி அவர் செய்த செலவினங்களையும் இறந்தவரின் சொத்தினின்று எடுத்துக்கொள்ளலாம். அவர் செய்யும் எல்லாச் செய்கைகட்கும் உரிமையுடைய நிறைவேற்றாளருக்கோ நிருவாகிக்கோ பதில் சொல்லக் கடமைப்பட்டவராவர். தான்தோன்றி நிறைவேற்றாளர் வசத்திலிருக்கும் சொத்துகளின் மதிப்பீட்டளவிற்கு இறந்தவரின் கடன்காரரும், கொடைபெறுநரும் தங்களுக்குச் சேரவேண்டிய தொகைகட்காக அவர்மீது வழக்குத் தொடரலாம். தான்தோன்றி நிறைவேற்றாளருக்குப் பொறுப்புகள் இருக்கின்றனவேயன்றி எந்தவிதமான சலுகைகளும் கிடையாது.

**நிருவாகி**

ஒருவர் உயில்இல்வழியில் இறந்துபோனாலும், உயில் எழுதி வைத்து நிறைவேற்றாளரை நியமிக்காமல் இறந்துபோனாலும், அவரது சொத்துகளை நிருவகிக்கும்பொருட்டு நிருவாக உரிமைப் பத்திரமளித்து ஒருவர் நியமிக்கப்படுவார். அவரே நிருவாகி எனப்படுபவர். அவர் எல்லாச் செயலிலும் இறந்தவரின் சட்டப்படி நிருவாகியாவார். நிருவாகியை நீதிமன்றம் மட்டுமே நியமிக்கலாம். நிறைவேற்றாளர் பொறுப்பேற்க மறுக்கும்போதும் திடீரென இறந்துபோனாலும் சொத்துகளை நிருவகிக்க நிருவாகியை நியமிக்கலாம். உயிலின் நிறைவேற்றாளர் சொத்துகள் இருக்கும் மாநிலத்தைவிட்டு வேறு மாநிலத்திற்குச் சென்றுவரச் சில நாள்களாகும். சொத்துகளை அவர் கண்காணிக்கவியலாது என்ற சூழ்நிலையில் தாற்காலிகமாக ஒரு நிருவாகியை நியமிக்கலாம்.

நிறைவேற்றாளர் விருப்பாவணமளித்தவரைப்போலவே அவரது வசத்திலிருக்கும் சொத்துகளை நிருவகிக்கலாம். சொத்துகளை விற்கவும், அடைமானம் வைக்கவும் அதிகாரம் உண்டு. நிறைவேற்றாளர் தம்முடைய அதிகாரங்களனைத்தையும் உயிலினின்று பெறுகிறார். நிருவாகி எல்லா அதிகாரத்தையும் நீதிமன்றத்திடமிருந்து பெறுகிறார். நீதிமன்றத்தின் அனுமதியின்றிச் சொத்துகளை விற்கவோ, அடைமானம் வைக்கவோ, குத்தகைக்கு விடவோ அதிகாரமில்லை. நீதிமன்றத்தின் அனுமதியின்பேரில் 5 ஆண்டுகள் வரை குத்தகைக்கு விடலாம். அதற்கு அதிகமாக விடப்பட்டால்

சொத்துக்குரியவர்கள் ஒப்புக்கொண்டால்தான் அது செல்லுபடியாகும்.

**நிறைவேற்றாளருக்கும் நிருவாகிக்குமுள்ள வேறுபாடுகள்**

1. நிறைவேற்றாளர் உயிலினை உருவாக்கியவரால் நியமிக்கப்படுகிறார்.

   நிருவாகி நீதிமன்றத்தினால் நியமிக்கப்படுகிறார்.

2. நிறைவேற்றாளர் உயிலினின்று எல்லா அதிகாரங்களையும் பெறுகிறார். விருப்பாவணமளித்தவர் இறந்த நாளினின்று சொத்துகள் எல்லாம் அவரைச் சென்றடைகின்றன.

   நிருவாகி நிருவாகப் பத்திரத்தின் மூலமாக நீதிமன்றத்திடமிருந்து அதிகாரங்களைப் பெறுகிறார். அதிகாரங்களைப் பெற்றதினின்று சொத்துகள் அவரைச் சேர்ந்தடையும். உரிமையாளர் இறந்த நாளினின்று நிருவாக அதிகாரம் கொடுக்கும் வரையில் எந்தத் தவறுதலும் நடைபெறாமல் இருந்தால் அவர் இறந்த நாளினின்றே சென்றடையும்.

3. உயில் மெய்ப்பிதழ் பெறக்கூடிய உயில் நிறைவேற்றாளர் விருப்பாவணமளித்தவர் இறந்த நாளினின்று அவரது சட்டபூர்வமான பிரதிநிதியாவார்.

   நிருவாகி, நிருவாக உரிமைப் பத்திரம் அளிக்கப்பட்ட பின்னர்தான் அவர் இறந்தவரின் பிரதிநிதி.

4. நிறைவேற்றாளர் உயில் மெய்ப்பிதழ் பெறுமுன்னரே சொத்துகளின் நிருவாகத்தை மேற்கொண்டு எல்லாப் பணிகளையும் புரியலாம்.

   நிருவாகி அவ்வாறு செய்யவியலாது.

5. நிருவாகப் பத்திரம் அளிக்கப்படுமுன்னர் நிருவாகி அவரது செயலைக் கட்டுப்படுத்தி ஒரு நிருவாக முறையாவணம் (Administration Bond) என்னும் முறையாவணத்தில் கையெழுத்திட்டுக் கொடுக்கவேண்டும்.

6. விருப்பாவணமளித்தவர் இறந்த நாளினின்று ஏழு நாள்கள் சென்ற பின்னர்தான் நிறைவேற்றாளருக்கு உயில் மெய்ப்பிதழ் கொடுக்க முடியும்.

உயில்இல்வழியில் ஒருவர் இறந்த நாளினின்று பதி னான்கு நாள்கள் சென்ற பின்னர்தான் நிருவாகிக்கு நிருவாகப் பத்திரம் அளிக்கப்படும்.

7. ஒன்றுக்கு மேற்பட்ட நிறைவேற்றாளர்கள் இருப்பின் அவர்களது பொறுப்புக் கூட்டாகவும் தனித்தனியாக ஒவ்வொருவருக்கும் உண்டு. எல்லா நிறைவேற்றாள ரையும் ஒன்றுசேர்த்துத்தான் உயில் மெய்ப்பிதழ் அளிக்கப்படும்.

ஒன்றுக்கு மேற்பட்ட நிருவாகிகள் இருப்பின் அவர் களது பொறுப்புக் கூட்டானது. நடைமுறையில் எவருக்கு அதிகப் பங்குள்ளதோ அவருக்குத்தான் நிருவாகப் பொறுப்பளிக்கப்படும்.

நிறைவேற்றாளர், நிருவாகி ஆகியோரது பொறுப்புகளை எவருக்கும் மாற்றிக் கொடுக்கவியலாது. அவர்கள் இறந்து போனால் அவர்களது வாரிசுகளையும் சென்றடையாது.

### நிறைவேற்றாளர், நிருவாகியின் அதிகாரங்கள்

இறந்தவர் ஐரோப்பியர், பார்சி, இந்தியக் கிறித்தவராயின் அவர்களது அசையா, அசையும் சொத்துகளை முழுமையாகவோ பகுதியாகவோ பராதீனம் செய்ய நிறைவேற்றாளருக்கும் நிருவாகிக்கும் உரிமையுண்டு. அவர்களுக்கு அச் சொத்துகளை விற்கவோ, அடைமானம் வைக்கவோ, குத்தகைக்கு விடவோ அதிகாரம் உண்டு.

இறந்தவர் இந்துவாகவோ, மகமதியராகவோ, சீக்கிய ராகவோ, ஜைனராகவோ இருந்தால் அவர்களது நிறை வேற்றாளரை வந்தடையும் உயிலில் கண்ட சொத்துகளை உயில் மெய்ப்பிதழ் வாங்குமுன்னர் உயிலில் தடைகள் ஏதும் விதிக்காம லிருந்தால் பராதீனம் செய்ய அதிகாரமுண்டு. உயில் மெய்ப் பிதழ் வாங்கும்போது பராதீனம் செய்ய உரிமையளிக்கப் பட்டிருந்தாலும் சொத்துகளை விற்க அதிகாரமுண்டு.

நிருவாகியை வந்தடையும் இறந்தவரின் அசையாச் சொத்து களை நீதிமன்றத்தின் முன்அனுமதியின்றி விற்கவோ, பிணை பொறுப்பு ஏற்றவோ, கொடையாகக் கொடுக்கவோ, சொத்து களை மாற்றிக்கொள்ளவோ அதிகாரமில்லை. நீதிமன்றத்தின் முன்அனுமதியின்றி அச் சொத்துகளைக் குத்தகைக்கு விடவும் அதிகாரமில்லை.

# 28. வாரிசுரிமைச் சான்றிதழ் (பிரிவு 370—390)

## (Succession Certificate)

வாரிசுரிமைச் சான்றிதழ் என்னும் ஆவணம் அதனைப் பெறுபவர்க்கு, இறந்தவருக்கு வரவேண்டிய கடன்களையும், கடனீட்டுப் பத்திரங்களையும் (Securities), அவருக்கு வர வேண்டிய அனைத்தையும் அவரது பிரதிநிதியாகவிருந்து வசூலிக்கும் அதிகாரத்தைக் கொடுக்கிறது. இவ்வாவணம் கடனாளிகள் அவற்றைத் திருப்பித் தரத் தகுந்த பாதுகாப்பளிக்கிறது. இறந்தவருக்குச் சேரவேண்டிய கடன்களைக் கடனாளிகள் யாரிடம் கொடுக்க வேண்டுமென்று அறிய உதவுகிறது.

இறந்தவரின் சொத்தின்பேரில் உரிமையுடைய, திடசித்தமுடைய, வயதுவந்த எவரும் இவ்வாவணத்தைப் பெற விண்ணப்பிக்கலாம். இறந்தவர் இறக்கும் சமயத்தில் வாழ்ந்த மாவட்டத்தின் மாவட்ட நீதிபதியோ, சொத்துகளிருக்கும் மாவட்டத்தின் மாவட்ட நீதிபதியோ அச் சொத்துகளுக்கு வாரிசுரிமைச் சான்றிதழ் அளிக்கலாம். மாநில அரசினால் மாவட்ட நீதிபதியின் அதிகாரமளிக்கப்பட்ட எந்தக் கீழ்நீதிமன்றங்களும் வாரிசுரிமைச் சான்றிதழ் அளிக்கலாம். வயதுவராத ஒருவர் காப்பாளரின் மூலமாக விண்ணப்பிக்கும்போது மட்டும் வாரிசுரிமைச் சான்றிதழ் அவருக்குக் கொடுக்கப்படும்.

வாரிசுரிமைச் சான்றிதழ் கோரி விண்ணப்பிப்பவருக்கு இறந்தவரின் சொத்தின்பேரில் உரிமையுண்டு என அறிந்த பின்னர் அவ்வாவணம் அளிக்கப்படும். விண்ணப்பதாரருக்குச் சிறந்த உரிமை மூலம் இருக்கிறது எனக் கண்ட பின்னர் வாரிசுரிமைச் சான்றிதழ் அளிக்கப்படும்.

இந்தியக் கிறித்தவர்களைத் தவிர ஏனையோருக்கு வரவிருக்கும் கடன், பிணையங்களுக்கான உரிமையினை உயில்

மெய்ப்பிதழ் அல்லது நிருவாகப் பத்திரத்தின் மூலம் நிலைநாட்ட வேண்டுமாயின், அப்போது வாரிசுரிமைச் சான்றிதழ் அளிக்கப்படும்.

முன்பே அளிக்கப்பட்ட வாரிசுரிமைச் சான்றிதழோ நிருவாகப் பத்திரமோ அமலில் இருந்தால் மறுபடியும் வாரிசுரிமைச் சான்றிதழ் அளிக்கப்படாது.

**வாரிசுரிமைச் சான்றிதழ் விண்ணப்பம்**

இறந்தவருக்குச் சேரவேண்டிய எந்தக் கடனுக்காகவும், வாரிசுரிமைச் சான்றிதழ் கேட்டு விண்ணப்பிக்கலாம். அதற்கான தகவல்களைக் கொடுத்து மனு எழுதிக் கையெழுத்திட்டு நீதிமன்ற முத்திரைகளுக்கான தொகையினையும் செலுத்தி விண்ணப்பிக்க வேண்டும். மனுவில் கொடுக்கவேண்டிய தகவல்களாவன :

1. சொத்தின் சொந்தக்காரர் இறந்த நேரம்
2. அவரது இருப்பிடம்
3. உறவினர்களின் பெயரும் இருப்பிடமும்
4. விண்ணப்பதாரர் கோரும் உரிமைகள்
5. சான்றிதழ் பெறுவதற்குள்ள தடைகள்
6. சான்றிதழ் கோரும் கடன்கள், பிணைப்புகளின் விவரம்.

மேற்கண்ட தகவல்களைப் பொய்யென அறிந்து வேண்டுமென்றே கொடுத்தால், மனுதாரர் இந்தியக் குற்றவியல் சட்டம் 198ஆவது பிரிவின்கீழ்த் தண்டிக்கப்படுவார்.

ஒரு கடனை வசூலிக்கச் சான்றிதழ் பெற்ற பின்னர் வேறொரு கடனையும் இச் சான்றிதழைக் கொண்டே வசூலிக்க மாவட்ட நீதிபதிக்கு விண்ணப்பிக்கலாம்.

**வாரிசுரிமைச் சான்றிதழின் பயன்**

இறந்தவருக்குச் சேரவேண்டிய கடன் தொகைகளைத் திருப்பிக் கொடுக்கும் கடனாளிகட்கும், இச் சான்றிதழில் கண்டுள்ள பிணைப்புகளை நல்லெண்ணத்தோடு திரும்பக் கொடுக்கின்றவருக்கும் இச் சான்றிதழ் பாதுகாப்பளிக்கின்றது.

கடனாளிகட்கு முன்னிலையில் இச் சான்றிதழைப் பெற்றவர் இறந்தவரின் பிரதிநிதி என்னும் உரிமை மூலத்திற்கு அறுதிச்

சான்றாகும். இச் சான்றிதழ் பிற மாநிலத்தில் வாழ்பவருக்கும் பயன்படும்படி அனுமதிக்கப்படுகிறது.

**வாரிசுரிமைச் சான்றிதழை ரத்துச் செய்தல்**

வாரிசுரிமைச் சான்றிதழ் அளிக்கப்பட்ட பின்னர் முறைப்படி அதனைப் பெறவில்லையெனக் கண்டால் ரத்துச் செய்யலாம்.

1. தவறான முறையில் அது பெறப்பட்டிருந்தால் ரத்துச் செய்யப்படும்.

2. உண்மைக் காரணங்களை நீதிமன்றத்திடமிருந்து மறைத்துப் பொய்க் காரணங்களைக் கூறி ஏமாற்றும் நோக்கத்தோடு பெறப்பட்டிருந்தால் ரத்துச் செய்யப் படும்.

3. அறியாமையினாலோ, தவறுதலாகவோ, நியாயப்படி வாரிசுரிமைச் சான்றிதழைப் பெறப் பொய்க் காரணங் களைக் கூறிப் பெற்றிருந்தால் ரத்துச் செய்யப்படும்.

4. ஒரு சூழ்நிலையில் கொடுக்கப்பட்ட சான்றிதழ் பய னற்றோ, செயலிழந்தோபோனால் ரத்துச் செய்யப் படும்.

5. சான்றிதழில் கண்டுள்ள கடன், பிணைப்புகளைப்பற்றின வழக்கில் நீதிமன்றம் அச் சான்றிதழ் செயலிழக்கும் அல்லது மறுத்தழிக்கப்பட வேண்டுமெனத் தீர்ப்பளித் திருந்தால் அச் சான்றிதழ் ரத்துச் செய்யப்படும்.

**சான்றிதழ் எப்போது செல்லாது**

இரண்டு விதங்களில் இச் சான்றிதழ் செல்லாது :

1. ஒரு கடனுக்கு வாரிசுரிமைச் சான்றிதழ் முன்னரே அளிக் கப்பட்டு அமலில் இருந்தால், பின்னர் கொடுக்கப் பட்ட சான்றிதழ் செல்லாது.

2. இறந்தவரின் சொத்துகட்கு உயில் மெய்ப்பிதழோ நிருவாகப் பத்திரமோ அளிக்கப்பட்டு அமலில் இருந் தால், பின்னர்க் கொடுக்கப்பட்ட வாரிசுரிமைச் சான்றிதழ் செல்லாது.

# பின்னிணைப்புப் பட்டியல் — I

## பகுதி I (பிரிவு 28)

### குருதித் தொடர்புடைய உறவினர் அட்டவணை



# பின்னிணைப்புப் பட்டியல் — II

## பகுதி I (பிரிவு 54)

1. தந்தையும் தாயும்.

2. சகோதர சகோதரிகளும் (தாய்வழிச் சகோதர சகோதரி களைத் தவிர) அவர்களது வழித்தோன்றல்களும் உயில் இல்வழியில் இறந்தவருக்கு முன்பே இறந்துபோனவர் களையும் சேர்த்து.

3. தந்தைவழிப் பாட்டன் பாட்டி.

4. தந்தைவழிப் பாட்டனின் பிள்ளைகளும் அவர்களது வழித்தோன்றல்களும். உயில்இல்வழியில் இறந்த வருக்கு முன்பே இறந்துபோனவர்களையும் சேர்த்து.

5. தந்தைவழிப் பாட்டனின் தந்தையும் தாயும்.

6. தந்தைவழிப் பாட்டனின், தந்தையின் பிள்ளைகளும், அவர்களின் வழித்தோன்றல்களும். உயில்இல்வழியில் இறந்தவருக்கு முன்பே இறந்துபோனவர்களையும் சேர்த்து.

## பகுதி II (பிரிவு 55)

1. தந்தையும் தாயும்.

2. சகோதர சகோதரிகளும் (தாய்வழிச் சகோதர சகோதரி களைத் தவிர) அவர்களது வழித்தோன்றல்களும். உயில் இல்வழியில் இறந்தவருக்கு முன்பே இறந்துபோனவர் களையும் சேர்த்து.

3. தந்தைவழிப் பாட்டன் பாட்டி.

4. தந்தைவழிப் பாட்டனின் பிள்ளைகளும், அவர்களது வழித்தோன்றல்களும் உயில்இல்வழியில் இறந்தவருக்கு முன்பே இறந்துபோனவர்களையும் சேர்த்து.

5. தந்தைவழிப் பாட்டனின் தந்தையும் தாயும்.

6. தந்தைவழிப் பாட்டனின் தந்தையின் பிள்ளைகளும் அவர்களின் வழித்தோன்றல்களும்-உயில்இல்வழியில் இறந்தவருக்கு முன்பே இறந்துபோனவர்களையும் சேர்த்து.

7. தாய்வழிச் சகோதர சகோதரிகளும், அவர்களது வழித்தோன்றல்களும், உயில்இல்வழியில் இறந்தவருக்கு முன்பே இறந்துபோனவர்களையும் சேர்த்து.

8. தாய்வழிப் பாட்டன் பாட்டி.

9. தாய்வழிப் பாட்டனின் பிள்ளைகளும், அவர்களது வழித்தோன்றல்களும், உயில்இல்வழியில் இறந்தவருக்கு முன்பே இறந்துபோனவர்களையும் சேர்த்து.

10. சகோதரர், பகுதிச் சகோதரர்களின் (Half brothers) விதவைகள்.

11. தந்தைவழிப் பாட்டனின் மகனின் விதவை.

12. தாய்வழிப் பாட்டனின் மகனின் விதவை.

13. உயில்இல்வழியில் இறந்துபோனவரின் வாழ்நாளில் மறுமணம் செய்துகொள்ளாத அவரது இறந்துபோன வழித்தோன்றல்களின் விதுரன்கள்.

14. தாய்வழிப் பாட்டனின் தந்தையும் தாயும்.

15. தாய்வழிப் பாட்டனின் தந்தையின் பிள்ளைகளும் அவர்களது வழித்தோன்றல்களும் — உயில்இல்வழியில் இறந்தவருக்கு முன்பே இறந்துபோனவர்களையும் சேர்த்து.

16. தந்தைவழிப் பாட்டியின் பிள்ளைகளும், அவர்களது வழித்தோன்றல்களும் — உயில்இல்வழியில் இறந்தவருக்கு முன்பே இறந்துபோனவர்களையும் சேர்த்து.

17. தந்தைவழிப் பாட்டியின் தந்தையும் தாயும்.

18. தந்தைவழிப் பாட்டியின் தந்தையின் பிள்ளைகளும் அவர்களது வழித்தோன்றல்களும் — உயில்இல்வழியில் இறந்துபோனவருக்கு முன்பே இறந்துபோனவர்களையும் சேர்த்து.

# கலைச்சொற்கள்

## A

Abatement — அறவு, அகற்றல்
Abeyance — உரியவர் இலாநிலை
Acceleration — உரிமை விரைவு
Acquisition — பெறுதல்
Ademption — வறிதாக்கல்
Administrator — நிருவாகி
Ambassador — தூதுவர்
Ambiguity — ஐயப்பாடு
Ancestor — மூதாதையர்
Animus — நோக்கம்
Animus Revocandi — அழிக்கும் நோக்கம், ரத்துச் செய்யும் வழக்கம்
Animus Testandi — உயிலாக்கும் நோக்கம்
Apportionment — விகிதப் பகிர்வு
Ascendents — மூதாதையர், ஏறுமுறை உறவினர்
Attestation — சான்றொப்பமளித்தல்
A ttestor — சான்றொப்பமளிப்பவர்

## B

Beneficial Enjoyment — பயன் நுகர்ச்சி
Beneficiary — பயனாளி
Benefit — பயன், அனுகூலம்
Bequ est — விருப்பாவணக் கொடை

Bequest in Alternative — இரண்டில் ஒன்றான கொடை
Bequest of Annuity — ஆண்டுப் பணக்கொடை
Bill of Exchange — மாற்றுச்சீட்டு

## C

Cause of Action — வழக்குமூலம்
Charge — பொருட்பிணைப் பொறுப்பு
Chose in Action — வழக்குரிமை பொருள்
Citizenship — குடியுரிமை
Class Gift — வகுப்பினருக்கான கொடை
Codicil — உயில் இணைப்பு
Coercion — வலுக்கட்டாயம்
Collateral Consanguinity — கிளைவழி இரத்த உறவு
Collaterals — உடன்பிறப்புகள்
Common Ancestor — பொதுவான மூதாதையர்
Compensation — இழப்பீடு
Conditional Bequest — நிபந்தனைக் கொடை
Condition Precedent — முன் நிபந்தனை
Condition Subsequent — பின் நிபந்தனை
Consanguinity — இரத்த உறவு
Consul — நாடு கடந்த வணிகக் காவலர்
Contingent Bequest — வருநிகழ்வடை கொடை
Coparcerner — உடன் பங்குரிமையர்
Cousin Germane — ஒன்றுவிட்ட சகோதரன் (அ) பெற்றோரின் உடன்பிறந்தவரின் மகன்
Cypres Doctrine — சிப்ரே தத்துவம் (அ) இயன்ற வரை நிறைவேற்றல் தத்துவம்

## D

Declaration — விளம்பல்
Degree — தலைமுறைப்படி
Delerium Tremens — அதிகக் குடியினால் ஏற்படும் மூளைக் கோளாறு

Demonstrative Legacy — சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடை

Descendents — வழித்தோன்றல்கள்

Desertion — புறக்கணித்தல்

Doctrine of Acceleration — உரிமை வரைவு தத்துவம்

Doctrine of Dependent Relative Revocation — முதல்நிலை உயிலைத் தழுவிய ரத்துச்செய்யும் தத்துவம்

Doctrine of Election — தேர்ந்துகொளல் வரைவுக் கோட்பாடு

Doctrine of Incorporation — கூட்டிணை தத்துவம்

Doctrine of Survivorship — எஞ்சுநர் உரிமைத் தத்துவம்

Document — ஆவணம்

Domicile — வாழ்வகம்

Domicile by Choice — தேர்ந்தெடுத்த வாழ்வகம்

Domicile by Operation of Law — சட்டத்தின் வாயிலாகப்பெற்ற வாழ்வகம்

Domicile of Origin — முதல் நிலை வாழ்வகம்

Donatio Mortis Causa — மரணத்தை எதிர்நோக்கியுள்ளவர் அளிக்கும் கொடை

Donee — கொடைபெறுநர்

Donor — கொடையாளி

Draft — முன்வரைவு

## E

Encumbrance — வில்லங்கம்

Endorsement — மேல் கையொப்பம்

*En Ventre Sa Mere* — கருநிலைக் குழந்தை

Equivocation — இருபொருள் குறித்தல்

Evidence — சாட்சியம்

Executant — ஆவணத்தை உருவாக்குபவர்

Execute — நிறைவேற்றல், கையொப்பம், செயல்படுத்தல்

Executo De Son Tort — தான்தோன்றி நிறைவேற்றாளர்

Executor — நிறைவேற்றாளர்

Extrinsic Evidence — புறம்பான சாட்சியம்

F

Family Arrangement — குடும்ப ஏற்பாடு
Full Blood — முழுக் குருதித்தொடர்பு

G

General Legacy — பொதுத்தன்மை உயில்வழிக் கொடை
Generation — தலைமுறை
Gift — கொடை
Gift Over — மாற்றுக்கொடை
Guardian — காப்பாளர்

H

Half Blood — பகுதி குருதித் தொடர்பு
Heir — வாரிசு
Heriditory — பரம்பரை, வம்சவழி

I

Illegitimacy — முறையிலா மணப்பிறப்பு
Immovable Property — அசையாச் சொத்துகள்
Inheritance — மரபுமுறை இறங்குரிமை
Insane — சுவாதீனமற்றவர்
Insure — காப்பீடு
Intenstate Succession — உயில்இல்வழி வாரிசுரிமை

J

Joint Family Property — கூட்டுக் குடும்பச் சொத்து
Joint Tenance — கூட்டுச் சொத்து
Judicial Separation — தீர்ப்புவழிப் பிரிந்து வாழ்தல்

K

Kindred — வழித்தோன்றலன்றி மற்ற இரத்த உறவினர்

## L

| | |
|---|---|
| Lapse | — கழிவுறுதல் |
| Latent Ambiguity | — உட்கிடை ஐயப்பாடு, மறைமுக ஐயப்பாடு |
| Legacy | — உயில்வழிக்கொடை |
| General Legacy | — பொதுத்தன்மை உயில் வழிக் கொடை |
| Specific Legacy | — குறித்துரைக்கப்பட்ட உயில் வழிக் கொடை |
| Demonstrative Legacy | — சுட்டிக்காட்டும் உயில்வழிக் கொடை |
| Legal Representative | — சட்டப்படி பிரதிநிதி |
| Legatee | — கொடைபெறுநர் |
| Legitimatation Per Subsequens Matrimonium | — மறுமணவழி முறையாக்கல் |
| Legitimacy | — முறைமணப்பிறப்பு |
| Letters of administration | — நிருவாக உரிமை பத்திரம் |
| Lex Loci | — தலச்சட்டம் |
| Life Interest | — ஆயுள் பாத்தியம் |
| Lunacy | — பித்துநிலை |
| Lunatic | — பித்துபிடித்தவர் |

## M

| | |
|---|---|
| Maintenance | — வாழ்க்கை படி |
| Major | — உரிய வயது வந்தவர் |
| Majority | — உரிமை வயது |
| Marriage | — திருமணம் |
| Maternal Grand Father | — தாய்வழிப் பாட்டன் |
| Migration | — நாட்டுப்பெயர்ச்சி |
| Minor | — இளவர், வயதுவராதவர் |
| Movable Property | — அசையும் சொத்துகள் |

## N

| | |
|---|---|
| Nationality | — நாட்டுரிமை |
| Negotiable instrument | — மாற்று முறையாவணம் |
| Net Estate | — நிகர சொத்து |

## O

| | |
|---|---|
| Onerous Bequest | — சுமை சார்ந்த உயில்வழிக் கொடை |

## P

| | |
|---|---|
| Parole Evidence | — வாய்மொழி சாட்சியம் |
| Partial Restraint | — பகுதியளவுத் தடை |
| Partition | — பாகப்பிரிவினை |
| Patent Ambiguity | — புலப்படும் ஐயப்பாடு |
| Paternal Grand Father | — தந்தைவழிப் பாட்டன் |
| Per Capita | — தலைவிகிதம் |
| Personal Law | — இனமுறைச் சட்டம் |
| Per Stirps | — கிளை விகிதம் |
| Possession | — உடைமை |
| Power of Appointment | — நியமன அதிகாரம் |
| Predeceased | — முன்பே இறந்துபோன |
| Prepositus | — சொத்துகளை விட்டு இறந்தவர் |
| Presumption | — துணிபு |
| Previleged will | — தனிச்சலுகை உயில் |
| Probate | — உயில் மெய்ப்பிதழ் |
| Promissory Note | — கடனுறுதிச் சீட்டு |

## R

| | |
|---|---|
| Remainder | — எஞ்சுரிமை |
| Representation | — பிரதிநிதித்துவம் |
| Republication | — மறுவெளியீடு |
| Residuary Legatee | — எஞ்சிய கொடை பெறுநர் |
| Resjudicata | — முன்தீர்ப்புத் தடை |
| Revival | — புதுப்பித்தல் |
| Revocation | — தள்ளுபடி செய்தல் |
| Rule Against Double Portion | — இருபங்குகட்கு எதிர்விதி |
| Rule Against Perpetuity | — வரையிலா நிலைக்கு எதிர்விதி |
| Rule of Ejusdem Generis | — இனங்கொளல் விதி |

## S

Schedule — பின்னிணைப் பட்டியல்
Second Cousin — இரண்டுவிட்ட சகோதரன்
Securities — கடனீட்டுப் பத்திரங்கள்
Share — பங்கு
Solicitor — சட்ட முகவர்
Specific Legacy — குறித்துரைக்கப்பட்ட உயில் வழிக்கொடை
Spes successionis — எதிர்நோக்கு இறங்குரிமை
Statute of Fraud — மோசடி சட்டம்
Stepfather — தாயின் கணவன் (அ) மாற்றுத் தந்தை
Stepmother — மாற்றாந்தாய்
Stepson — கணவன் (அ) மனைவியின் மகன்
Substantive Law — நிலைமுறைச் சட்டம்
Succession — உரிமை இறக்கம், வாரிசுரிமை
Succession Certificate — வாரிசுரிமைச் சான்றிதழ்
*Sui Juris* — தன்னிச்சையாளர்
Survivorship — எஞ்சுநர் உரிமை
Symbolic Partition — அடையாள பாகப்பிரிவினை

## T

Tenancy in Common — பொதுநிலச் சொத்துரிமை
Testament — விருப்பாவணம்
Testamentary Guardian — விருப்பாவணக் காப்பாளர்
Testamentary Succession — விருப்பாவண வாரிசுரிமை
Testator — விருப்பாவணமளித்தவர்
Title — உரிமைமூலம்
Title Deed — உரிமை ஆவணம்

## U

Unborn Person — பிறவா நபர்
Universal Donee — முழுதளாவிய கொடைபெறுநர்

Universal Legatee — முழுதளாவிய உயில்வழி உரிமையர்
Uterine Brother — தாய்வழிச் சகோதரன்

## V

Vested Interest — சேர்ந்தடை உரிமை
Vested Remainder — சேர்ந்தடை எஞ்சுரிமை
Vesting of Legacy — கொடை சென்றடைதல்
Void Bequest — விழலாகும் கொடை
Void Marriage — செல்லாத் திருமணம்

## W

Ward — காப்புநர்
Widow — விதவை
Widower — விதுரன்
Will — உயில், விருப்பாவணம்
 Conditional Will — நிபந்தனை உயில்
 Holograph Will — உரியவர் கையெழுத்து ஆவண உயில்
 Inofficious Will — பணிக்கடனற்ற உயில்
 Joint Will — இணை உயில்
 Mutual Will — பரஸ்பர உயில்
 Nuncupative Will — விருப்பாவண வாய்மொழி உயில்
 Oral Will — வாய்மொழி உயில்

# வழக்குப் பட்டியல்